# மனச் சிமிழ்

வீர. பழனியப்பன்




14, உஸ்மான் ரோடு, :: சென்னை-17.

## இந்நூல் பற்றி

வீர. பழனியப்பன் அவர்கள் எண்ணிறந்த கதைகள் எழுதியுள்ளார். சமீபத்தில் நடந்த சிறுகதைப் போட்டி ஒன்றில் முதற்பரிசு பெற்றுள்ளார். முற்போக்கு எண்ணம் கொண்டவர். லாகவமான தமிழ் நடையையும், அதே சமயம் ஆணித்தரமாக விஷயங்களை எடுத்துச் சொல்வதையும், கதைகளின் பாத்திரப் படைப்புக்கு ஏற்ப குண நலன்களையும் அவரது கதைகளைப் படிக்கும்போது நீங்கள் காணலாம்.

இக் கதையில் வரும் விஜயன் ஓர் ஓவியன். உலக ஓவியப் போட்டியில் பங்குகொள்ளும் ஆசையை உண்டாக்கினன் நாராயணன், அந்த அளவுக்கு அவனது கலை பற்றி நம்பிக்கை உடையவன். காவேரி அவன் மனைவி. கலைக்கு உறுதுணை. நண்பன் நாராயணன் விஜயனிடம் பற்றும், பாசமும் கொண்டவன்.

அனுராதா அவன் 'நண்பி'. இறுதிவரை அவனுடன் இருந்து உதவி புரிபவள்.

''சேற்றிலே செந்தாமரை இருக்கும்''

''வண்டுக்கு தேனை அளித்து விட்டு, எச்சில் பாண்டமாக ஆதவனைப் பார்த்து ஏங்கிக் கொண்டிருக்கலாம்; கூம்பி மடியலாம்.'' —என்பன போன்ற கலை நுட்பங்களை எடுத்தாள்வதில் ஆசிரியர் வெற்றி பெற்றுள்ளார். ஆங்காங்கே செட்டி நாட்டு வாடை இருக்கும்.

படித்து ரசியுங்கள்.

புத்தகம் பற்றி எங்களுக்கு எழுதுங்கள்.

ச. சொக்கலிங்கம்.

# மனச்சிமிழ்

## 1. அகில உலக சித்திரப்போட்டி

விஜயன் சிந்தனையில் ஆழ்ந்தவனாக அறைக்குள் அமர்ந்திருந்தான். காவேரி புத்தாடை 'சரசரக்க' கையிலே காப்பிக் கோப்பையை ஏந்தியவாறு உள்ளே நுழைந்தாள். விஜயனோ அவள் உள்ளே நுழைந்ததைக் கவனிக்கவே இல்லை!

காவேரி ஒருமுறை அவனை ஏறிட்டுப் பார்த்தாள். அவனுடைய நெற்றியிலே ஊசலாடிக்கொண்டிருந்த சுருண்ட கேசக் கற்றையும், விழியிலே கவிந்து இருந்த 'கிறக்கமும்', உதடுகளிலே நெளிந்துகொண்டிருந்த 'புன்முறுவலும்' அவன், கற்பனை உலகிலே சஞ்சரிக்கிறான் என்பதை அவளுக்கு உணர்த்தின. அவள் ஓசைப்படாமல் காப்பிக் கோப்பையை மேஜையின்மீது வைத்துவிட்டுத் திரும்பினாள்.

பூனைபோல மெல்ல நடந்து அறைக் கதவருகில் வந்தாள்.

"விஜயா..."— வெளியில் இருந்து ஒரு குரல் கேட்டது.

"ஏன் அண்ணா?"— காவேரி வேகமாக வெளிவாசல் நோக்கி ஓடினாள்; விஜயன் சிந்தனை கலைந்து நிமிர்ந்து உட்கார்ந்தான்.

"ஏன் அம்மா விஜயன் உள்ளே இருக்கிறானா?"

"உள்ளேதான் இருக்கிறார்!"—காவேரியின் சிரிப்பு, பேச்சைத் தொடர்ந்து கேட்டது.

'தடதட' வென்று எழும்பிய காலடியோசை விஜயனின் அறையை நெருங்கியது.

ம. 1—427

"வா நாராயண்!"— விஜயன் அழைத்தான். நாராயணன் உள்ளே வந்தான். நாராயணன் மிகவும் உரிமையோடு விஜயனுக்குப் பக்கத்தில் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு அமர்ந்தான்.

"விஜயா, இன்றைய பேப்பரைப் பார்த்தாயா?"

"இல்லையே! என்ன விசேஷம்?"

"அட பழி! நீ எதற்கு சித்திரக்காரனாக இருக்கிறாய்?" —நாராயணன் உரக்கச் சிரித்தான். அந்தச் சிரிப்பிலே ஒரு ஏளனம் கவிந்து இருந்தது. விஜயன் ஒன்றும் புரியாமல் ஆச்சர்யத்தோடு அவனைப் பார்த்தான்.

"ஒரு பெரிய சித்திரப் போட்டி அமெரிக்காவிலே நடத்துகிறார்கள். அந்தப் போட்டியில் முதல் இடத்தைப் பெறும் சித்திரக்காரனுக்கு 'ஐயாயிரம் டாலர்' பரிசு! இன்றைய தினம் அதைப்பற்றிய விளம்பரம் வந்திருக்கிறது."

விஜயன் மெல்லச் சிரித்துக்கொண்டான்.

"ஏன் நாராயண்! இந்த விளம்பரத்தைப் பார்க்காதவன் சித்திரக்காரனாகவே இருக்கக்கூடாதா?"— அவன் பேச்சில் 'கேலி' மிதந்தது.

"உன்னிடத்திலே இதை வந்து சொன்னேன், பார்!... நான் ஒரு வடிகட்டின முட்டாள்!" நாராயணனின் முகம் ஆத்திரத்தால் சிவந்தது; கோபமாக எழுந்தான்.

"என்ன அண்ணா, அதற்குள்ளே கிளம்பிவிட்டீர்கள்?" என்று கேட்டுக்கொண்டே காவேரி உள்ளே நுழைந்தாள். அவள் கையிலே இரண்டு கோப்பையில் 'காப்பி' ஆவி பறந்து கொண்டிருந்தது.

"காவேரி...எல்லாம் வழக்கப்படி வரும் கோபம்தான்!" — விஜயன் மெல்லச் சிரித்தான்.

"என்ன, கோபமா?" அவள் நாராயணன் பக்கம் திரும்பிப் பார்த்தாள்; அவன் 'மெல்ல' அசட்டுச் சிரிப்பு சிரித்தான்.

"என்ன அண்ணா, கோபம்?"

"ஒன்றுமில்லையம்மா! ......ஹூம்...நல்லதைச் சொன்னால் கூட அதை எடுத்துக்கொள்ள ஒரு ஞானம் வேண்டுமல்லவா? அதுதான் இவனிடத்திலே பூஜ்யமாக இருக்கிறதே!"— அவள் குரலில் ஒரே சலிப்பு!

"சரி! என்ன நடந்தது என்று உட்கார்ந்துதான் சொல்லுங்களேன்!"

நாராயணன் 'மகுடிக்குக் கட்டுப்படும் நாகம் போல' அடங்கி அமர்ந்தான். விஜயன் அவனைப் பார்த்து உடல் குலுங்கச் சிரித்தான். நாராயணன் அவனை ஆத்திரமாகப் பார்த்தான்.

"நீங்கள் கொஞ்சம் சும்மா இருங்கள்!" காவேரி விஜயனை அடக்கிவிட்டு, "நீங்கள் சொல்லுங்கள் அண்ணு..." என்று நாராயணனிடம் கேட்டாள்.

"நான் என்ன சொல்வது? 'ஐயாயிரம் டாலர்' பரிசு கொடுக்கப்போவதாக ஒரு சித்திரப்போட்டி விளம்பரப் படுத்தப்பட்டிருந்தது. அந்தப் போட்டியில்கலந்து கொள்ளச் சொல்லி இவனிடம் சொன்னேன். இந்த துரைக்கு அது பிடிக்க வில்லை!"— நாராயணன் சலிப்போடு சொன்னுன்.

"நீங்கள் அந்தப் போட்டியில் கலந்துகொண்டால் என்னவாம்?" காவேரி விஜயனிடம் கேட்டாள்.

"நான் அந்தப் போட்டியில் கலந்துகொள்ளமாட்டேன் என்று எப்போது சொன்னேன் என்பதை அவனிடமே கேள், காவேரி!"

காவேரி நாராயணன் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அவன் கோபமாக ஏதோ சொல்ல வாயெடுத்தான்.

"அண்ணு! அதுதான் அவர் போட்டியில் கலந்துகொள்கிறேன் என்று சொல்லிவிட்டாரே...அப்புறம் எதற்கு நீங்கள் கோபப்படுகிறீர்கள்?" அவள் சிரித்தாள்.

"நீ போம்மா! பேச ஆரம்பிக்கும்போது எனக்குச் சாதகமாகப் பேசுவதுபோல காட்டிவிட்டு, கடைசியிலே உன் கணவனுக்கு ஒத்தாசையாகத்தானே முடிக்கிருய்?" அவன் பொய்யாகச் 'சிணுங்குவது' போல காட்டிக்கொண்டாலும் முகத்தில் மட்டும் ஒரு பெருமிதம் பரவிக்கிடந்தது.

காவேரி சிரித்தாள்.

"அண்ணு! காப்பி ஆறுகிறது. அடுத்த சண்டையை காப்பியைக் குடித்துவிட்டு 'தெம்பாக' ஆரம்பிக்கலாம்!"

விஜயன் 'கலகல' வென்று சிரித்தான்.

நாராயணன் காப்பிக் கோப்பைகளைப் பார்த்தான். இரண்டுதான் இருந்தன!

"ஏன் அம்மா...உனக்குக் காப்பி எங்கே?"

"நான் குடித்துவிட்டேன், அண்ணு!"

"பொய் சொல்லாதே, அம்மா! அப்புறம் எனக்குக் கெட்ட கோபம் வந்துவிடும்! நீயாவது இவன் காப்பி குடிப்பதற்கு முன்பு, குடிப்பதாவது! எல்லாம் எனக்குத் தெரியும். நான் வந்துவிட்டேன் என்று உன்னுடைய 'காப்பி'யை கொண்டு வந்துவிட்டாயா?"

காவேரி ஒன்றும் பேசாமல் மௌனமாக இருந்தாள்.

"ஹூம்ம்...தியாக உணர்ச்சியும், விருந்தோம்பலும் நல்லவைகள்தான்! ஆனல் அவைகள் பொருளோடு இருக்க வேண்டும். அதற்கு வேண்டிய புத்திசாலித்தனத்தை நமது பெண்கள் இழந்துவிடுவது மிகவும் வேதனையாக இருக்கிறது. இந்த ஒரு காரணத்தினலே அவர்கள் ஏமாளிகளாக ஆக்கப் பட்டு விடுகிறுர்கள்!"

"அப்பா நாராயணு...முடிந்ததா உன் பிரசங்கம்! இந்த ஒருவேளை, காப்பி குடிக்காவிட்டால் குடியா முழுகிப் போய்விடும்?"

"ரொம்ப புத்திசாலித்தனமாகப் பேசி விட்டதாக நினைப்போ? அய்யோ! சூழ்நிலைகள் காரணமாக பழக்கங்கள் உருவாகின்றன. பழக்கங்கள்தான் நடைமுறைக்கு உருவம் கொடுக்கின்றன. அதனல்தான் பழக்கங்களைப்பற்றி எச்சரிக்கையாக இருக்க வேண்டும், என்கிறேன்! ஏன் தம்பி... நான்தான் ஒன்று கேட்கிறேனே, இருக்கிற காப்பியை மூன்று பேரும் பகிர்ந்து சாப்பிட்டால் என்ன?"— அவன் 'கேலியாக' சொன்னுன்.

"சரி! உன் இஷ்டப்படியே செய்!"— விஜயன் சிரித்தான்.

"நீ சொன்னுலும், சொல்லாவிட்டாலும் நான் அதைத் தான் செய்வேன்! இனிமேல் நீ இதுபோல பைத்தியக்காரத் தனமாக நடக்காதே அம்மா! உன்னைப்போன்ற பெண்களிடத்திலே இதுபோன்ற சில பலஹீனங்கள் இருப்பதினல் தான், இவனைப்போன்றவர்கள் உங்களை தலைகளுக்கு நல்ல 'இலட்சியக் குல்லாய்களாக' தைத்துப் போட்டு ஏமாற்று

வதற்கு வசதி ஏற்பட்டு விடுகிறது!" நாராயணன் அந்த இரண்டு கோப்பைக் காப்பிகளையும் மூன்றாகப் பிரிப்பதில் முனைந்தான். காவேரி சிரித்துக்கொண்டு இருந்தாள்.

'காப்பிக் கட்டளை' ஒருவாறு முடிந்தது! மீண்டும் பேச்சு ஆரம்பமாகியது.

"விஜயா! இந்த சித்திரப் போட்டியிலே பல நாட்டுக் காரர்கள் கலந்துகொள்ளுவார்கள்—பலவகையான சிறந்த சித்திரங்கள் இந்தப் போட்டிக்கு வரலாம்...ஆகையால் நீ அனுப்பும் சித்திரத்தை மிகவும் உயர்ந்ததாக எழுதியனுப்ப வேண்டும்! அதிலே மிகவும் கவனம் எடுத்துக்கொள்!" -நாராயணன்தான் பேச்சை ஆரம்பித்தான்.

"புத்தி...!" விஜயன் சிரித்துக்கொண்டே கன்னத்தில் போட்டுக்கொண்டான். அவன் முகத்திலே ஒரு 'கேலி' மின்னலிட்டுக்கொண்டு இருந்தது. நாராயணன் அவனை வெறிக்கப் பார்த்தான்.

"இது என்ன விளையாட்டு?"— காவேரி விஜயனிடம் கடுமையாகக் கேட்டாள்.

"இப்போது விளையாடுவது நானல்ல...நீங்கள் இருவரும் தான்!"— விஜயன் சிரித்துக்கொண்டே சொன்னான்.

"விஜயா...நான் சொல்வதெல்லாம் உனக்கு விளையாட்டாகவா இருக்கிறது?" 'நாராயணன் ரோஷத்தோடு' கேட்டான். அவன் முகம் கோபத்தால் சிவந்தது.

"நாராயணா! உன்னிடம் இந்தக்கோபம் இருக்கிறவரையில் நீ பிறரைப் புரிந்துகொள்வது 'குதிரைக் கொம்பு'தான்! இதை நான் சொன்னாலும் உனக்குக் கோபம் வந்துவிடும். ஆனால் சொல்லாமலும் இருக்க முடியவில்லை!" விஜயன் மிகவும் நிதானமாகச் சொன்னான். நாராயணன் சற்று யோசனையில் ஆழ்ந்தான். பின்னர் பெருமூச்செறிந்தான்.

"விஜயா! நீ என் கோபத்தை வேறுவிதமாக அர்த்தம் செய்துகொண்டு பேசுகிறாய். எனக்குக் கோபம் அடிக்கடி வருவது என்னவோ உண்மைதான்! ஆனால் என் கோபம் நல்லெண்ணத்தின்மீது உண்டாவது என்பதை மாத்திரம் மறந்துவிடாதே!"

விஜயன் மெல்லச் சிரித்தான்.

"அதை நான் நன்ருகத் தெரிந்து வைத்திருப்பதினுல் தான், உன் கோபத்தை பொறுத்துக்கொண்டும், ரசித்துக் கொண்டுமிருக்கிறேன். ஆனுல் நீதான் என்னைப் புரிந்து கொள்ளவில்லை!"

நாராயணன் பதில் ஒன்றும் சொல்லவில்லை!

"ஏன் நீங்கள்தான் அண்ணுவுக்கு அதைக் கொஞ்சம் புரியச் சொல்லுங்களேன்!"— காவேரி சிரித்துக்கொண்டே கேட்டாள். நாராயணன் மகிழ்ச்சி பொங்க காவேரியைப் பார்த்தான். அவளுடைய சாதுரியமான எதிர் கேள்வி அவனை, அவளிடம் நன்றி செலுத்தும்படி தூண்டியது!

"சரியான கேள்வி அம்மா!...புரியாதவனை, புரியாதவனுக வைத்துக்கொண்டே தாங்கள் புத்திசாலிகளாக வாழும் 'சுயநல வேதாந்த மனப்பான்மை'க்கு நல்ல சூடு அம்மா!" நாராயணன் கைகளைக் கொட்டிக் கொண்டு சிரித்தான். அவன் குழந்தைபோல கெக்கெலியிட்டு, கைகொட்டி சிரிப்பதை காவேரி வேடிக்கையாகப் பார்த்துக்கொண்டு நின்ருள். விஜயன் மெல்ல அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

"நாராயணு! நீ ரொம்ப வேடிக்கையானவனப்பா...! அழுதுகொண்டு இருக்கும்போதே சிரிப்பது குழந்தைகளாலே தான் முடியும் என்று எண்ணியிருந்தேன்! அதை உன்னுலும் செய்ய முடியும் என்று காட்டிவிட்டாயே!"

"விஜயா......அதுதான் என்னுடைய உண்மையான இயல்பு! ஒழுங்கை ரசிக்கும்போது நான் குழந்தையாகி விடுவேன்—ஒழுங்கை கடைப்பிடிக்கும்போது நான் பட்டாளத்து வீரஞக இருப்பேன்—ஒழுங்கை பிறருக்குச் சொல்லிக் கொடுக்கும்போது நான் பழைய காலத்து பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்போல கையிலே பிரம்பையும், பேச்சிலே கடுமையும் வைத்துக் கொள்ளுவேன். இதுதான் என் பழக்கம்!"

"ஒழுங்கை நீ பிறருக்குப் போதிக்க வரும்போது உன்னிடம் போதனை பெறுபவர்களின் மன இயல்பைப் புரிந்து கொள்ளாமல் நீ போதிக்க ஆரம்பித்து விடுகிருய்! எல்லோரும்—உன்னிடம் போதனை பெறும் எல்லோரும்— பழையகாலத்து பள்ளிக்கூடத்துக் குழந்தைகள் அல்ல—

பயத்திலே பாடம் கற்றுக் கொள்வதற்கு!...நானே இருக்கிறேன். நான் அழகிலே ஒழுங்கைக் காண்பவன். நீ என்னிடத்தில் போதனை செய்ய வரும்போது, அழகோடு போதனை செய்தால்தான் என் மனம் அந்த ஒழுங்கை ஏற்றுக் கொள்ளும். நீ என்னிடத்தில் கோபத்தைக் காட்டி பயமுறுத்தி போதனை செய்தால்...உன்னுடைய போதனை...... இஹ்ஹிஹ்ஹிம்...''— விஜயன் கேலியாகச் சிரித்தான்.

''விஜயா! அழகு என்பதே பழக்கங்கள் மனதிலே உருவாக்கி வைத்திருக்கும் ஒழுங்குதான்! மன ஒழுங்குக்கு வேண்டுமானால் இனிமையான முறையில் போதனை செய்வது நல்லதாக இருக்கலாம். ஆனால், செயல் ஒழுங்குக்கு அந்த முறை பயன் தராது! செயல் — என்பதே கடுமையான உழைப்புத்தான்! கடுமையான உழைப்பை இனிமைப் படுத்துகிறேன் என்று முயற்சி செய்தால் செயலே குழப்பமானதாகப் போய், பொருளற்றதாகிவிடும்! நான் சொல்லுவதெல்லாம் சிந்தனை ஒழுங்கைப் பற்றியல்ல — செயல் ஒழுங்கைப்பற்றியேதான்! அதனால்தான் நான் கடுமையாகவும், கண்டிப்பாகவும் பேசுகிறேன்!''

''அண்ணா இப்போது நீங்கள் இருவரும் பேசிக்கொள்வதைப் பார்த்தால் எனக்கென்னமோ சிரிப்புத்தான் வருகிறது!.. சித்திரப் போட்டியில் இவரைக் கலந்துகொள்ளச் செய்யவேண்டும் என்பதுதானே உங்களுடைய நோக்கம்! அந்த நோக்கத்துக்கும் இப்போது நீங்கள் ஒழுங்கைப்பற்றி விவாதித்துக் கொண்டிருப்பதற்கும் என்ன சம்பந்தமிருக்கிறது?''

''உனக்கு எப்போதும் காரியத்திலேயே கண், அம்மா! இவன் எப்போதுமே இப்படித்தான்...! ஏதாவது ஒன்றைப் பற்றி பேசிக்கொண்டு இருக்கும்போது அதற்குக் கிளையாக இன்னொன்றை உண்டாக்கி, அந்தப் போக்கிலேயே என்னை இழுத்துச் சென்று, வேறு சம்பந்தமில்லாத இடத்தில் கொண்டுபோய் நிறுத்தி விடுகிறான்...''—அவன் முகத்திலே மகிழ்ச்சி கும்மாளமிட்டுக் கொண்டிருந்தது.

காவேரி மெல்ல விஜயனருகில் சென்று நின்றாள்.

"உங்களுக்கு இந்தச் சித்திரப் போட்டியில் கலந்து கொள்வதில் ஆசையிருக்கிறதா, இல்லையா என்பதை முடிவாகச் சொல்லி விடுங்களேன்!"

"காவேரி...அது...!?" — விஜயன் திணறியபடி தலையை உசுப்பிக்கொண்டான். நாராயணன் அவனைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தான்.

"என்ன விஜயா திணறுகிறாய்? இரண்டிலே ஒன்று பதில் தேவை! செயல் ஒழுங்குபற்றிச் சொல்லுவதற்கே உனக்குக் கஷ்டமாக யிருக்கும்போது, போதிப்பவனுக்கு எவ்வளவு கஷ்டமாக இருக்கும்?" — அவன் 'நறுக்'கென்று குத்திக் காட்டினான்.

விஜயன் முகத்தில் அசடு வழிந்தது!

"உலகச் சித்திரப்போட்டியில் கலந்து கொள்வதென்றால் கிள்ளுக்கீரையைப் பறிப்பது போன்றதல்ல! அது பெரிய விஷயம்...! இப்போது எனக்கு நிறைய வேலைகள் இருக்கின்றன. இவைகள் முடிவு பெறுவதற்கே சில மாதங்கள் ஆகலாம்!"

"ஆகட்டுமே...இந்தப் போட்டியின் முடிவு தேதி இன்னும் இரண்டு மாதங்களுக்குப் பிறகுதான் வருகிறது!"

"நாராயணா எதையும் வாயால் சொல்லி விடுவது சுலபம்! அந்தப் போட்டிக்கு ஏற்றதுபோல் ஒரு சித்திரம் வரைவது என்றால் எவ்வளவு கஷ்டங்கள் தெரியுமா? முதலில் எனக்கு ஒரு 'சித்திரக்கரு' கிடைக்க வேண்டும்"

"விஜயா, இந்த சாக்குகளை நான் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை!...ரவிவர்மா வாழ்க்கையில் ஒரு விநோதமான சம்பவம் நடைபெற்றது. அந்த ஓவியக்கலைமேதை உலகச் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது இதேபோன்று ஒரு சித்திரப்போட்டி மேல்நாட்டில் நடைபெற்றது. அந்தப் போட்டியில் கலந்து கொள்ளச் சொல்லி அவருடைய நண்பர்கள் அவரிடம் வேண்டிக் கொண்டார்கள். அவர் உன்னைப்போல சித்திரத்துக்கு வேண்டிய 'கரு' கிடைக்கவில்லையே என்று கையைப் பிசைந்துகொண்டு நிற்கவில்லை!"

"நாராயணா! ஓவியமணி ரவிவர்மாவுக்கு ஒரு காலத்திலும் அப்படி திகைத்து நிற்கும்நிலை ஏற்படாது...அவர்

பிறவி மேதை...ஓவியக் கலையின் உயிர் உருவம்!''—விஜயனின் உடல் சிலிர்த்தது.

நாராயணன் மெல்லச் சிரித்தான்.

''விஜயா...நீயும் அந்த ரவிவர்மாவின் வழிவந்தவன் தான். அதை மறந்துவிடாதே! நீ இப்போது என்னிடம் பேசும் போக்கு அந்த மேதை ரவிவர்மாவுக்கு மதிப்பை உண்டாக்குவதல்ல. நீயும், அவர் அப்போது தன்னுடைய திறமையை வெளிப்படுத்திக் கொண்டது போலவே ஒரு யுக்தியைச் செய்து உன்னுடைய திறமையை வெளிப்படுத்திக் கொள்ள வேண்டும்! அதுதான் நீ உண்மையில் அவர்மீது கொண்டிருக்கும் மதிப்புக்குச் செய்ய வேண்டிய கடமை யாகும்!''— நாராயணன் கம்பீரமான குரலில் நிதானமாகச் சொன்னான். விஜயன் கண்களை இறுக மூடிக்கொண்டு, பெரு மூச்செறிந்தபடி மௌனமாக இருந்தான்.

''அது என்ன அண்ணா...அப்பேர்ப்பட்ட யுக்தியை ரவி வர்மா செய்தார்?'' — காவேரி குறுக்கிட்டுக் கேட்டாள்.

''அது மிகவும் வேடிக்கையானது அம்மா! ரவிவர்மா அவர்கள் ஒரு காகிதத்தின் மத்தியில் ஒரு புள்ளி வைத்து, அந்தப் புள்ளியைச் சுற்றி எந்த உபகரணத்தின் உதவி யுமில்லாமலே ஒரு வட்டம் போட்டுக் கொடுத்தார். அதைப் பரிசீலனை செய்து பார்க்க நீதிபதிகள், அந்த வட்டம் மையப் புள்ளியைச் சுற்றி ஒழுங்காக, கூடுதல்—குறைவு இல்லாமல் வரையப்பட்டிருந்ததைக் கண்டு அதிசயப்பட்டுப் போனார் கள். வட்டத்தின் ஒழுங்கும், கோட்டின் ஒழுங்கும் சித்திரக் கலையின் ஜீவநாடிகள். அந்த உண்மையை அனாயஸமாக வெளிக்காட்டிய ரவிவர்மாவின் அந்த வட்டத்திற்காக அந்த சித்திரப் போட்டியில் முதல் பரிசை கொடுத்துவிட்டார்கள்!'' நாராயணன் மெல்லச் சிரித்தான். காவேரி வியப்பில் ஆழ்ந்த படி மௌனமாக இருந்தாள்.

''அறைகூவல் திறமையின்மேல் உராயும்போது 'பளிச்' சென்று மின்னி வெளிக்கிளம்பும் 'பொறி'தான் அம்மா மேதைத்தன்மை என்பது! இது கலை நுட்பங்களை உணர்ந்த எல்லோருக்கும் தெரிந்தது...ஆனால் இவன் சொல்லுகிறான்...

எங்கேயோ போய் தேடிக்கொண்டு வரப்போகிறேன் என்று!'' — அவன் கேலியாகச் சிரித்தான்.

''நாராயணு! இந்தப் போட்டியில் நான் கண்டிப்பாக கலந்துகொள்ளத்தான் போகிறேன்...! நீ சும்மா ஓட ஓட விரட்ட வேண்டாம்!''— விஜயன் 'ரோஷத்தோடு' பதில் சொன்னுன்.

காவேரி அவனைப் பார்த்து 'கலகல'வென்று சிரித்தாள்.

''என்ன இருந்தாலும் அண்ணு ஒன்றைச் செய்து முடிக்க வேண்டுமென்று தீர்மானம் செய்துவிட்டால் அதை முடிக்காமல் விடுவதில்லை!''

''அம்மா...அம்மா...நீ இப்போது எதுவும் கலாட்டா செய்து காரியத்தைக் கெடுத்து விடாதே அம்மா! அப்புறம் விஜயன் நான் ஏதோ அவனுடைய முந்தையோர் செய்த விந்தைகளையெல்லாம் பெருமையாக எடுத்துச் சொல்லி, அவன் அறிவை மயங்கவைத்து, அவனை இந்தப் போட்டியில் கலந்துகொள்ளச் செய்துவிட்டதாக நினைத்துக்கொள்ளப் போகிறுன்!''

''நாராயணு! நீ இப்படிப் பேசிவிட்டதிஞல் நான் அப்படி நினைக்கமாட்டேன் என்று எண்ணுகிருயா? இஹ்ஹிஹ்ஹிம் ...உண்மையில் நான் அப்படித்தான் நினைக்கிறேன்! அதற்காக நான் வெட்கப்படவில்லை—பெருமைதான் கொள்கிறேன்! நம் முன்னேர்கள் இன்றைக்கு மாத்திரமல்ல— என்றைக்குமே—பெருமை கொண்டு முன் நோக்கிச் செல்ல நமக்கு ஊக்கமளிக்கும் கலங்கரை விளக்கமாகத்தான் இருப்பார்கள்!''

நாராயணன் தன் காரியம் வெற்றிகரமாக முடிந்ததிஞல் மகிழ்ச்சியோடு மௌனமாக இருந்தான். காவேரிக்கும் மனதுக்குள் திருப்தி பரவியிருந்தது. ஆஞல், அவள் அதை வெளிக்காட்டாமல் காலியாகிப் போய்க்கிடந்த 'காப்பிக் கோப்பைகளை' எடுத்துக்கொண்டு வெளியே கிளம்பிஞள்.

''நாராயணு...இன்று இரவு நான் சென்னைக்குப் போகிறேன்!''— திடீரென்று எதையோ நினைத்துக்கொண்டவன்போல சொன்னுன்.

''என்ன விசேஷம் விஜயா?''

"ஒன்றுமில்லை! என்னுடைய முதலாளி வீட்டில் ஒரு திருமணம்! அதற்கு நான் அரங்கங்களும் பந்தல் முகப்புகளும் செய்துதர வேண்டும்...மூன்று நாட்கள் அங்கே வேலை இருக்கும்! நீ கொஞ்சம் உன் தங்கையைக் கவனித்துக் கொள்!"

"சரி...! இன்று இரவு ஒன்பது மணி வண்டிக்குத்தானே ஊருக்குக் கிளம்புகிறாய்?...நான் இப்போதே போய் அதற்கு ஆகவேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்துவிட்டு வந்து விடுகிறேன்!"— நாராயணன் வெளியே கிளம்பினான்.

## 2. வழித்துணை

நாராயணன் கொண்டு வந்து கொடுத்த பிரயாணச் சீட்டைப் பார்த்ததும் விஜயனுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது. அது முதல் வகுப்புப் பிரயாணச் சீட்டு!

"நாராயணன்...! என்னை ஏன் இப்படி முதல் வகுப்பு சுகவாசிகள் கும்பலிலே கொண்டுபோய் ஒதுக்கிவிட்டாய்?" என்று அவன் கேலியாக கேட்டான்.

"எல்லாம் ஒரு காரணமாகத்தான் விஜயா! இரவிலே பிரயாணம் செய்யும்போது நிம்மதியாகத் தூங்கவேண்டுமல்லவா...அதற்காகத்தான் இந்தச் சீட்டு வாங்கிக்கொண்டு வந்தேன்!"

"நீ தப்பு செய்துவிட்டாய், நாராயண்! என்னைப் போன்றவர்களுக்கெல்லாம் இவ்வளவு சுகத்தை சுலபத்தில்கிடைக்கும்படி செய்து விடக்கூடாது. அப்புறம் நான் பெரிய சோம்பேறியாகப் போய் விடுவேன்!"

"உன்னைச் சோம்பேறியாகப் போகும்படியாக விட்டுவிடுவதற்கு நான் ஒன்றும் அவ்வளவு இளிச்சவாயனல்ல விஜயா!... உன்னால் பயன்கிடைக்கும் வரைக்கும்தான் உனக்குச் சுகமான சூழ்நிலையை உருவாக்கிக் கொடுப்பேன்...உன்னால் பயன் இல்லையென்று தெரிந்தால்...தேன்கூட்டில் இருந்து விரட்டப்படும் 'ஆண் தேனீயாக' நீயும் ஆக்கப்பட்டு விடுவாய்..." —அவன் 'விண்டலாக' விஜயன் முதுகில் தட்டினான்.

அந்த வார்த்தைகள் தேன் கொட்டுவது போன்று விஜயன் மனதில் 'நறுக்'கென்று தைத்து 'கடு கடுப்பை' உண்டாக்கின!

"நாராயணு! இந்த சீட்டை நீயே வைத்துக்கொள்... நான் கருவேப்பிலையாக யாரிடமும் போவதற்கு விரும்புவதே கிடையாது..."

"விஜயா..."— நாராயணன் வாயடைத்துப் போய் அவனையே உற்றுப் பார்த்தபடி நின்றான். விஜயன் கரத்திலே இருந்த பிரயாணச்சீட்டு அவனை நோக்கி கேலியாக சிரித்தது!

"நீ என்னை மிகவும் தவறாகப் புரிந்துகொண்டு விட்டாய், விஜயா!...நான் உன்னை எந்தக் காலத்திலும் அது போன்று நினைக்கமாட்டேன்! நீ 'கேலி' செய்ததற்காக வேண்டி நானும் 'கிண்டல்' பண்ணுவதற்கென்று அது போல சொன்னேன்...நீ அதை..."— அவன் தன் தலையை உசுப்பிக் கொண்டான்.

விஜயன் வரட்சியோடு சிரித்தான்.

"நீ என்ன நினைத்துக்கொண்டு சொல்லியிருந்தாலும் சரி! நான் இந்தச் சீட்டை வைத்துக்கொண்டு பிரயாணம் செய்வதில்லை என்று முடிவுக்கு வந்துவிட்டேன்!"—அவன் நாராயணன் கையிலே அந்த சீட்டைத் திணித்தான்.

"இதுதான் உனக்குத் தெரியுமா?"— நாராயணன் தழு தழுத்த குரலில் கேட்டான். அவனுடைய பார்வை அந்த சீட்டின்மீது வெறுப்போடு விழுந்திருந்தது. விஜயன் பதில் ஒன்றும் பேசவில்லை!

"நான் கடைசியாகக் கேட்கிறேன்...இந்தச் சீட்டு உனக்கு வேண்டுமா அல்லது வேண்டாமா?"—நாராயணன் உதட்டை கடித்துக்கொண்டு நின்றான்.

"நாராயண்...நான் உனக்காக செய்ய முடிந்தது ஒன்றே ஒன்றுதான்! நான் முதல் வகுப்பில் பிரயாணம் செய்ய வேண்டும் என்ற உன்னுடைய ஆசையை நான் நிறைவேற்றி விடுகிறேன்...ஆனால்..."

"ஆனால்...இந்த சீட்டு உனக்கு வேண்டாம்! ஏன் அப்படித் தானே? ஹும்ம்—ரொம்ப நல்லது!"— நாராயணன் தன் கையிலிருந்த 'சீட்டை' சுக்கு சுக்காகக் கிழித்தெறிந்தான்.

"எப்படியோ...உன் பயணம் வெற்றிகரமாக முடிந்தால் மகிழ்ச்சி!" —அவன் கோபத்தை மனதுக்குள் அடக்கிக் கொண்டு நடந்தான்.

"என்ன நாராயணன்...நீ ஸ்டேஷனுக்கு வரவில்லையா?"

நாராயணன் 'விரக்தி'யோடு சிரித்தான்.

"நான் எடுத்துக்கொடுத்த பிரயாணச் சீட்டு உனக்கு உபயோகப்படாமல் போன பின்னர், வழித்துணையாக நான் வந்து என்ன ஆகப் போகிறது!"—அவன் வேதனையோடு தான் கிழத்துப் போட்ட பிரயாணச் சீட்டைப் பார்த்து பெருமூச்செறிந்து விட்டு வெளியே சென்றான்.

நாராயணனின் செய்கை விஜயனின் மனதைக்குடைந்தது! ஆனால்...! அவனுக்கு மனதுக்குள் ஒரு திருப்தி!

எப்போதும் நாராயணன் தான் அது ஒழுங்கு, இது ஒழுங்கு என்று கண்டித்து கோபித்துக் கொள்வான். ஆனால் இன்றோ விஜயனுக்கு அது போன்று ஒரு சந்தர்ப்பம் கிடைத்து விட்டது.

விஜயனுக்கு மனதில் அந்த திருப்தி நீடித்து நிற்கவில்லை!

நாராயணன் மனமறிந்து, அவனை குறைவு படுத்திப் பேசவில்லை என்பது அவனுக்கு நிச்சயமாகத் தெரியும். அவன் விளையாட்டாகப் பேசினான். அந்த விளையாட்டை வினையாக ஆக்கி, விஜயன் அவனிடம் தன்னுடைய கண்டிப்பைக் காட்டிக் கொண்டான்.

பாவம். நாராயணன்!

அவனுடைய உள்ளம் தன்னுடைய கண்டிப்பால் எந்த அளவு புண்பட்டிருக்கும் என்பதை எண்ணும்போது விஜயனின் மனம் கலங்கியது! அவனுடைய நெஞ்சை உடைத்துக் கொண்டு ஒரு பெருமூச்சு வெளி வந்தது!

காவேரி அவனுடைய பிரயாணப்பையையும், படுக்கையையும் எடுத்துக்கொண்டு வந்து அவனருகில் வைத்தாள். விஜயன், கிழிந்து போய்க் கிடந்த பிரயாணச் சீட்டைப் பார்த்தபடி மௌனமாக நின்று கொண்டிருந்தான்.

அவனுடைய மனதில் ஒரு குலுக்கல்!

* * *

விஜயனும் நாராயணனும் நண்பர்கள் ஆனதே ஒரு வேடிக்கை! அவர்கள் முதன்முதலில் சந்தித்ததுகூட ஒரு ரயில் பிரயாணத்தின்போதுதான்! அப்போது அவர்கள் இருவருக்குமே ஒருவரை மற்றொருவருக்குத் தெரியாது! நாராயணன் யாரோ ஒரு பிரயாணியிடம் சித்திரக் கலைஞர்களைப் பற்றி விமர்சனம் செய்துகொண்டு வந்தான். விஜயன் அந்த விமர்சனத்தை வேடிக்கையாக ரசித்துக்கொண்டு வந்தான். அவர்களுடைய பேச்சு சுவாரஸ்யமான கட்டத்தை நெருங்கியது.

“சித்திரம் வரைபவர்களிடம் நான் காணும் ஒரே ஒரு குறை, அவர்கள் தாங்கள் வரையும் ஆண், பெண் உருவச் சித்திரங்களில் ஒரே மாதிரியான முக அமைப்பு வளைவுகளைக் கையாளுவதுதான்...! அவர்கள் அப்படிச் செய்வதினால் அவர்கள் வரையும் ஆண்கள் உருவம் ஒன்றைப் போலவே, மற்றொன்று சாயலில் அமைந்து விடுகிறது! பெண்களின் உருவங்களும் அதேபோன்று போய்விடுகின்றன...! இதனால் வேறுபட்ட பெண்கள், ஆண்கள் சித்திரங்கள்கூட ஒன்றைப் போலவே மற்றொன்று அமைந்து விடுகின்றன...”

நாராயணன் சொன்னது விஜயன் மனதில் தைத்தது! அவன் ஒரு சித்திரக்காரன்—அவன் எதிரிலேயே சித்திரக்காரர்கள் குறைவுபடுத்தப்படுவதென்றால்...? அவன் மனதில் ஒரு வேகம் கிளம்பியது.

“நீங்கள் சொல்லுவது போன்று நிகழ்வது, யாரோ ஒரு சில வியாபாரச் சித்திரக்காரர்களிடம்தான் என்பதை மறந்து விடாதீர்கள்!...பாவம் அவர்கள் என்ன செய்வார்கள்? அவர்களும் வாழவேண்டி இருக்கிறது...இயந்திரம் போல காசு பெறுவதற்கென்று எதையாவது செய்து தொலைக்கத் தானே வேண்டியிருக்கிறது...”—விஜயன் நாராயணன் பேச்சுக்கு இடையில் புகுந்து பதில் சொன்னான்.

நாராயணன், அவனை ஏற இறங்கப் பார்த்தான்.

“வயிற்றுப்பாட்டுக்காக மனிதன் இயந்திரமாவது சரியா?”

“இந்தக் கேள்வியை கொஞ்சம் மாற்றிக் கேட்டால் பொருத்தமாக இருக்கும்...வயிற்றுப்பாட்டுக்காக மனிதன்

இயந்திரமாக மாறக்கூடிய ஒரு சூழ்நிலை சமூகத்தில் இருப்பது சரியா?"—விஜயன் சிரித்துக்கொண்டே கேட்டான். அவனுடைய எதிர்க்கேள்வி நாராயணனை நிலைகுலையச் செய்தது! அவன் வாயடைத்துப்போய் மௌனமாக இருந்தான்.

"கூட்டுறவிலேதான் வாழ்க்கை சிறப்படைய முடியும் என்பது உண்மை! ஆனால் ஒரு சித்திரக்காரனிடமிருந்து உயர்ந்த—கலை நுட்பம் நிறைந்த சித்திரங்களை எதிர்பார்க்கும் உங்களைப் போன்றவர்கள், அந்த சித்திரக்காரனுடைய வாழ்க்கையைப்பற்றிக் கவலையே படமாட்டேன் என்கிறீர்கள். ஆனால், அவனுடைய சித்திரங்களை மாத்திரம் விமர்சனம் செய்ய வந்து விடுகிறீர்கள். உங்களுடைய கூட்டுறவெல்லாம் உயர்ந்த சித்திரத்தைக் கண்டு ரசித்து வெறும் புகழ்ச்சி வார்த்தைகளைக் கூறும் அளவோடேயே நின்று விடுகிறது. அவன் வாழ்க்கை ஒழுங்காக நடைபெற வேண்டுமே என்கிற பொறுப்பு உங்களைப் போன்றவர்களின் மனதிலே தோன்றுவதே கிடையாது! வழிவழியாக சித்திரக் கலையை சிறப்போடு காப்பாற்றினார்கள் அந்தக் கலைஞர்கள்! ஆனால் எவ்வளவு நாளைக்குத்தான் அவர்கள் தியாகம் செய்து கொண்டே இருக்க முடியும்?...இப்போதுதான் அவர்களுக்கு வாழவேண்டும் என்ற ஒரு ஆசை வந்திருக்கிறது..."

"உங்களுடைய பேச்சில் ஓரளவு உண்மை இருக்கிறது. ஆனால் ஒரு பக்கம் நடந்த தவறின் பிரதிபலிப்பாக இன்னொரு புறமும் ஆக்கப்படுவது சரியல்ல! ரசிகர்களுடைய கடமை, உணர்த்தப்பட வேண்டியது அவசியம்தான். அந்த நிலைமையை உருவாக்குவதற்கு முயற்சி செய்யாமல் கலைஞர்கள் தங்களிடமுள்ள கலையை பேணாமல் விடுவது ஒழுங்கல்ல..."— நாராயணன் நிதானமாகப் பதில் சொன்னான்.

"உங்கள் வாதம் விநோதமாக இருக்கிறது..."— விஜயன் சிரித்தான்.

"நான் வாதம் செய்வதற்கு விரும்பவில்லை...ஒழுங்கை சுட்டிக்காட்டுவதுதான் என்னுடைய ஆசை!"

விஜயன் அவனை ஏற இறங்கப் பார்த்தான். நாராயணனின் பேச்சு அவனுக்குப் புதுமுறையாக இருந்தது.

"ஒழுங்கு உருவாக வேண்டுமென்றால்—முதன் முதலில் இருக்கும் அமைப்பு மாற்றப்படுதல் அவசியமும்—அவசரமுமானதாகும். அதன்பிறகு தானாக அதன் விளைவும் மாறி விடுகிறது..."

"உங்களுடைய இந்தக் கருத்தை நான் அப்படியே ஒத்துக்கொள்கிறேன்!...இதனால் பயனடைபவர்களில் முக்கியமானவர்கள் கலைஞர்கள்! அவர்கள்தான் இதற்குத் தலைமை தாங்க வேண்டும்..."— நாராயணன் 'கலகல'வென்று சிரித்தான். அவன் பேச்சால் போட்ட 'பூட்டை' விஜயனால் விலக்க முடியவில்லை. அவன் அசட்டுச் சிரிப்புச் சிரித்தபடி மௌனமாக இருந்தான்.

"ஏன் சார்...நீங்கள் சித்திரக்காரர்தானே...?"— ஏதோ யோசனை செய்தபடி கேட்டான். விஜயன் முகத்திலே ஒரு மலர்ச்சி மின்னியது. ஆனால் அவன் வாய் திறந்து நேரடியாக நாராயணனுக்கு எந்தப் பதிலும் சொல்லவில்லை! நாராயணன் மௌனமாக உதட்டைக் கடித்துக்கொண்டு இருந்தான்.

அவர்களிடையே மௌனம் திரையிட்டது.

"நீங்கள் யாராக இருந்தாலும் சரியே...உங்களிடம் நான் விரும்பும் ஒரு குணம் இருக்கிறது. நீங்கள் எந்தக் கருத்து கொண்டிருந்தவராக இருந்தபோதிலும் எதையும் முறையாக விமர்சனம் செய்து முடிவுக்கு வருகிறீர்கள்..."— நாராயணன் மகிழ்ச்சியோடு விஜயனைப் பார்த்து சொன்னான். விஜயன் மெல்லச் சிரித்துக்கொண்டான்.

"உண்மையில் எனக்கு ஒரு நிரந்தரமான முறை என்பதே தெரியாது! சந்தர்ப்பம் சூழ்நிலைகளுக்கு ஏற்றது போல எனக்குச் சௌகர்யமும், சுலபமுமான வழிகளைத்தான் நான் கடைப்பிடிப்பது பழக்கம்!"

"நீங்கள் சொல்வதை என்னால் நம்பவே முடியவில்லை!"

"இதை நீங்கள் நம்பாததுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது"—விஜயன் சிரித்தான். நாராயணன் அவனை ஆச்சரியத்தோடு உற்றுப் பார்த்தான். அவனுக்கு விஜயன் ஒரு புதிராக இருந்தான்.

விஜயன், அவனைப் புன்னகைக் கோடுகள் உதடுகளில் மின்ன குறும்பாகப் பார்த்துக் கொண்டிருந்தான். நாராயணன் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன்போல சொன்னான். "நீங்கள் சொல்வது உண்மைதான். ஆனால்..."

"என்ன ஆனால், சார்?"

"ஒன்றுமில்லை—நீங்கள் வாதத்துக்காகச் சொல்லியிருந்தாலும் சரி, உங்களுடைய உண்மையான இயல்பே அதுவாக இருந்தாலும் சரி, எனக்கு இப்போது ஒன்று மாத்திரம் நிச்சயமாகத் தெரிந்துவிட்டது! அது என் பழைய முடிவை தட்டென்று செய்யவில்லை. என்னுடைய பழைய முடிவே சரியானது என்றுதான் உறுதிப்படுத்துகிறது!"—நாராயணன் அமைதியாகச் சொன்னான்.

"என்ன சார் அது? என்னை இன்னமும் முறையாக சிந்திப்பவன் என்று நீங்கள் எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்?"

"நிச்சயமாக நீங்கள் முறையாகச் சிந்திக்கப் பழகியவர் தான். அதில் சந்தேகமே கிடையாது! முறையாகச் சிந்திப்பவர்களுடைய நடைமுறைகள், ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு விதமாக இருப்பது தவிர்க்க முடியாதது. ஏனென்றால், சமுதாயம் வளர்ந்துகொண்டு வருகிறது. அதனால் காலத்திற்கேற்ப சுலபமும், சௌகர்யமுமான நடைமுறைகளைக் கையாளுவது குற்றமல்ல!...மேலெழுந்தவாரியாகப் பார்ப்பவர்கள் வேண்டுமானால் உங்களை 'சந்தர்ப்பவாதி' என்று சொல்லலாம்."

விஜயன் முகத்திலே ஆச்சரியம் அலைமோதியது. அவன் இதுபோன்ற ஒரு பதில் வருமென்று எதிர்பார்க்கவே இல்லை!"

விஜயன் மெல்லச் சிரித்தான். அவனுடைய முகத்திலே 'தன்னடக்கமான அசடு' வழிந்தது.

"நீங்கள் நினைப்பதுபோன்று நான் அவ்வளவு உயர்ந்தவன் அல்ல!"

"நானும் உங்களை உயர்ந்தவர் என்று சொல்லவில்லையே! உயர்ந்தவராக ஆக வேண்டுமானால் முறையாகச் சிந்திக்க மட்டும் தெரிந்தால் போதாது! முறையாகச் சிந்தித்துச்

கண்ட முடிவை, வாழ்க்கையில் நடத்திக்காட்டவேண்டும்! அது சுலபமான காரியம் அல்ல என்பது எனக்கே தெரியும்!"

அவர்கள் இருவருமே சிரித்துவிட்டனர். அவர்களிடையே ஒருவரை மற்றொருவர் ரசிக்கும் இயல்பு அரும்பிவிட்டது!

ஓடிக்கொண்டிருந்த புகைவண்டி பாலம் மாறி 'தடதட' வென்று ஒலியெழுப்பியது.

நாராயணன் தன்னுடைய சாமான்களை ஒழுங்குபடுத்த ஆரம்பித்தான்.

"ஏன் சார், நீங்கள் இந்த நிலையத்தில் இறங்கப் போகிறீர்களா?" — விஜயன் அவனுடைய செய்கைகளைப் பார்த்துக் கேட்டான்.

"ஆமாம். இதுதான் என்னுடைய சொந்த ஊர்!"

"ஹூம்...நானும் இதே ஊரில் இருப்பவன்தான்! நான் உங்களைப் பார்த்ததே இல்லையே!"

"அட...நீங்களும் இதே ஊர்தானு?! ஹூம்...என் பெயர் நாராயணன்; உங்கள் பெயர் என்ன?"

"விஜயன்..." — சுருக்கமாகச் சொன்னுன்.

"விஜயன்...நீங்கள் சித்திரக்காரர் விஜயன்தானே!" — அவன் ஆச்சரியத்தோடு கேட்டான். விஜயன் சிரித்துக் கொண்டே தலையை ஆட்டினுன்.

"நான்கூட உங்கள் ரசிகன்தான்! நீங்கள் பொல்லாத ஆளாக இருக்கிறீர்களே! இருநூறு மைல் பிரயாணம் செய் திருக்கிறோம் சேர்ந்து! நீங்கள் உங்களை யாரென்றே காட்டிக் கொள்ளவில்லையே!" — அவன் ஆவலோடு விஜயனேடு கை குலுக்கினுன்.

ஓடிவந்த புகைவண்டி நின்றது; இருவரும் சேர்ந்தே இறங்கினுர்கள்! அவர்களுடைய இந்தப் பிரயாணச் சந்திப்பு வளர்ந்து, இறுகி, இருவரையும் இணைபிரியாத நண்பர் களாக்கியது!

நாராயணன் விஜயனிடமிருந்த கலைத் திறமையை மிகவும் ரசித்தான். விஜயனே நாராயணனிடமிருந்த ஒழுங் கான வாழ்க்கையையும், தேர்ந்த அறிவையும் மிகவும் மெச்சிக்கொண்டாடினுன்.

வழித்துணையாகக் கிடைத்த நாராயணன், விஜயனின் குடும்பத்தில் நாளாவட்டத்தில் ஒரு [உறவினன் ஸ்தானத்தைப் பெற்றுவிட்டான்.

ஆனால் இன்று அதே நாராயணன்—

விஜயன் மெல்ல பெருமூச்செறிந்து கொண்டான்.

நாராயணனுடைய கோபம் 'நீர்மேல் வடுதான்' என்றாலும், அவன் தன்னை வழியனுப்ப புகைவண்டி நிலையத்துக்கு வராமல் இருப்பது விஜயனுக்கு மனதில் ஒரு பெரிய ஆதங்கத்தை உண்டாக்கியது!

விஜயனுக்கு மனதில் ஒரு சோர்வு! அவன் அசந்துபோய் பிரயாணப் பையையும், படுக்கையையும் வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தான்!

"ஓவ்...ஓ..." — சங்கு அலறியது. அது இரவு ஒன்பது மணிக்கு ஊதப்படும் சங்கு! விஜயன் பரபரப்போடு பிரயாணப் பையையும், படுக்கையையும் எடுத்துக்கொண்டு நிலையம் நோக்கி நடந்தான்.

பிரயாணச்சீட்டு வாங்கிக்கொண்டு விஜயன் புகைவண்டி நிலையத்திற்குள் நுழைவதற்கும் முதல் மணி அடிப்பதற்கும் நேரம் சரியாக இருந்தது. அவன் ஓட்டமும் நடையுமாக முதல்வகுப்புப் பெட்டி நோக்கிப் போனான்.

'கூ...'— புகைவண்டி ஊதியது! சாமான்களை பெட்டிக்குள் தூக்கிப் போட்டுவிட்டு விஜயன் வண்டியில் தொத்திக் கொண்டான். புகைவண்டி நகர்ந்தது. விஜயன் தன்னை ஆஸ்வாஸப்படுத்திக் கொள்ள சற்று வாசல் அருகில் தாமதித்தான். களைப்பு கொஞ்சம் மாறியது.

அவன் பெட்டி படுக்கையைத் தூக்கிக்கொண்டு இடம் பிடிக்க உள்வாசல் நோக்கி நடந்தான்.

'டொப்'—ஏதா ஒன்று உடைபடும் ஒலி! 'சர்'ரென்று அவனது இடது புறங்கையை உரசிக்கொண்டு ஒரு சிதல் சீறிக் கொண்டு ஓடியது! அந்தக் கையில் இருந்த படுக்கை நழுவிக் கீழே விழுந்தது!

## 14

"ஹா..."— விஜயன் அலறியபடி இடது புறங்கையை வலது கையில் அழுத்தியபடி உள்புறம் நோக்கினான். உள்ளே—

ஒரு வயதானவர் கையில் சோடாபுட்டி ஒன்றை ஏந்திய படி திகிலோடு அவனைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருடைய சிவந்த சுருக்கங்கள் விழுந்த முகம் கலவரத்தின் பீதியடைந்து காணப்பட்டது!

விஜயனுக்கு என்னதான் கோபம் அதிகமாக இருந்தாலும் அவனுக்கு அந்தக் கிழவனைக் கண்டதும் பரிதாபம்தான் உண்டாகியது! அவன் மெல்ல தன் கைக் காயத்தைப் பார்த்தான். மாங்காய் வடுவைப் பிளந்தது போல அவனது புறங்கை வாய் பிளந்து தென்பட்டது. அதிலிருந்து 'குபுகுபு' வென்று இரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

"ஹா..."— கிரீச்சிடும் ஒலி! விஜயன் தலையை உயர்த்திப் பார்த்தான்.

"என்ன இது நீங்கள் செய்த வேலை? என்ன இருந்தாலும் உங்களுக்கு இவ்வளவு அஜாக்கிரதை இருக்கக்கூடாது? உடைந்த சோடாபுட்டி துண்டு, கையிலே பட்டதினாலே தான் இவ்வளவோடு போயிற்று...இல்லையென்றால்..."— ஒரு பெண் 'பட பட' வென்று அந்தப் பெரியவரிடம் கோபமாகப் பொரிந்தாள்.

விஜயன், அவளை ஏற இறங்கப் பார்த்தான். இந்தப் பெண்ணுக்கு இருபது வயதுக்குக்குள்தான் இருக்கும். தாழம்பூ நிறம்; வட்ட மதிமுகம்; சுழலும் கயற்கண்கள்; நீண்டு வளைந்த விற்புருவங்கள்; எடுப்பான நாசி, மாம்பழக் கதுப்புக் கன்னங்கள்; பிளந்த மாதுளை போன்ற சிவந்த உதடுகள்; கடைசல் பிடித்து மெருகேற்றிய சிற்ப உடல்.

அவள் நீலாகாய நிறப்பட்டில் சரிகை இழையிட்ட புடவை உடுத்தியிருந்தாள். அதே வண்ண ரவிக்கை. கழுத்திலே நட்சத்திர மாலை பளபளத்தது! நெற்றியிலே 'ரசுனி' திலகம் பொன்னிறம் காட்டிக் கொண்டிருந்தது. காதிலும் மூக்கிலும் வைரங்கள் மின்னிக் கொண்டிருந்தன.

விஜயனின் விழிகள் அவளுடைய அங்கங்களின் அழகை ரசித்தபடியே மெய்ம்மறந்து நின்றன. அவனுடைய பார்வை

அவளுடைய இடையை நோக்கியது. அதில் ஒரு 'ஆச்சரியக் குலுக்கல்' உண்டாகியது!

அவன் அவ்வளவு குறுகிய இடையை அதுவரையில் பார்த்ததே கிடையாது. அவனுக்குத் தெரிந்து எந்த உயர்ந்த ஓவியனும் கூட அதுபோன்ற ஒரு சிறிய அழகிய இடையை எந்த சித்திரப் பெண்ணுக்கும்கூட அமைத்தது கிடையாது!

அந்த அழகு அவனது பார்வையிலே ஒரு போதையை ஏற்றியது. அந்த போதை மயக்கிலே அவன் தன் காயத்தின் வலியைக்கூட மறந்துவிட்டு அவளையே பார்த்தபடி நின்று கொண்டிருந்தான்.

"இரத்தம் ஏகமாகக் கசிகிறதே? ஒரு துணியைச் சுற்றிக் கொள்கிறீர்களா?"—அந்த அழகிய பொற்பதுமை அவனிடமே 'கிண்கிணி'க் குரலில் கேட்டாள். அவனுக்குச் சுய உணர்வு தட்டியது. அவன் அவளுடைய முகத்தைப் பார்த்தான். அதில்தான் எத்தனை கனிவு!

'சுரீர்' என்று அவனுடைய மனதில் ஒரு வெட்கம் தைத்தது. அவ்வளவு நேரம் அழகை 'காட்டுப் பூச்சி' போல விழிகளால் கூர்ந்து கவனித்ததை எண்ணி அவனுடைய மனதில் ஒரு 'மருகல்' உணர்ச்சி தோன்றியது!

அவன் பதில் ஒன்றும் சொல்லாமல் தன் பையிலிருந்து கைக்குட்டையை எடுத்து கசிந்து கொண்டிருந்த இரத்தத்தைத் துடைத்தான். ஆனால் துடைக்கத் துடைக்க இரத்தம் பொங்கிக்கொண்டே இருந்தது! அவளும் அதைக் கவனித்தாள்.

'சட்'—டென்று அவள் முகத்திலே சில சிந்தனைக் கோடுகள் மின்னலிட்டன. அவள் உட்காரும் பலகைக்கு அடியில் குனிந்து பார்த்து ஒரு கூஜாவை எடுத்துத் திறந்தாள். ஏதோ நினைத்துக் கொண்டவள் போல ஒரு சவுக்கத்தை அந்தக் கூஜாவில் இருந்த குளிர்ந்த நீரில் நனைத்துப் பிழிந்தாள்.

"கொஞ்சம் இப்படி கையை நீட்டுங்களேன்..."—என்று விஜயனிடம் கேட்டாள். விஜயன் அந்த மந்திரச் சொற்களின் மயக்கிலே காயம்பட்ட கையை அவளிடம் நீட்டினான்.

அவள் கைதேர்ந்த 'மருத்துவச்சி' போல நீரில் நனைத்த சவுக்கத்தால் காயத்தைத் துடைத்தாள். குளிர்ந்த நீர்

பெருக்கெடுத்து வந்த இரத்தத்தைத் தடுத்தி நிறுத்தியது. அவளுடைய குளிர்ந்த வருடல் அந்தக் காயத்தின் நோவினைக் குறைத்தது.

அவள் ஒரு வெண்மையான துணியைக் கிழித்து அந்த காயத்துக்குக் கட்டுப் போட்டாள். அவளுடைய ஆதரவான பணிவிடை விஜயனின் இதயத்தைப் புல்லரிக்கச் செய்தது!

"மிகவும் நன்றி!"— அவன் மெய்ம்மறந்த நிலையில் சொன்னான்.

"நன்றியா?"—அவள் கண்கள் அகல விரிந்தன. அவள் ஒருமுறை அவனை ஏறஇறங்கப் பார்த்தாள். அவள் முகத்தில் ஒரு புன்முறுவல் பூத்தது.

"உங்களுக்கு இந்த காயம் உண்டானதற்கே எங்களுடைய தவறுதான் காரணம்—அதற்கு முதலில் நீங்கள் எங்களை மன்னித்தால் போதும்!"

அவளுடைய பணிவும் அடக்கமும் நிறைந்த பேச்சு விஜயனை 'கிறுகிறு'க்க வைத்தது.

"இதெல்லாம் உங்களுடைய தவறு அல்ல—எதிர் பாராமல் ஏற்பட்டது"—அவன் மெல்லச் சிரித்துக் கொண்டான்.

"ஆமாம் தம்பி! நான் ஜாக்கிரதையாகத்தான் சோடா புட்டியைத் திறந்தேன். அது பாருங்கள்—'காஸ்' அதிகமாக இருந்து படீரென்று வெடித்து விட்டது!"—அந்த வயதானவர் தன் காவியேறிய பற்களை காட்டியபடி சொன்னார்.

"உங்களை நீங்கள்தான் மெச்சிக் கொள்ள வேண்டும்! ஏதோ இவர் நல்லவராக இருந்ததினால்தான் போயிற்று—இல்லையென்றால்...என்ன ஆகி இருக்கும் தெரியுமா?"—அந்த சித்திரப்பாவை அவரைக் கடிந்து கொண்டாள். அவர் ஒரு அசட்டு சிரிப்பு சிரித்துக் கொண்டார். விஜயனுக்கோ உச்சி குளிர்ந்து விட்டது.

அவன் அவள் அமர்ந்து இருந்த ஆசனத்துக்கு எதிரில் அமர்ந்தான்.

"கொஞ்சம் பால் சாப்பிடுகிறீர்களா? இரத்த சேதம் ஆனதினாலே களைப்பாக இருக்கும்!"

"வேண்டாம்..."— அவன் ஒப்புக்கு மறுதலித்தான்.

"சும்மா சாப்பிடுங்கள்!"—அவள் சொன்னதோடு மட்டும் நின்றுவிடவில்லை! ஒரு 'பிளாஸ்க்'கிலிருந்து ஒரு வெள்ளி கோப்பையில் பாலை ஊற்றி அவனிடம் நீட்டினாள். விஜயனால் அதை மறுதலிக்கவே முடியவில்லை! அவன் அதை வாங்கி ருசித்துப் பருகினான்—அதில்தான் எவ்வளவு சுவை?! அது சாதாரண பாலாக இல்லை! பாதாம், பிஸ்தா, அக்ருட், சாரா முதலிய பருப்புகள் கலந்து குங்குமப்பூ மிதக்க சத்து நிறைந்த சுவைக் கதம்பமாக அது விளங்கியது!

"அதுபோன்ற பால் சாதாரணக் குடும்பங்களில் பருகுவ தென்பது முடியாத காரியம்! நிறைய பணம் உள்ளவர்கள் தான் அதுபோன்ற பாலை பருகக் கொடுத்து வைத்தவர்கள் !

அந்தப் பெண் சாதாரண குடும்பத்தை சேர்ந்தவளாக இருக்க முடியாது — ஒரு பெரிய பணக்கார வீட்டுப் பெண் ணாகத்தான் இருப்பாள்!

அவன் மனதுக்குள் அவளை எடை போட்டான். ஆனால்—

அவளோடு பிரயாணம் செய்யும் இந்த வயதானவர் யார்?—அவன் மனதுக்குள் ஒரு கேள்வி கொக்கியிட்டது.

சாயலில் இருவருக்கும் கொஞ்சங்கூடச் சம்பந்தமே இல்லை! அந்த வயதானவர் ஒரு மல் வேஷ்டியும் ஜிப்பாவு மாகத்தான் இருந்தார் — உடைகளில்கூட ஒற்றுமை இல்லை! வேலைக்காரர் என்று நினைப்பதென்றாலோ அவரும் அவளோடு முதல் வகுப்பில் பிரயாணம் செய்கிறார்—அப்படியும் நினைப் பதற்கில்லை ! ஒரு வேளை அவர் அவளுக்குத் தூரத்து உறவாக இருக்கும் !—அவன் மனதுக்குள் யோசித்தபடி இருந்தான். கோப்பைப் பால் முழுவதும் தொண்டைக்குழி வழியாக மறைந்து விட்டது. அவனுடைய கையில் காலியான கோப்பை மிகுந்து இருந்தது.

"அநுராதா! அந்தக் கோப்பையை வாங்கு!"—கிழவர் உத்தரவிட்டார். அவள்—அநுராதா—தன் தந்தக் கரத்தை நீட்டினாள்.

விஜயன் அந்தக் கரத்தைக் கூர்ந்து நோக்கினான். அதில் தான் எத்தனை பளபளப்பு! அவன் மெல்ல அவள் முகத்தைப்

பார்த்தான். அவள் விழிகளிலே—இல்லை—அந்த புருவ அமைப்பிலே ஒரு சிரிப்பு மிதந்துகொண்டிருந்தது.

'டிங்...'—அவன் கையிலிருந்த கோப்பைத் தவறிக் கீழே விழுந்துவிட்டது! திடுக்கிட்டவனாக அவன் குனிந்து அதை எடுத்தான்—அப்போது—? அவளுடைய மென்மையான நீண்ட விரல்கள் அவன் கையில் தட்டுப்பட்டு அவனுடைய உடலிலே ஒரு மின்சாரத்தைப் பாய்ச்சியது!

அந்தக் கோப்பையை எடுக்க அவனோடு அவளும் குனிந்து இருக்கிறாள் !

அநுராதா மெல்ல அவனைப் பார்த்துச் சிரித்தாள்; விஜயன் அந்தக் கோப்பையைச் சரிபார்ப்பவன் போல அந்தச் சிரிப்பிலே சொக்கி நின்றான்!

"அடடே கோப்பை நசுங்கி விட்டதே?" — அவள் திடீரென்று கேட்டாள். விஜயன் தன் கையிலிருந்த கோப்பையைக் கவனித்துப் பார்த்தான்! அந்தக் கோப்பை யின் அடிபாகத்தின் ஓரம் நசுங்கிப் போய் இருந்தது!

"என்னுடைய அஜாக்கிரதைக்கு மன்னிக்க வேண்டும்!"—அவன் குரலில் ஒரு சோர்வு!

"இதில் மன்னிப்பதற்கு என்ன இருக்கிறது? நசுங்கித் தானே போயிருக்கிறது! உடைந்து போகவில்லையே!"

"என்ன அநுராதா? வெள்ளிக் கோப்பை எங்காவது உடைந்து போகுமா?"—அந்த வயதானவர் சிரித்தார்.

"அது தெரிந்துதானே நான் அதுபோலச் சொன்னேன்! இதுவே கண்ணாடியாக இருந்தால் இந்நேரம் இது தூள் தூளாக போயிருக்கும்!"—அவள் சிரித்தாள். அவள் எதற் காக இதைப்போல சொல்கிறாள் என்பது விஜயனுக்குப் புரியவில்லை.

ஒருவேளை அவள்—?

தான் அவளை உற்று நோக்கியது தவறு என்பதை உணர்த்துவதற்கு, கண்ணாடியைப்போல மனதைச் சிதறிப் போகும்படி விட்டு விடாதே, வெள்ளியைப்போல மனதிலே நசுங்கல் ஏற்பட்டாலும் திருத்தி ஒழுங்கு செய்து கொள் என்று குறிப்பாக கூறுகிறாளா ?

அவன் விழிகளிலே ஒரு சோர்வு படர்ந்தது! அவன் மெல்ல பெருமூச்செறிந்தான்!

"ஏன் சார், உங்கள் கைக்காயத்திலே வலி ஏற்பட்டுள்ளதா?"—அநுராதா அவனிடம் கேட்டாள்.

"இல்லை—"—விஜயன் அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டான். வலி காயத்திலே இல்லை—மனத்திலேதான் ஏற்பட்டுள்ளது என்பதை அவனால் எப்படி வாய்விட்டுச் சொல்ல முடியும்?

"நீங்கள் ஊர் போய்ச் சேர்ந்தவுடன் 'டாக்டரிடம்' காட்டி மருந்து போட்டுக் கொள்ளுங்கள். இதிலே அலட்சியமாக இருந்தால் பின்னால் ஆபத்தாகப் போய்விடும்!"—அவள் மிகவும் கவலையோடு சொன்னாள்.

"ஆமாம்...இதுபோல ஒரு காயத்தை நான் முந்தி கவனிக்காமல் விட்டதினாலேயே ரொம்பக் கஷ்டப்பட்டுப் போய்ட்டேன்!...வந்து நீங்கள் எந்த ஊருக்குப் போகிறீர்கள்?"

"சென்னைக்கு..."—விஜயன் சுருக்கமாகச் சொன்னான்.

"வியாபார விஷயமாகப் போகிறாப்போல இருக்கு!"

அவனுடைய பிரயாணத்துக்கு வயதானவர் கற்பித்த காரணம் விஜயனுக்குச் சிரிப்பை உண்டாக்கியது! ஆனால் அவன் அதை அடக்கிக்கொண்டு பதில் ஒன்றும் சொல்லாமல் மௌனமாக இருந்தான்.

"நாங்களும் சென்னைக்குத்தான் போகிறோம்..."—அவர் வலிய வந்து சொன்னார்.

"ரொம்ப சந்தோஷம்!"—விஜயன் அநுராதா பக்கம் திரும்பிப் பார்த்தான். அவனுடைய மனதிலே அவள் ஏதாவது பேசமாட்டாளா என்று ஒரு ஆதங்கம்.

"நீங்கள் சென்னைக்கு என்ன காரணமாகப் போகிறீர்கள்?"—அவன் மெல்லக் கேட்டான்.

"நாங்கள்..."—அந்த வயதானவர் பதில் சொல்ல வாயெடுத்தார். அவள் அவரைப் பார்த்து 'புருவத்தை' நெறித்தாள். அவர் வாயை மூடிக்கொண்டு மௌனமாக இருந்தார்.

விஜயன் அதைக் கவனித்து விட்டான். அவனுக்கு மனதிலே ஒரு அதிர்ச்சி!

'அவள் யார் — நான் யார்? அவளுடைய பிரயாண நோக்கத்தைக் கேட்க எனக்கென்ன உரிமை இருக்கிறது?' — அவனுடைய மனதுக்குள் ஒரு உறுத்தல்! உரிமையில்லாத இடத்தில் உரிமை ஏதோ இருப்பதுபோல நடித்துக்கொண்டு அவளிடம் கேள்வி கேட்ட பைத்தியக்காரதனத்திற்காக அவன் மனதுக்குள் மருகினான்.

ஆனால் இந்த மருகலுக்கு மத்தியிலும்......

அவளுடைய பேச்சைக் கேட்க வேண்டும்போல ஒரு ஆசை அடித்துக் கொண்டது. 'ஆதவன் ஆகாயத்துக்குச் சொந்தமாக இருந்தால்தான் என்ன? அதன் கதிர்களிலே வெம்மையின் கொடுமை தென்பட்டால்தான் என்ன? சூரியனின் ஒளிக் கதிர்களின் கதகதப்பிலே இதழ் விரிக்கத் தாமரை துடிக்காமலா இருக்கிறது?'

உரிமை இல்லை யென்பதற்காக உள்ளம் உறவாடுவதை விட்டு விடுகிறதா? உறவு உரிமையிலே மாத்திரம் பிறப்பது இல்லை! ரசனையிலேயேகூடப் பிறக்கலாம்! அதிலே தவறொன்றும் இல்லை!

ஆனால் அநுராதாவோ...ஜன்னல்களுக்கு வெளியில் எதையோ கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தாள். அங்கே அப்படி என்ன புதுமை இருக்கிறது? விஜயனும் ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான்.

வெளியில் ஒரே இருள்—கருமை! 'மினுக்'கிடும் பூச்சிகள் போல வானத்திலே ஒன்றிரண்டு நட்சத்திரங்கள் மூலைக் கொன்றாகச் சிதறிக் கிடந்தன! மரங்கள்கூட தன் பசிய உடலை கருமைத் திரையால் போர்த்துக்கொண்டு 'பூச்சாண்டி' காட்டியபடி நின்றன.

விஜயனுக்குச் சிரிப்பு வந்தது! அவன் திரும்பி அவளைப் பார்த்தான்.

'கோ...ண......'— புகைவண்டி வெறிபிடித்ததுபோல திடீரென்று பேய்க் கூச்சலிட்டது!

'த்ச்சு...'—அவள் முகத்தை இழுத்துக் கண்களைச் சுளித்துக் கொண்டாள். அவளது விரல்கள் கண்ணிமைகளைத் தடவிக் கொடுத்தன.

"கரித்துண்டு கண்ணிலே விழுந்து விட்டதா?"—விஜயன் படபடப்போடு கேட்டான். 'ஆமாம்' என்பதற்கு அடையாளமாக அவள் தலையை அசைத்தாள்.

"இந்த வண்டியிலே பிரயாணம் செய்யும்போது இது தான் பெரிய தொல்லையாக வந்து அமைகிறது?"— அவன் சலித்துக்கொண்டான். அநுராதா 'களுக்' கென்று சிரித்தாள்.

முதல் வகுப்பு பிரயாணிகள் கண்களிலே தூசு விழக் கூடாது என்று ஏதாவது சட்டம் இருக்கிறதா சார்?"— என்று அவள் தனக்கே உரித்தான குயிற்குரலில் கேட்டாள். அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது! அவன் மெல்லப் பெருமூச்செறிந்து தன்னைச் சமாளித்துக் கொண்டான்!

"பணம் வேண்டுமானால் சிலருக்கு சிலவகை செயற்கை சுகங்களைச் சிருஷ்டித்துத் தரலாம்! ஆனால் இயற்கை, தான் அளிப்பதை எல்லாம், எல்லோருக்கும் பொதுவாகத்தான் அளிக்கிறது!"

அவள் அவனை ஏறிட்டுப் பார்த்தாள். அவள் பார்வையிலே ஆச்சரியம் அலைமோதிக் கொண்டிருந்தது.

"இயற்கைகூட பல இடங்களில் பணத்துக்குப் பணிந்து தான் காரியமாற்றுகிறது..."—அவள் மெல்ல முணுமுணுத்தாள்.

"இல்லை...பணிந்து காரியமாற்றுவதுபோல நடிக்கிறது! ஆனால் சமயம் வாய்க்கும்போது இயற்கை பணபலத்தை நசுக்கி அழித்து ஒழித்துக்கட்ட பின்வாங்குவதே இல்லை!"— விஜயன் சிரித்தான்.

அநுராதா அவனை ஏறிட்டுப் பார்த்தபடி மௌனமாக இருந்தாள். அவள் கண்களிலே நீர் துளும்பியது! மெல்ல விரல்களால் அதைத் துடைத்துக் கொண்டாள்.

"ஒரு சிறிய கரித்துணுக்கு என்ன பாடுபடுத்துகிறது?"— மெல்ல பெருமூச்செறிந்தாள்.

"ஏன், கண் மிகவும் எரிகின்றதா?"

அநுராதா சிரித்தாள்.

"எனக்காக நீங்கள் ரொம்பவும் கவலைப்படுகிறீர்கள்?"

அவள் தன்னை 'கேலி' செய்கிறாளா? அல்லது உண்மையாகவே மனதில் தோன்றியதைச் சொல்லுகிறாளா என்பதை விஜயனால் புரிந்து கொள்ள முடியவில்லை! அவன் அநுராதாவைப் பார்த்தான். அவளுடைய முகத்திலே புன்னகை குமிழியிட்டுக் கொண்டிருந்தது!

அவள் கேலிதான் செய்து இருக்கிறாள்! அவனுடைய முகம் வாடிச் சுருங்கியது. ஆனாலும் அவனுக்கு அவள் மேல் கோபம் உண்டாகவில்லை!

கோபம் எப்படி உண்டாகும்? அவனுடைய மனம்தான் அநுராதாவின் அழகிலே சொக்கி கிறங்கிப்போய்க் கிடக்கிறதே!

அவனுக்குத் தன்மேலேயே வருத்தம் உண்டாகியது. தன் செயலின்மை காரணமாகத்தான் அவனுடைய உறவு அவளுக்குக் கவர்ச்சிகரமாகப் படவில்லை என்று அவன் மனதிலே ஓர் ஆதுரம்!

தூரத்திலிருந்து சந்திரனைப் பார்த்து நட்சத்திரங்கள் கண்சிமிட்டி உறவு கொண்டாடுகின்றன. சந்திரன் அந்த நட்சத்திரங்கள் உறவு கொண்டாடுவதைக் கேலி செய்வதில்லை! ஆனால் இங்கே—?

இது மண்—மண்ணிலே உறவு கிண்டலாகத்தான் போகிறது! இது மட்டும் விண்ணாக இருந்தால்......

அவனுடைய இதயம் விம்மி உயர்ந்து தணிந்தது!

"அநு...நீ தூங்கவில்லையா?"—அந்தப் பெரியவர் கனிவோடு கேட்டார்.

"எனக்கும் இப்போதுதான் தூக்கம் வர ஆரம்பிக்கிறது!"— அநுராதா அந்த மெத்தை தைத்த பலகையில் மெல்ல கால்களை நீட்டிக்கொண்டு படுத்தாள்.

அவன், அநுராதாவை மீண்டும் பார்த்தான். அவளுடைய விழிக்கோணத்திலே 'தாபம்' தேங்கிக் கிடந்தது! அவன் இதைக் கவனிக்கவில்லை! அவளுடைய விழிப்பாவைகளை இமை இதழ்கள் மெல்ல அணைத்துத் தம்முள்ளே அடக்கிக் கொண்டன.

அவளுக்கு உறக்கம் வந்துவிட்டது. ஆனால் விஜயனுக்கு உறக்கம் வரவில்லை! 'கொட்டு—கொட்'டென்று அவனுடைய இமைகள் தாளம் போட்டன! அவனது இதயத்திலே 'நினைவுக் கோலங்கள்' அந்தத் தாளத்திற்குப் பண்ணிசைத்தன! ஆனால்—

அந்த பண்ணின் வரிவடிவம் உறக்கத்திலே ஆழ்ந்து இருந்தது! அதனால் நாதம் பிறக்கவே இல்லை! மோகனத்தில் இதயத்திற்கு மாத்திரம் அந்த பிறவாத நாதத்தின் ஜீவன் ஓர் உயிர்ப்பை—ஒரு சிலிர்ப்பை—உண்டாக்கியபடி இருந்தது!

அவனுடைய இமைகளையும் தூக்கத்தின் 'கனம்' அழுத்தியது. விஜயன் கண்ணயர்ந்தான்!

அந்த ஜோடி உருவங்களை தொட்டிலாட்டிக் கொண்டு புகைவண்டி ஓடியது!

## 3. சித்திரப் பாவை

'ஜிலு...ஜிலு...' வென்று வீசிய குளிர்ந்த காற்று விஜயனின் உடம்பிலே குளிருட்டியது! மலைப்பாம்பு நெளிவது போன்று உடம்பை ஒரு முறை வளைத்து முறித்துக் கொண்டான். தூக்கத்தின் 'நச நசப்பு' உடம்பிலே ஏற்றியிருந்த சோம்பல் அவனது விழிகளை திறக்கவொட்டாமல் செய்தது!

'ஜிக்...ஜிக்' கென்று வேகமாக ஓடிக்கொண்டிருந்த புகைவண்டி 'தட தட' வென்று கர்ணகடூரமான ஒலிகளைக் கிளப்ப ஆரம்பித்தது!

"அநு...அநு..."— வயதானவர் கூப்பிடும் குரல் கேட்டது.

"ஹூம்ம்..."— ஒரு முனகல்! அநுராதாவும் தன்னைப் போலவே திண்டாடுவதைப் புரிந்துகொண்டு அவன் மனதுக்குள் சிரித்துக்கொண்டான்.

"இதோ தாம்பரம் வந்து விட்டதம்மா...! நீ எழுந்து முகத்தைக் கழுவிக்கொண்டு தயாராக இருக்கவேண்டாமா?"

பட்டுப்புடவையின் 'சரசரப் பொலி' கேட்டது! அவள் எழுந்து விட்டாள். பரபரப்போடு நடக்கும் சத்தம்! 'டப்' பென்று கதவு சார்த்தப்படும் ஒலி! அதைத் தொடர்ந்து...

'சொரி...சொரி...'— தண்ணீர் சொரிவதினால் உண்டாகும் இரைச்சல்!

விஜயன் 'கொட்டாவி' விட்டுக்கொண்டான்! ஆனாலும் அவனுக்கு எழுந்திருக்கப் பிடிக்கவில்லை! மெல்லப் புரண்டு படுத்துக் கொண்டான்.

'கடகட...' வென்று பேரொலி எழுப்பியபடி புகை வண்டி ஊளையிட்டுக் கொண்டு நிலையத்துக்குள் நுழைந்தது!

ஒரு உலுக்கு — விஜயன் எழுந்தான். புகை வண்டியும் நின்றது! புகைவண்டி நிலையத்துக்கே தனிச் சொத்தான கூலிகளின் கூச்சல்களும், பலகார வியாபாரிகளின் 'பலகார அர்ச்சனை' நாமாவளியும் அவனை வரவேற்றன!

"காபி வாங்கிக் கொண்டு வாருங்களேன்!"— அநுராதாவின் குரல் கேட்டது. விஜயன் திரும்பிப் பார்த்தான்! அவனுக்கு ஒரே ஆச்சரியம்!

இரவிலே மங்கிய நீலவிளக்கொளியில் கண்ட அநுராதாவிற்கும், இப்போது காணும் அநுராதாவிற்கும்தான் எவ்வளவு மாறுபாடு!

அப்போது அவள் வெறும் அழகுச் சிலையாக இருந்தாள். இப்போது அவள் அழகு மின்னலாக — அழகின் அதிதேவதையாக இருந்தாள்! உடைகளிலே அப்போது தெரிந்த ஆகாய நீலநிறம்கூட இப்போது தாமரை வர்ணமாக மாறிவிட்டது! அவள் இரவிருளிலே ஒளிமங்கிய அழகு முகையாகத் தான் இருந்தாள். ஆனால் இப்போதோ—

உஷத் காலத்தில் பொன்னொளி மின்னும் பனித்திவலைகளை ஏந்தியபடி கட்டவிழ்த்த அழகு மலராக மாறிவிட்டாள்!

அவன் கண்களைக் கசக்கிக்கொண்டு மீண்டும் ஒருமுறை அவளைப் பார்த்தான். அவனது விழிப்பார்வைகளிலே ஊசலிட்டாடிய அவளது உருவம் அவனை மெய்ம்மறக்கச் செய்தது.

அவள் கடைக்கண்ணால் மெல்ல அவனை நோக்கிச் சிரித்தாள்.

"இப்போது ஒரு 'காபி' போதாது! இரண்டு 'காபிகளாக' வாங்கிக்கொண்டு வந்து விடுங்கள்!"— ஒரு வெள்ளிக்

கூஜா அவளுடைய கையிலிருந்து பெரியவரின் கைக்கு மாறியது! அவர் நடந்தார்.

இரண்டாவது காப்பி தனக்குத்தான் என்பதை அவன் புரிந்துகொண்டான்.

"காலையில் வெறும் வயிற்றில் நான் 'காபி' குடிப்ப தில்லை!"—அவன் மெல்ல முணுமுணுத்தான்.

"வயிறு நிரம்பியிருக்கும்போது 'காபி' குடிப்பதால் என்ன பயன் இருக்கிறது?..."— அவனை நோக்கி அவள் நேரடியாக கேட்டாள்.

"பயனில்லாமல் நாம் செய்யும் பைத்தியக்காரத்தனங் களில் இதுவும் ஒன்று...அவ்வளவுதான்..."— விஜயன் மெல்ல சிரித்தான்.

"வயிறு நிரம்பியிருக்கும்போது 'காபி' குடிப்பது வேண்டு மானால் பயனில்லாமல் இருக்கலாம் — ஆனால் வெறும் வயிற்றில் காப்பி குடிப்பதில் ஒருபயன் இருக்கத்தான் செய் கிறது?!"

"அதில் என்ன அவ்வளவு பெரிய பலன் கிடைக்கிறது?" — அவன் சிரித்தான்.

"நிச்சயமாக 'காபி'யின் இயல்பான பயன் வெறும் வயிற்றில் அதைக் குடிக்கும்போதுதான் கிடைக்கிறது! நான் சொல்லுவது உங்களுக்கு ஒருவேளை ஆச்சரியமானதாக இருக் கலாம்...ஆனால் அது உண்மை..."

விஜயன் ஒன்றும் புரியாமல் அவளைப் பார்த்தபடி விழித்த கண் வாங்காமல் இருந்தான்.

"எப்போதும் போதைப் பொருள்கள் வெறும் வயிற்றில் உபயோகப்படுத்தும்போதுதான் மயக்கத்தை அதிகப் படுத்தும்! காபியும் ஒரு போதைப் பொருள்தானே...அதில் கிடைக்கும் மயக்கத்தின் சுவையை அநுபவிக்கத்தானே ஆவலோடு அதைக் குடிக்கிறோம்! இஹ்ஹிஹ்ஹிம்...இப்படி உண்மை இருக்கும்போது மயக்கத்தின் உச்சியைத் தொட வெறும் வயிற்றில் அதைக் குடித்தால்தானே முடியும்!" — அவள் உடல் குலுங்கச் சிரித்தாள்.

"மயக்கம்..."— விஜயனின் உதடுகள் முணுமுணுத்தன.

"இப்போது நாம் இருவரும் விரும்பித் தேடிக் கொண் டிருப்பது அந்த மயக்கத்தைத்தான்!"

அவளுடைய பேச்சு மின்வெட்டு போல இதயத்தைக் கிழித்தது!

"நாம் இருவரும் தேடிக் கொண்டிருப்பது மயக்கம்..." — அவனுடைய மனதுக்குள் இடிக்கு முறல்களாக அந்தச் சொற்கள் படபடத்தன. விஜயனுடைய இதயம் தேள் கொட்டினாற்போல் கடுத்தது!

பெரியவர் காப்பியோடு உள்ளே நுழைந்தார்.

தென்றல் முற்றி பெருங்காற்று ஆவது இயற்கையின் விசித்திரமாக இருப்பதுபோல, தமாஷாக அவள் ஆரம்பிக்கும் பேச்சு தார்க்குச்சி குத்துக்களாக விஜயனின் இதயத்தின் விழும் வேடிக்கையும் இருந்தது!

விஜயன் மனதில் அவளுடைய பேச்சுகள் ஒரு மகா கவிஞனின் கவிதைபோல ஆயிரமாயிரம் அற்புத சித்திர விசித்திரங்களை உண்டாக்கின.

வந்த காபியை இருவரும் மௌனமாகப் பகிர்ந்து பருகினர்.

அவனுடைய எண்ணத்தட்டிலே அநுராதா ஒயிலாக அமர்ந்தபடி இதயத்தை உதைந்து வேகமாக ஊஞ்சலாடிக் கொண்டிருந்தாள். அந்த ஆட்டத்தின் வேகம் அவனையும் ஆட்டிக் கொண்டிருந்தது! ஆனால் அதை விஜயன் வெளிக் காட்ட முடியாமல் திணறினான்!

காபி வயிற்றில் விழுந்து உடம்பில் பரவியதினால் ஒரு முறுக்கு நரம்புகளில் ஏறியது! அது காபியிலே உள்ள 'போதை' உண்டாக்கியதேதான்! அந்த போதை முறுக்கிலே கூட அவனால் தன் மன ஆட்டத்தை — சலனத்தை — வெளிப் படுத்த முடியவில்லை!

விஜயன் இமைகளை உயர்த்தி அவளைத் திருட்டுத்தன மாகப் பார்த்தான்! அவள் சித்திரப்பாவை போல சிரித்தபடி இருந்தாள்.

அந்த சிரிப்பு?— அதுவும் காபி போதை உண்டாக்கிய நரம்பு முறுக்கிலே உண்டானதுதானா?...இருக்க முடியாது! அது போதைச் சிரிப்பல்ல...அமுதச் சிரிப்பு! நரம்பு முறுக்கிலே

அந்தச் சிரிப்பு உருவானதாக இருந்தால் அது உணர்ச்சிகளைத் தொடுகிறது—அதனால் அது, அவளது இதய உணர்ச்சிகளின் அமுதக் கலவையிலே உருவெடுத்தே வெளி வந்திருக்க வேண்டும்!

"நீங்கள் 'எழுமூரில்' தான் இறங்கப் போகிறீர்களா?"—பெரியவருடைய கேள்வி அவனது சிந்தனையைத் துண்டித்தது.

"ஆமாம்...! நீங்கள்?"

"நாங்களும் அங்கேதான் இறங்க வேண்டும்!"— பெரியவர் அவனை உற்றுக் கவனித்தார். அவர் எதற்குத் தன்னை இப்படிப் பார்க்கிறார் என்பது அவனுக்குப் புரியவில்லை!

"இப்போது நீங்கள் சென்னைக்கு எதற்காகப் போகிறீர்கள்?"

"நுங்கம்பாக்கத்தில் ஒரு கல்யாணம்...அதற்குத்தான்..."

"நுங்கம்பாக்கக் கல்யாணம்...அப்படியானால்...திரு .. சோணு...ராவன்னு வீட்டுக் கல்யாணமா?"—அவர் குரலில் ஒரு வியப்பு!

"ஆமாம்......" —விஜயன் சிரித்துக் கொண்டே சொன்னான்.

பெரியவர் அநுராதாவை ஒரு மாதிரியாகப் பார்த்தார். அவர்கள் இருவருடைய விழிகளும் ஏதோ பேசிக் கொண்டன! அந்தச் சப்தமில்லாப் பேச்சிலும் ஆச்சரியத்தின் ஆதிக்கம் நிறைந்தே இருந்தது!

விஜயனுக்குப் பெருமை தாங்கவில்லை! அவன் அவர்களுடைய ஆச்சரியத்தை மிகவும் ரசித்தபடி இருந்தான்.

"நீங்கள் அவருக்கு எதுவும் உறவா?"— அநுராதா தயங்கியபடி, அவனிடம் மிகவும் மரியாதையோடு கேட்டாள்.

"உறவு என்று சொல்லிக்கொள்ள எனக்கு அவரிடத்தில் ஒரு உரிமையும் இல்லை! நான் அவராலேதான் முன்னுக்கு வந்தவன். அவருக்கு நான் மிகவும் கடமைப்பட்டவன்..."

அவள் மெல்ல பெருமூச்செறிந்து கொண்டாள். அவள் முகத்திலே ஒரு விவரிக்க இயலாத சோர்வு படர்ந்தது. விஜயனுக்கு அவளுடைய முக மாறுதலின் காரணம் புரியவே இல்லை!

"ஏன் உங்களுக்கு அவரால் எதுவும் காரியம் ஆக வேண்டுமா?"

"ஒன்றுமில்லை!...அவர் வீட்டுக் கல்யாணத்துக்கு நான்கு நாட்கள் முன்னதாகப் போகிறீர்களே.. ஒருவேளை உறவாக இருக்குமோ என்றுதான் கேட்டேன்!"— அவள் சிரித்துக் கொண்டு பதில் சொன்னாள். அந்தச் சிரிப்பு இயற்கையாக இல்லை என்பதை விஜயன் கண்டுகொண்டான்.

அவள் தன்னுடைய மனதை இறுகப் பிடித்துக்கொண்டு எதையோ மறைத்துப் பேசுகிறாள்?! அது என்ன?

புகைவண்டி உடலை உலுக்கிக்கொண்டு கிளம்பியது. அவனுடைய மனமும் அவளுடைய பேச்சைப் பிடித்துக் கொண்டு உயரக் கிளம்பியது.

விஜயனுக்கு, அவளுக்குத் தன் முதலாளியிடம் சொல்லி என்ன காரியம் வேண்டுமென்றாலும் செய்துதர தன்னால் இயலும் என்று சொல்ல வேண்டும் என்று மனதில் துடிப்பு உண்டாகியது! அப்படிச் சொன்னால் அவள் ஒருவேளை தன்னைத் தற்பெருமைக்காரன் என்று எண்ணி விடுவாளோ என்று ஒரு பயம்—வெட்கம்—அந்தத் துடிப்பின் மென்னியை இறுக்கி நெரித்தது!

"நீங்கள் சென்னைக்கு என்ன வேலையாகப் போகிறீர்கள்?"— விஜயன் தன் எண்ணத்தை மறைத்துக்கொண்டு, சாதாரணமாகக் கேட்பதுபோல கேட்டான்!

"தெரிந்தவர் ஒருவரைப் பார்க்கப் போகிறோம்!"— அநுராதா 'சட்'டென்று பதில் சொன்னாள்.

"ஹூம்ம்..."—விஜயன் மெல்ல முணுமுணுத்துக்கொண்டான். அவளுடைய பதில் இதற்குமேல் என்னிடம் ஒன்றும் கேட்காதே என்று சொல்லுவதுபோல இருந்தது!

அநுராதா அவனுக்கு ஒரு விளங்காத புதிராக இருந்தாள். இராகச் சாயையைக் காட்டாமல் ஆலாபனை செய்யும் சங்கீதக்காரனுக்கு, பக்க வாத்தியம் வாசிக்க வந்து அமர்ந்து திணறும் 'பிடில்காரன்' போல அவன் திக்குமுக்காடிக் கொண்டிருந்தான்.

இராகத்தின் இனிமைபோல அவனுக்கு அநுராதாவின் அழகு விளங்கியது. ஆனால் இராசச் சாலை போன்ற அவளுடைய தன்மை அவனுக்குப் புரியவில்லையே !

அவள் சிரிக்கிறாள்—இனிமையாகப் பழகுகிறாள்! ஆனால்-

அவள் இதயம்—அந்த இதயத்திலே சுழலிட்டுக்கொண் டிருக்கும் நினைவுகள்—அவனுக்கு விளங்கவே இல்லை ! இராட்டினத்தில் வேகச் சுழற்சியிலே, தட்டுக்களில் அமர்ந்து இருப்பவர்களின் உருவம் தெளிவாகத் தெரியாமல் இருப்பது போல அவளுடைய மனமும் அவனுக்கு இருந்தது!

ஆனால்—

அந்த தெளிவில்லாத நிலைகூட அவனுக்கு அழகாகத் தான் தெரிந்தது. பலாச்சுளை, தன் பாதுகாப்புக்கு முட் போர்வை போர்த்தியிருப்பது அழகற்று இனிமையற்றுப் போய் விடுகிறது.

அநுராதாவை விஜயன் பார்த்தபடியே இருந்தான். அவள் அமர்ந்த நிலையில் ஆடாமல் அசையாமல் இருந்தாள். ஆனால் அவளுக்குப் பின்னாலே —

எல்லாப் பொருள்களும் ஓடிக்கொண்டிருந்தன.

அநுராதா...ஊஞ்சலில், தரையில் கால் பாவாமல் உயரவே ஆடிக் கொண்டிருக்கும் அழகுக்கன்னி. அவள் ஆட வில்லை. ஊஞ்சல்தான் ஆடுகிறது. ஆனால் அந்த ஆட்டத் திலே அவளும் ஆடுவது போன்று ஏன் ஒரு பிரமை தோன்று கிறது?

அவனுடைய உள்ளம், தன்னுடைய கற்பனைத் திரையிலே அவளை ஆயிரம்வித அலங்காரங்கள் செய்து, சித்திரப்பாவையாக அழகு பார்த்தது!

"இதோ......எழும்பூர் வந்து விட்டது!"— பெரியவர் எழுப்பிய கூச்சல் அவனுக்கு எரிச்சலை உண்டாக்கியது!

"என்ன அதற்குள்ளாகவா 'எழும்பூர்' வந்துவிட்டது?"

வயதானவர் விஜயனின் பேச்சைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை ! அவர் வேகமாக வெளி வாசலுக்குச் சென்றார். அவர் பார்வை யாரையோ 'பிளாட்பாரத்தில்' தேடியது.

ஓடிவந்த புகைவண்டி நின்றது.

"அப்பாசாமி...அப்பாச்சாமி..." —அந்தக் குரல் விஜய னுக்கு பழக்கமானதுபோல தோன்றியது.

"உங்களைத்தான் எதிர்பார்த்துக்கொண்டு வாசலில் நின்றேன்!" —கிழவர் பணிவும் குழைவும் நிறைந்த குரலில் சொன்னார்.

"அநுராதா..."—உள்ளே ஏறி நடந்து வரும் ஒலி! அநுராதா உடைகளைச் சரிசெய்துகொண்டு எழுந்தாள். ஜவ்வாது மணமும், கதம்ப 'சென்டி'ன் நெடியும் குப்பென்று அந்தப் பெட்டிக்குள் பரவியது!

அலை அலையாக சுருண்ட கேசம் பிடரி வரையில் தொங்க, வெற்றிலைக் காவியேறிய உதட்டிலே சிரிப்பு மின்ன, பள பளக்கும் பட்டு உருமால் கழுத்திலே புரள, சிவந்த முகம் ஒன்று உள்ளே நீண்டது!

"வணக்கம்..."— அநுராதா கைக்கூப்பினாள்.

"சௌக்கியம்தானே அநுராதா..."

"ஊம்ம்..."— அவள் தலையை ஆட்டினாள்.

விஜயனுக்கு உள்ளே நுழைந்த அந்த உருவத்தைக் கண் டதும் ஒரு அதிர்ச்சி! அவன் உதட்டைக் கடித்துக்கொண்டு மெல்ல பெருமூச்செறிந்தான்.

"சரி...உன் சாமான்களையெல்லாம் எடுத்துக்கொண்டு கிளம்பு அநுராதா!"— வந்த ஆள் எதேச்சையாகத் திரும்பிப் பார்த்தான்.

"அடடே...நான் உங்களைக் கவனிக்கவே இல்லையே சார்!"— அந்த ஆள் 'படபடப்போடு' விஜயனைக் கட்டிக் கொண்டான்.

"என்ன ராஜா? எப்படியிருக்கிறது பிழைப்பெல்லாம்..." — விஜயன் சிரித்துக்கொண்டே கேட்டான்.

"என்னமோ காலம் ஒருமாதிரியாக ஓடுகிறது...! ஹூம்ம்...அது கிடக்கட்டும் சார்! நீங்கள் சென்னைக்குத் திடீர் என்று எதற்கு வந்தீர்கள்?"

"எல்லாம் முதலாளி வீட்டுக் கல்யாணத்துக்காகத்தான்..."

"நீங்கள் கொடுத்து வைத்தவர் சார்! நீங்கள் எங்கே இருந்தாலும் உங்களுக்கு அழைப்பு தேடிக்கொண்டு வந்து விடுகிறது..."

விஜயன் ராஜாவின் பேச்சை காதில் வாங்கிக் கொள்ளாமலேயே அநுராதாவை ஓரக்கண்ணுல் பார்த்தான். அவள் திகைத்துப் போய் சிலைபோல அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

ராஜா தன் பேச்சுக்குப் பதில் வராததைக் கண்டு விஜயனைக் கவனித்தான். அவன் முகத்திலே ஒரு புன்முறுவல் மின்னலிட்டது!

"அநுராதா, சார் யாரென்று உனக்குத் தெரியுமா? இவரைத்தான் விஜயன் என்று சொல்லுவார்கள். சினிமா உலகத்திலும், பத்திரிகை உலகத்திலும் இவரைத் தெரியாதவர்கள் யாருமே இருக்கமாட்டார்கள்...பெரிய சித்திர நிபுணர்!"

"வணக்கம் சார்..."— அநுராதா கைகூப்பி அவனை வணங்கினாள். அவனும் பதில் வணக்கம் செய்தான்.

"சார்...உங்களுக்கு அநுராதாவைத் தெரியுமல்லவா?" — ராஜா சிரித்துக்கொண்டே விஜயனிடம் கேட்டான்.

"தெரியும்..."— விஜயனின் விழிகள் அநுராதாவை நோக்கி உயர்ந்தன.

"நீங்கள் இருவரும் ஒரு ஊர்க்காரர்கள்—உங்களுக்கு ஒருத்தருக்கொருத்தர் தெரிந்து இருப்பதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது—"—ராஜா சிரித்தான். விஜயனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

அநுராதா தன் ஊர்க்காரியா?

"சரி, நாம் போகலாமா?"—ராஜா விஜயனின் பிரயாணப்பையை எடுத்துக்கொண்டு கிளம்பினான். விஜயன் படுக்கையைச் சுருட்டி எடுத்துக் கொண்டு பின் தொடர்ந்தான்! அநுராதாவின் சாமான்களும் கீழே இறக்கப்பட்டன.

அந்த சாமான்களை ஒட்டி ஒரு புறத்தில் அப்பாச்சாமியும் அநுராதாவும், மற்றொருபுரத்தில் ராஜாவும், விஜயனும் நின்றனர்.

வண்டியிலிருந்து இறங்கியவர்கள், நெருக்கியடித்துக் கொண்டு நிலையத்தை விட்டு வெளியேறிக் கொண்டிருந்தனர். அந்தக் கூட்டம் கலைந்த பின்னர் போகலாம் என்பதே அவர்களுடைய நினைப்பு!

"அப்பாச்சாமி! வெளியிலே போய் ஒரு வாடகைக்கார் ஏற்பாடு செய்...நாங்கள் பின்னால் வருகிறோம்..." —ராஜா அந்த வயதானவரிடம் மிகவும் அதிகாரத்தோடு சொன்னான். அவர் அவனுடைய உத்தரவை சிரமேல் தாங்கியபடி வெளியே செல்ல ஆரம்பித்தார்.

விஜயனால் இந்தக் காட்சியை ரசிக்க முடியவில்லை. ராஜா விற்கு அதிகமாக இருந்தால் வயது முப்பதிருக்கும். ஆனால் அவரோ... ஐம்பது வயதிற்கு மேற்பட்டவர்! இவன் போய் அவரை விரட்டுவதென்றால்—?

"அநுராதா...நம் 'சார்' மனது வைத்தால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை! இவ்வளவு பெரிய ஆசாமியை பக்கத் திலே வைத்துக்கொண்டு நீ என்னவென்றால் படாதபாடு பட்டுக் கொண்டிருக்கிறாய்?"—ராஜா சிரித்தான்.

"என்ன ராஜா—நீ என்னை எவரெஸ்ட்டுக்கு உயர்த்திக் கொண்டு போக ஆரம்பித்து விட்டாயே?"—பெருமை தாங்க முடியாமல் வெட்கத்தோடு விஜயன் சொன்னான். அநுராதா ஏக்கத்தால் துடிக்கும் இதயத்தோடு அவனைப் படபடக்கும் விழிகளால் பார்த்தாள்.

"அநுராதா...நடனம் ஆடி நீங்கள் பார்த்திருக்கிறீர் களா?"—திடீரென்று ராஜா விஜயனிடம் ஒரு கேள்விக் குண்டைத் தூக்கிப் போட்டான். விஜயன் அதிர்ச்சியடைந்த வனாக அநுராதா பக்கம் திரும்பினான்.

அவன் மனதில் அநுராதாவைப்பற்றி என்னென்ன எண்ணங்கள் கொண்டிருந்தான்—கடைசியில் அவள் ஒரு நடனக்காரிதானா!?

"விஜயனின் மனதை யாரோ முறுக்கிப் பிழிவது போன்று இருந்தது. அவனது இமையோரத்திலே ஒரு நீர் முத்து மின்னவிட்டது!

"ரொம்ப பிரமாதமாக அநுராதா ஆடுவாள் சார்... ஆனால் அவளை தூக்கி விடுவதற்குத்தான் ஆளில்லை..."— ராஜா சொல்லிக் கொண்டே போனான்.

விஜயன் கீழே குனிந்தபடி தரையில் பதிக்கப்பட்டிருந்த கருங்கல் சதுரங்களை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கு நிலமே சுழல்வதுபோன்று இருந்தது.

"...நீங்கள்தான் அநுராதாவோடு நெருங்கிப் பழகியிருப்பீர்களே...உங்களுக்கு அவளுடைய குணம் தெரியாதா என்ன..?"

விஜயன் பற்களை 'நற நற' வென்று கடித்தபடி தலையை உயர்த்தினன். ராஜாவின் முகத்திலே காணப்பட்ட காரணமற்ற குழைவு அவனுக்கு எரிச்சலை உண்டாக்கியது!

"யார் அப்படிச் சொன்னது?"—விஜயன் கடுமையாகக் கேட்டான். ராஜாவின் முகத்திலே பயம் பரவியது.

"நான் ஒன்றும் தப்பாக சொல்லவில்லையே!"

"ஒருஇரவு நாங்கள் இருவரும் சேர்ந்து பிரயாணம் செய்ததற்காக நீங்கள் கட்டி வைக்கிற பட்டமா இது?"

"அய்யய்யோ...நீங்கள் என்னை தப்பாக புரிந்துகொண்டு விட்டீர்கள், சார்!"

"ராஜா! உன்னை எனக்கு நன்ருகத் தெரியும்! வேண்டுமானுல் இந்தப் பெண்ணுக்கு உன்னைத் தெரியாமல் இருக்கலாம்..."

"என்ன சார் இது...திடீரென்று என் மேலே கோபம்... வந்து..."

"நீர் என்னிடத்தில் இனிமேல் வரவே வேண்டாம்!"—விஜயன் தன் படுக்கையையும் பையையும் எடுத்துக்கொண்டு கிளம்பினன்.

"சார்...கொஞ்சம் நில்லுங்கள்..."— அநுராதாவின் குரல் கேட்டது. விஜயனின் கால்கள் அடிபெயர்க்க முடியாமல் திணறின. அவள் மெல்ல அவனருகில் சென்ருள்.

"நேற்று இரவு உங்கள் கையிலே காயம் பட்டதற்கு மன்னித்ததுபோல இப்போது உங்கள் இதயத்தில் உண்டான காயத்துக்கும் என்னை மன்னித்து விடுங்கள்!"—அவள் மெல்ல பெருமூச்செறிந்தபடி தலை குனிந்து கொண்டாள்.

"இரண்டிலேயும் தவறுக்குக் காரணமாக நீ இருக்கவில்லையே..."

அவள் அவனுடைய முகத்தை மிகவும் சோர்வோடு பார்த்தாள்

"நீங்கள் நல்ல ரசிகர்!--நல்ல ரசிகருக்குத் தான் ரசிக்கும் பொருளில் உள்ள தவறு தெரிவதில்லை..."

விஜயன் உதட்டைக் கடித்துக்கொண்டு தலையை உசுப்பினான். அவன் அவளுடைய அழகை அணுஅணுவாக ரசித்தது என்னமோ உண்மைதான். ஆனால்... ஆனால்...?—

"உங்கள் இதயம் பால்போன்றது...ஆனால் என் நிழல் அதை பிறர் கண்ணுக்கு மதுவாக்கி விட்டது... அதற்காகவாவது நீங்கள் என்னை மன்னித்துவிடுங்கள்..."

விஜயன் மெல்லச் சிரித்தான்.

"எனக்கு உன்னை மன்னிக்கும் சக்தி இல்லை! ஆனால்..."

"ஆனால்..."—அவள் துடித்தாள்.

அவன் சற்றுநேரம் அவளை உற்றுப் பார்த்தான். அவள்—அவளுடைய—அந்த அழகு மனதிலே உருவாக்கிய இனிய கனவு...

விஜயனின் முகம் திடீரென்று தொங்கியது. அவன் மெல்ல அடியெடுத்து வைத்தான்.

"சார்..."—தழதழக்கும் அவளுடைய குரல் கேட்டது. அவன் பெருமூச்செறிந்தபடி வேகமாக நடக்க ஆரம்பித்தான். அநுராதா தன்னிரு கரங்களாலும் முகத்தை மூடிக்கொண்டு தலையை உலுக்கிக் கொண்டாள்.

"என்ன சார் கிளம்பி விட்டீர்கள்?—" அப்பாசாமி போய்க் கொண்டிருக்கும் விஜயனின் கையைப் பற்றினார். விஜயன், அவரை எரித்துவிடுபவனைப்போன்று உறுத்துப் பார்த்தான். அப்பாசாமிக்கு ஒன்றுமே புரியவில்லை!

"உங்கள் பாதை வேறு—என் பாதை வேறு. நான் வருகிறேன்!"—விஜயன் அவருடைய கையை உதறிவிட்டு வேகமாக நடந்தான். அப்பாச்சாமி ஏதோ முணு முணுத்தபடி அதிர்ச்சியடைந்து நின்றார்.

விஜயனால் அந்த இரண்டு ஆண்களையும் ரசிக்கவே முடியவில்லை. ஆனால்—

அநுராதா—?!

அவன், அவளுடைய அழகிலே உள்ளத்தை பறிகொடுத்துவிட்டான். அவள் அவனுடைய மன ஊஞ்சலிலே ஆடும் சித்திரப்பாவைதான். ஆனாலும்—அந்த அழகிய ஓவியத்திலே பூசப்பட்டிருந்த வர்ணங்கள்...—

சுழன்றடித்த சூறாவளிக் காற்று, ஏந்தித் தெளித்த மழைத் திவலைகள் பட்டு கலங்கலாக—தெளிவற்று—தென்பட்டது.

விஜயன் அவர்களை விட்டுப் பிரிந்து வெகுதூரம் போய் விட்டான்.

## 4. அநுராதாவின் ஆசை

நிம்மதி—ஓய்வு! இரண்டும் வெளிப்பார்வைக்கு ஒன்று போல தோன்றினாலும் உள்ளே மிகவும் வேறுபட்டவைகள். நிம்மதி, கடமை நிறைவிலே உண்டாகும் மனத் திருப்தி. ஓய்வு, வேலை முடிவிலே உடலை உழைக்காமல் இருக்கச் செய்து உடல் தேய்வுக்கு ஈடுகட்டிக் கொள்ளும் முயற்சி! இந்த இரண்டுக்குமுள்ள வேறுபாடு தெரியாமல் நிம்மதியாக இருக்கிறோம் என்று ஓய்விலே காலம் கழித்துக் கொண்டிருப்பவர்களும், ஓய்வாக இருக்கிறோம் என்று மனநிம்மதியோடு வேலை செய்து கொண்டிருப்பவர்களும் உண்டு.

ஆனால் விஜயனோ, இந்த இரண்டு வகையிலும் சேராமல், தனக்கென்று ஒரு தனி வழியை உண்டாக்கிக் கொண்டு, இயங்கிக் கொண்டு இருந்தான். அவனுக்கு மனதில் கொஞ்சங்கூட நிம்மதி இல்லை! ஆனால் அவன் கடுமையாக உழைத்தான். அந்த உழைப்பின் களைப்பை ஓய்வு எடுத்துக் கொள்ளாமல் வளர்த்து, மனச்சலனத்தை ஒடுக்கினான். அந்த நிலையில் தனக்கு ஏதோ நிம்மதி கிடைக்கிறதாக மனதுக்குள் எண்ணிக்கொண்டான்.

வேடிக்கையான நிலை—விந்தையான வழிமுறை!

விஜயனுக்கு அநுராதாவைப்பற்றிய எண்ணங்கள்; அவனது மன நிம்மதியைக் கெடுத்தன.

அவளை வளையவரும் ராஜாவையும், அப்பாச்சாமியையும் அவன் சந்திரனை விழுங்க யத்தனிக்கும் ராகு, கேதுக்களாக எண்ணினான். ராஜா, பாம்புத் தலையும் மனித உடலும் கொண்டவன். அப்பாச்சாமியோ, பாம்பு உடலும் மனிதத் தலையும் கொண்டவன்!

அதனால்தான் விஜயனை, சில நிமிஷ நேரத்தில் தன் பேச்சிலே விஷத்தைக் கக்கிய ராஜாவை மண்டையில்

அடித்துவிட்டும், ஒரு இரவு பூராவும் பிரயாணம் செய்தும் அப்பாச்சாமியின் பாம்பு உடல் நெளிவை புரிந்து கொள்ளாமலும் இருக்கும்படி செய்து விட்டன, அவர்களுடைய இயல்புகள்!

ஆனல்—

அநுராதா!—அவள் தன்னுடைய தன்மை பொருந்திய அழகு ஒளியிலே, அவனைச் சொக்க வைத்து, அவனைத் தன்னிடமிருக்கும் மருவினைப்பற்றி எண்ணுவதற்கே இடமில்லாமல் செய்து விட்டாள்.

அழகு, களங்கமேறி பூரணமடைவதுண்டா?—விஜயனின் மனதில் திடீரென்று ஒரு கேள்வி பிறந்தது! அந்தக் கேள்வியின் உலுக்கலிலே அவனுடைய இதயம் குலுங்கியது! அவன் இமைகளை இறுக மூடிக்கொண்டு யோசனையில் ஆழ்ந்தான்.

அவனது மனத்திரையில் காவேரி நிழலிட்டாள்!

கோதுமை நிறத்திலே பூரித்து மலர்ந்த அவளுடைய......

காவேரியின் உடல் அழகு அவனைக் கவரவில்லை! ஆனல் மகிழம்பூ மணம்போல நுண்மையாக வீசிக்கொண்டே இருக்கும் குணம்...! அந்த அழகு—

சே—! ஒரு புலனுக்குச் சுவையூட்டுவதை அழகு என்றபிறகு, மற்றொரு புலனுக்கு சுவையூட்டுவதை வேறு பெயரால் தானே அழைக்க வேண்டும்? எல்லாவற்றையுமே அழகு என்று சொல்லிவிட்டால்--!

ஏன், எல்லாவற்றையுமே அழகு என்று வைத்துக்கொண்டால் என்ன? குடியா முழுகிப் போய்விடும்?

நினைப்பு, எல்லாவற்றையும் கட்டி அணைத்துச் சொன்னலும், அவனுடைய கற்பனை மட்டும் ஒவ்வொன்றையும், தனித்தனியாக விரிவுபடுத்திப் பார்ப்பதைத்தான் விரும்பியது! ஆனல்—

அவனுடைய கற்பனையால் தன் விருப்பத்திற்கு காரணம் கற்பித்துச் சொல்ல முடியவில்லை! காரணங்கள் கற்பனைகளுக்குள் அடங்கி விடலாம்—ஆனல் கற்பனை, காரணங்களுக்குள் ஒடுங்கிவிட முடியுமா?

அவனது கற்பனை விரிந்து படர்ந்தது!

விஜயன் மெல்லக் காவேரியின் குணத்தை, அநுராதா வின் அழகு உடலிலே சிறுகச் சிறுக நுழைத்து...—

அப்போது வர்ணம் கலந்த ஓவியமாக இருந்த அநுராதாவின் சித்திரம் மெல்ல, மெல்ல அழகு பெற்று முடிவில் — பழைய அதே ஓவியம் உருவாகியது. அதில் எந்த விதமான களங்கமும் இல்லை!

அநுராதாவின் அழகில் சந்திரனொளியின் தண்மை மட்டும் ஏனோ உருவாகக் காணோம்! சுடர்தெறிக்கும் ஆதவ னின் ஒளிக்கதிர்கள் போன்று ஒரு ஜொலிப்புதான் அதில் தென்பட்டது!

அந்த ஜொலிப்பு விஜயனின் கற்பனைக் கண்களை ஒளி செய்து, நிலைதடுமாற வைத்தது!

நினைவுகள் அலைக்கரங்களால் அந்தச் சித்திரத்தை மெல்ல மெல்ல அழித்தன. புதுமை மறைந்தது! ஒன்று இரண்டாகியது!

அவனது சிந்தனைத் தராசின் இரு தட்டுகளிலும் தனித் தனியாகக் காவேரியும், அநுராதாவும் நின்றுகொண் டிருந்தனர். அந்த இருதட்டுகளில் ஏற்ற இறக்கங்கள் இம்மி கூட இல்லை! இருவரும் சமமாகவே இருந்தனர்!

காவேரிக்குச் சமமாக அநுராதா எப்படி உயர்ந்தாள்?— அது விஜயனுக்கே புரியாத ஒரு புதிர்!

காவேரி...ஒழுக்கத்தின் நிமிர்ந்த சிகரம்! ஆனால் அநுராதா?—

சிகரம் சரிந்தது, டள்ளத்தை நிரப்பி சமமாக்கி விட்டதா? அந்த ஒழுக்க சிகரத்தை எந்த சக்தி சிதைத்து சரித்தது?

கேள்விகள் தீக்கொழுந்துகளாக கிளம்பியவுடன் விஜய னின் உள்ளம் நடுங்க ஆரம்பித்தது.

'காவேரியின் உயர்வில் எந்தப் பகுதியையும் எந்தச் சக்தியாலும் அழித்துவிட முடியாது! ஆனால் தன்னுடைய மனதின் பஞ்சையான பகுதி வலுவில்லாத காரணத்தால் அவளுடைய உயர்வை தாங்கி நிற்க முடியாமல் தடுமாறு கிறது!' — விஜயன் நெட்டுயிர்த்துக்கொண்டான்.

'அநுராதா'— மீண்டும் அவள் நினைவு! அவள் பால் நிலவு போன்று விஜயனின் கற்பனை வானிலே அமுதக் கிரணங்களை பரப்பியபடியே நின்றாள்.

அவள்— அவளுடைய ஒழுக்கத்திலே படர்ந்திருந்த பாசி —நிலாவிலே மரு இருப்பது போல தெரிந்தது! விஜயன் தன் இதயத்தை இறுக்கிப் பிடித்துக்கொண்டான். ஆனாலும்—

'நிலாவிலே அந்த மரு இல்லாவிட்டால் நிலாவிற்கு இப்போது இருக்கும் இத்தனை அழகு உண்டாகியிருக்குமென்பது சந்தேகம்தான்! அதே போலவே அநுராதாவின் ஒழுக்கத்திலே தெளிந்த மருதான் அவளிடம் அவ்வளவு கவர்ச்சியை—அநுதாபத்தை— உண்டாகியிருக்கிறது!

விஜயனின் இதயம், அவனது கைப்பிடிக்கு அடங்காமல் வெறிகொண்டு ஓடியது. அவனுக்கு ஒரே சோர்வு!

விஜயன் தன் விழிகளைச் சுற்றுமுற்றும் சுழலவிட்டான்! காய்ந்த தென்னம் ஓலைகள் வேயப்பட்ட நீண்ட பந்தல், தன் வயிற்றுப்புறத்திலே வெள்ளைத் துணியைப் போர்த்திக் கொண்டு இருந்தது! அந்த வெள்ளைத் துணி போர்த்தப்பட்பிறகு பந்தலின் உட்புறம் எவ்வளவு அழகாக இருக்கிறது!? பசுமை கலந்த மஞ்சள் மூங்கில் துண்டங்கள் வர்ணக் காகிதங்களைச் சுற்றிக்கொண்டுதான் எவ்வளவு அழகாகக் காட்சியளிக்கின்றன!

மேடை — கண்களைப் பறிக்கும் வர்ண ஓவியங்களை ஏந்திக் கொண்டு நிற்கும் துணிப் படுதாக்களுக்குத்தான் எத்தனைக் கவர்ச்சி! உளுத்துப்போகும் பூவரசு மரத்துண்ட அடிப்பீடம் கூட அல்லவா சாயப்பூச்சிலே அந்திச் செவ்வானம்போல அழகுப் பிழம்பாக விளங்குகிறது!

அவன் மெல்ல நடந்து வெளியில் வந்தான்!

வெள்ளைத் தாமரை மலர்மீது அமர்ந்து வீணை இசைக்கும் பாவனையில், கலாவல்லி கருணை முகம் காட்டியபடி வாசல் முகப்பிலிருந்து அவனை வரவேற்றாள்! அவன் மெல்ல பெருமூச்செறிந்து கொண்டான்.

விஜயன் செய்ய வேண்டிய அலங்கார வேலைகள் எல்லாம் முடிந்துவிட்டன! இனி அவனுக்கு வேலையில்லை!

ஓய்வு எடுத்துக் கொள்ளலாம் என்றால் அது விஜயனுக்கு வேம்பாகக் கசந்தது! உடல் எவ்வளவு தளர்ந்து இருந்தாலும், அவன் இன்னும் வேலை செய்யத் துடித்துக்கொண்டு தான் இருந்தான்!

அவனுக்கு நிம்மதி, உண்மையிலேயே கிடைக்காவிட்டால்கூட பரவாயில்லை. நிம்மதியாக இருக்கிறேன் என்று நினைத்துக்கொள்ள ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால்கூட போதும் போல இருந்தது!

விஜயனுக்கு அவனுடைய சிருஷ்டிகளில் தவழ்ந்து கொண்டிருந்த அழகு, நிம்மதியைக் கொடுக்கவில்லை! ஒரு இனம் தெரியாத தவிப்பு அவனுடைய மனதிலே தோன்றி அவனை உலுக்கியெடுத்தது!

அழகு — கலையின் உயிர்ப்பு, இலட்சியம்—! தோம்புத் துணியையும், மரத்தையும், வாடிய தென்னங்கீற்றையும், தட்டிகளையும் அழகு படர்ந்து அவைகளின் இயல்பான அவலட்சணத்தைப் போக்குவது போல, அநுராதாவின் ஒழுக்கத்திலே படர்ந்துள்ள களங்கத்தைப் போக்க உபயோகப்படாதா?

விஜயனின் மனதிலே ஓர் ஆதங்கம்! அந்த ஆதங்கம் அவனது இதயத்தை வேர்ப் புழுவைப்போல் அரித்தது!

மண்ணிலே, உலர்ந்த மரமாகவும், காய்ந்த கீற்றாகவும் உள்ளவைகளுக்குக் கிடைக்கும் இப்பேறுகூட,| அநுராதாவுக்கு பெண்ணாகப் பிறந்ததினால் கிடைக்காமல் போய்விடும்போல் இருக்கிறதே!

அவனது இமைகள் கனத்தன! அவன் பித்தனைப்போல தள்ளாடித் தள்ளாடிக் கொண்டு சென்றான்...தள்ளாடிக் கொண்டு நடந்து போய்க்கொண்டே இருந்தான்!

அவனுக்கு எதிரில் வர்ண விளக்குகள் சுழலிட்டுக் கொண்டு இருந்தன! அந்த விளக்குகளுக்கு மத்தியிலிருந்து வர்ணச் சரங்களாக நீர்த் திவலைகள் சீறிப் பொங்கின!... அதற்குக் கொஞ்சம் தூரத்திலிருந்து 'ஹோ'வென்ற ஒரே இரைச்சல்!

அந்தக் காட்சியும், இரைச்சலும் அவனுக்குத் தன்னுணர்வை உண்டாக்கின! விஜயன் நடைப்பராக்கில் கடற் கரைக்கு வந்துவிட்டான்.

"பாம்...பாம்..." என்று அலறிக்கொண்டு குறுக்கும் நெடுக்குமாக கார்கள் ஓடின! 'சாரி...சாரி'யாக மக்கள் கூட்டம் சென்று கொண்டிருந்தது.

'ஜிலுஜிலு'வென்று வீசிய கடற்காற்று விஜயனின் உடலில் புதுத்தெம்பை ஏற்றியது. அவன் கடற்கரை அருகில் போய், கடல் ஆரவாரத்திலாவது, தனது மன ஆர வாரத்தைப் புதைக்கலாமென்று சென்றான்.

பளபளக்கும் வெள்ளி மணலில் கால்கள் புதைந்து புதைந்து கிளப்புவது விஜயனின் மனதில் ஒரு கிளு கிளுப்பை உண்டாக்கியது! அடிக்கு அடி தத்தி தத்தி கால்கள் பின்னுவது அவனுக்குக் குழந்தைகளின் தளர் நடையை நினைவுக்குக் கொண்டு வந்தது.

கடற்கரைக்கு மக்கள், கூட்டம் கூட்டமாக வருவதின் காரணம் அவனுக்குப் புரிய ஆரம்பித்தது. அவர்கள் வெறும் உப்புக்காற்றின் ஜிலுஜிலுப்பை மட்டிலும் அநுபவிக்க இங்கே வரவில்லை! கடற்கரை மணலில் அமர்ந்து தங்கள் உள்ளத் திலே இளமையை — குழந்தைத் தன்மையை — உருவாக்கி மகிழ்வதற்குத்தான் வருகிறார்கள்!

அவன் மணலில் உட்கார்ந்தான்! ஓட்டப் பந்தயத்திலே, எல்லையைத் தொட முண்டியடித்துக்கொண்டு ஓடிவரும் குழந்தைகள்போல பாய்ந்துவந்த அலைகள் கரையைத் தழுவியதும், இணைந்தும் சோர்ந்தும் திரும்பச் செல்லும் அழகை அவன் ரசித்துக் கொண்டு இருந்தான்.

"வணக்கம்...சார்!"—அநுராதாவின் குரல் போல இருந் தது. விஜயன் திடுக்கிட்டுப் பார்த்தான். அநுராதாவும், அப்பாச்சாமியும் அவனருகில் நின்று கொண்டிருந்தனர்.

"அநு .." — அவன் உதட்டிலிருந்து சொற்கள் வெளியே வர முடியாமல் தத்தளித்தன.

"நான் ஊருக்குத் திரும்புவதற்கு முன்னால் உங்களை சந்திக்க முடியாது என்றே எண்ணியிருந்தேன்! ஆனால்

எதிர்பாராமல் இங்கே உங்களைச் சந்தித்து விட்டேன்!'' — அவள் நின்று கொண்டே பேசினாள்.

"உங்கள் வேலையெல்லாம் முடிந்து விட்டதல்லவா?"— விஜயன் ஏதோ கனவு கண்டு கொண்டு பேசுபவன் போல சொன்னான். அவள் சிரித்தாள்!

''அது கிடக்கட்டும், சார்! அது முடிந்தால்தான் என்ன, முடியாவிட்டால்தான் என்ன?...ஹூம்ம்...உங்களுக்கு என் மீது மிகவும் கோபமாக இருக்கும்!''—அநுராதா அவனை ஏக்கத்தோடு பார்த்தாள்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை!''—அவன் தலை குனிந்தபடி தன் கைக் காயத்தைப் பார்த்துக்கொண்டான்! அது இன்னமும் புண்ணாகத்தான் இருந்தது. பூரணமாக குணமாகவில்லை!

அநுராதா மெல்ல அவன் எதிரில் அமர்ந்தாள்.

''என்னால் உங்களுக்கு நிரம்ப மனக்கஷ்டம்!'—அவள் மிகவும் கவலையோடு சொன்னாள். விஜயன் அவளுடைய முகத்தைப் பார்த்தான். அவளுடைய முகத்திலே தென்பட்ட கவலைக்குறிகள் வெறும் நடிப்புத் தோற்றமல்ல!

"நான் இன்று இரவு ஊருக்குத் திரும்பிப் போகிறேன். அதற்கு முன்னால்...நீங்கள்...உங்கள் மன்னிப்பு கிடைத்தால்..." — அவளுடைய விழிகளிலே நீர்த்துளிகள் மின்னின!

"அநு..." — ஏதோ பெரிய தவறைச் செய்து விட்டவன் போல தன் உதட்டைக் கடித்துக் கொண்டான்.

அவள் ஒரு வரண்ட சிரிப்பை உதிர்த்தாள்!

"எத்தனையோ இதயமற்றவர்கள், அடிமைச் சிறுநாயை அழைப்பதுபோல என்னை 'அநு...அநு' வென்று உதட்டைச் சப்பிக்கொண்டு கூப்பிடும்போது, உங்களைப் போன்ற ஒருவர் என்னைக் கூப்பிடுவதில் தவறு ஒன்றுமில்லை! நீங்கள் தாராளமாக என்னைப் பெயர் சொல்லியே கூப்பிடுங்கள்!''

அவளுடைய பேச்சு அவனுக்கு வேதனையை அளித்தது!

"நான்தான் உன் மனதைப் புண்படுத்திக்கொண்டே வருகிறேன்! ஆனால்...எனக்கு, உன செய்கைகளின் பொருள் புரிவதில்லை. நான் ஒரு முட்டாள்..."

"இல்லை...இல்லை! நீங்கள் ஒருவர்தான் இந்த உலகத்தில் இதயமுள்ளவர்!" — அவள் படபடப்போடு சொன்னாள். விஜயனின் உடலிலே ஒரு விவரிக்க இயலாத புல்லரிப்பு!

"அநுராதா..." — அவன் குரல் தழுதழுத்தது!

"நான் இதுவரையில் பல தவறுகள் செய்திருக்கிறேன். ஆனால் அதற்காக இன்று வரையில் நான் யாரிடமும் மன்னிப்புக் கேட்டதே கிடையாது! ஆனால்...இப்போது உங்களிடம் மன்னிப்புக் கேட்கிறேன். காரணம் நீங்கள் ஒருவர்தான் என்னை மன்னிக்கும் சக்தி படைத்தவராக எனக்குத் தென்படுகிறீர்கள்!"

"இல்லை ..உன்னை மன்னிக்கும் சக்தி என்னிடம் இல்லவே இல்லை!"

"ஆமாம் உங்களிடம் மன்னிக்கும் சக்தி இருக்க முடியாதுதான்...உங்கள் இதயம், விண்ணிலே பறந்து கொண்டிருப்பது...' —அநுராதா தன் இமையை இறுக மூடித் தலையை உசுப்பினாள்!

விஜயன் ஒன்றும் புரியாமல் விழித்தான்.

"மண்ணிலே நின்று கொண்டிருக்கும் இதயம் வேண்டுமானால் மன்னிக்கும்...ஆனால் விண்ணிலே பறக்கும் இதயமோ...மன்னிப்பது கிடையாது...மன்னிக்க வேண்டிய பொருளைக்கூட வாழ்த்திவிடும்..."—அவள் தன்னுடைய நெற்றிப் பொட்டுகளை அழுத்திக் கொண்டாள்.

"நீ...நீ...என்னை மிகவும் புகழ்கிறாய்...!"

"இல்லை...உண்மையைத்தான் சொன்னேன்! இந்த உண்மை தெரிந்து இருந்தும் நான்தான் வீணாக மனதை அலட்டிக் கொண்டு விட்டேன்! என்ன செய்வது? நான் நிற்பதுவோ...பூமிக்கு அடியில் உள்ள கனிப் பொருள்களிலே இதயங்களை அடைத்து வைத்துவிட்டு உலாவிக் கொண்டிருக்கும் மனிதக் கூடுகளுக்கு மத்தியில்! என்றால் உங்கள் இதயம் மண்மேல்தான் இருப்பதாக கற்பனை செய்ய முடிந்தது! அதற்காக என்னை மன்னித்து விடுங்கள்!"

"அநுராதா..."—விஜயன் தன் கண்களைப் பொத்திக் கொண்டு தலையை உலுக்கிக் கொண்டான்! அவனுடைய உடலெல்லாம் ஒரு மெல்லிய நடுக்கம் பரவியது!

"நான் போய் வருகிறேன் சார்!"

விஜயன் அவளை ஏறிட்டுப் பார்த்தான்.

"அதற்குள்ளாகவா கிளம்பிவிட்டாய், அநுராதா?"—அவனுடைய மனதிலே ஒரு விவரிக்க இயலாத 'பரிவு' உணர்ச்சி உண்டாகியது.

"நான் தேடிவந்த நிம்மதி கிடைத்து விட்டது...இனி போகவேண்டியதுதானே?"—அவள் எழுந்தாள்.

அவளுக்கு நிம்மதி கிடைத்து விட்டது. ஆனால் அவனுக்கோ?...

"உட்கார் அநுராதா...உன்னிடம் நான் ஒரு செய்தி கேட்க வேண்டும்?"

"என்னிடமா?"—அவள் விழிகள் அகல விரிந்தன!

"நீ எதற்கு ராஜாவைத் தேடிக்கொண்டு சென்னைக்கு வந்தாய் அநுராதா?"—விஜயன் மிகவும் பரிவோடு கேட்டான்.

"காக்கை சுடுகாட்டில் பிணத்தை எதற்கு தேடிக் கொண்டு போகிறது? அதே காரணம்தான் இதற்கும்..."—அநுராதா விரக்தியோடு சிரித்தாள்.

"ராஜா...பிணமாக இருக்கலாம் — ஆனல் நீ...காக்கையல்ல...!"— அவன் ஆதரவோடு அவளைப் பார்த்தான்.

"நான் காக்கையில்லையென்றால்—பிணமாக வைத்துக் கொள்ளுங்கள்!" அவள் சாதாரணமாகச் சொன்னாள்.

"அநுராதா..."— விஜயன் அதிர்ச்சியடைந்தவனாக விழித்தான்!

"அதெல்லாம் ஒன்றுமில்லை சார்! அந்த ராஜா, அநுராதாவுக்கு, 'சினிமாவில் சான்ஸ்' வாங்கித் தருகிறேன் என்று வரச் சொல்லியிருந்தார்...ஆனல் அந்த ஆள் இப்போது கையை விரித்து விட்டார்!"—அப்பாச்சாமி அவர்களிருவருடைய பேச்சில் குறுக்கிட்டுச் சொன்னார்.

விஜயன் அவரை எரித்து விடுபவன் போல பார்த்தான். அவனுக்கு அப்பாச்சாமிமீது ஒரே வெறுப்பு! அந்த ஆள் பேச்சில் குறுக்கிட்டதை அவன் விரும்பவே இல்லை

ஆனாலும் அப்பாச்சாமி சொன்ன செய்திகள்...!—விஜயன் அநுராதாவின் முகத்தைப் பார்த்தான்! அவள், மணலை விரல்களால் கிளறியபடி நின்றாள்.

"அநுராதா...நீ உண்மையாகவே இதற்காகத்தானா சென்னைக்கு வந்தாய்?"—அவன் குரலிலே ஏக்கம் கவிந்து இருந்தது.

"ஆமாம்...! நான் மனதுக்குள் ஆயிரம் ஆயிரம் கனவுகள் கண்டு கொண்டிருப்பவள்...அந்தக் கனவுகள் நிறைவேற சினிமாவில் நுழைவதைத்தான் முதல்படியாக எண்ணிக் கொண்டிருக்கிறேன்!"

"நீ சினிமாவில் சேர்வதற்கும், இந்த வெறும் பயல் ராஜாவைத் துணை தேடி வந்து சேர்ந்ததற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது...?"

"சம்பந்தமா...?...இஹ்ஹிஹ்ஹிம்...என்ன இருந்தாலும் ராஜா பழைய கால நட்சத்திரம் என்பதை நீங்கள் மறந்து விட்டீர்களே? அந்த பழைய செல்வாக்கை உபயோகப்படுத்தி என்னை சினிமாவில் சேர்த்துவிடுவார் என்ற 'நப்பாசை'யில் தான் நான் வந்தேன்!"

விஜயன் அவள் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு ஆழ்ந்த யோசனையில் மூழ்கினான். ராஜாவின் தற்போதைய நிலை அவனுக்கு நன்றாகத் தெரியும்! அவனுக்குச் சினிமா உலகில் ஒரு செப்புக்காசுக்குக்கூட மதிப்பில்லை! அவனே, தனக்கு சினிமாவில் ஒரு சந்தர்ப்பம் பெறுவதற்கு தாளம் போட்டுக் கொண்டு இருக்கும்போது, அநுராதாவுக்கு அவனால் என்ன உதவியை செய்துவிட முடியும்!

பாவம்...அநுராதா! அவள் மிகவும் ஆவலோடு சென்னை வந்து பெரிய ஏமாற்றத்தில் முழுகிப் போய்விட்டாள்!

"ராஜா...அநுராதாவைப்பற்றி தினு சோனு ராவன்னு கிட்டேகூட சொன்னாராம்...அவாகூட ஏதோ, அப்புறம் சந்தர்ப்பம் இருந்தால் சொல்வதாக, சொன்னதாக என்கிட்டம் சொன்னார்"—அப்பாச்சாமி பயந்தபடி சொன்னார்.

விஜயன் 'கல கல'வென்று சிரித்தான்.

"அநுராதாவைப்பற்றி ராஜா எங்கள் முதலாளிகிட்டே வந்து சொன்னானு?...மிகவும் வேடிக்கையாக இருக்கிறதே...

நீங்கள் சொல்லுவது? அவன் தனக்கு அவர் வீட்டுக் கல்யாணத்தில் ஒரு கச்சேரிக்குச் சந்தர்ப்பம் கொடுக்க வேண்டுமென்றல்லவா வந்து கேட்டான்."

அநுராதாவும், அப்பாச்சாமியும் ஒருவர் முகத்தை மற்றொருவர் பார்த்துக் கொண்டனர்.

"என்ன அப்படியா அவர் வந்து கேட்டார்? அவர் வந்து, உங்கள் முதலாளி ஒரு கச்சேரி செய்ய தன்னை வலிய வேண்டிக் கொண்டதாக அல்லவா சொன்னார்..."— ஆச்சரியத்தோடு கேட்டாள்.

"அப்புறம் அவன் என்ன சொன்னான்?"—விஜயன் அவளிடம் சிரித்துக்கொண்டே கேட்டான்.

"என்னமோ......உங்கள் முதலாளி என்னைப்பற்றிய செய்தியில் தட்டிக் கழித்ததுபோலப் பேசியதினாலேயே அந்தக் கச்சேரியே தனக்கு வேண்டாம் என்று சொல்லி விட்டு வந்ததாகச் சொன்னார்! அதெல்லாம் உண்மை யில்லையா...!?"—அவள் அவனை ஒன்றும் புரியாதவளாக உற்றுப் பார்த்தாள்.

"அவன் உன்னிடத்தில் மிகவும் சாமர்த்தியமாகத்தான் 'தியாகி' வேஷம் போட்டு இருக்கிறான்...ஹூம்..."—அவன் சற்றுப் பேச்சை நிறுத்தினான். அநுராதா அவனது உதடு களிலிருந்து வெளிக் கிளம்ப இருக்கும் சொற்களை மிகவும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

விஜயன் பேச ஆரம்பித்தான்:

"இப்போதைய நிலையில் இந்தக் கச்சேரி அவனுக்கு ஏற்பாடு ஆகி இருந்தால் அவனுடைய பதினைந்து நாள் பொழுதாவது கடன் வாங்காமல் நிம்மதியாகக் கழிக்க ஒரு வசதி ஏற்பட்டு இருக்கும்! ஆனால்......என்னுடைய முதலாளிக்கு அவனுடைய டம்பச் செய்கைகளும், சூழ்ச்சி வேலைகளும் கொஞ்சங்கூடப் பிடிக்கவே பிடிக்காது! அதனால் தான் அவன் வலிய வந்து கேட்டும்கூட அவனுக்கு அவர் இடமே கொடுக்கவில்லை...ஒரேயடியாக கொடுக்க முடியாது என்று மறுத்து விட்டார்! அவன் மிகவும் கெஞ்சியபடி என் முதலாளியிடம் கேட்டது...அவர் மறுத்தது எல்லாவற்றை யும் நான் என்னுடைய இரு கண்களாலேயே பார்த்துக்

கொண்டிருந்தேன். அவன் உன் விஷயமாக ஒரு வார்த்தை கூட அவரிடம் சொல்லவில்லை..."

"அட...அயோக்கியப் பயலே..."—அப்பாச்சாமி முணு முணுத்தது விஜயனின் செவிகளில் விழுந்தது! விஜயன் அவனைக் கோபம் பொங்கப் பார்த்தான்.

இதே அப்பாச்சாமி அந்த ராஜாவிடம் 'எடுபிடி' ஆள் போல சொன்னச் சொல்லைக் கேட்டுக்கொண்டு புகைவண்டி நிலயத்தில் ஓடியதை அவன் மறக்கவே இல்லை! அப்போது அவனால் காரியம் ஆக வேண்டும் என்று குழைந்த அப்பாச் சாமி இப்போது அவன் 'சுயகாரியப் புலி' என்பதை அறிந்து அவனுக்கு 'அயோக்கிய'ப் பட்டம் கட்டுவதென்றால்...? இந்த அப்பாச்சாமி அந்தச் சமயத்தில் காரியம் ஆக வேண்டும் என்றுதானே வேஷம் போட்டான். அந்த வகையில் பார்த்தால் இவனும் சுயகாரியப்புலி—அயோக் கியன் தானே!

ஈயத்தைப் பார்த்து பித்தளை அழகு காட்டுவதில் அர்த்தம் என்ன இருக்கிறது?

"ஹூம்...! இந்த வேடிக்கையான உலகில் எனக்குக் கிடைக்கும் விசித்திர அனுபவங்களின் எண்ணிக்கையில் ஒன்று அதிகமாகக் கணக்கில் ஏறியிருக்கிறது!"—அவள் தன் னுடைய ஏமாற்றத்தை 'கலகல'வென்ற சிரிப்பிலே மறைக்க முயற்சித்தாள். ஆனால்...அந்த ஏமாற்றம் அவளுடைய விழி களிலே ஒட்டிக்கொண்டுதான் இருந்தது.

விஜயனுக்கு திடீரென்று ஒருயோசனை 'பளிச்'சிட்டது!

"அநுராதா...நான் ஒன்று சொல்லுகிறேன்...கேட் கிறாயா?"

"நீங்களும் யாரிடமாவது சொல்லி என்னைச் சினிமாவில் சேர்த்துவிட யோசிக்கிறீர்களா?"

"இல்லை அநுராதா! அது என்னால் முடியும் காரியமல்ல. ...ஆனால் என்னால் உனக்குச் செய்யக்கூடிய ஒரே ஒரு உதவி மாத்திரம் இருக்கிறது!...என் முதலாளி வீட்டுக் கல்யாணத் தில் உன் நடனத்துக்கு ஒரு இடம் கிடைக்க மாத்திரம் என்னால் செய்ய முடியும்!"

"அது போதுமே! அந்தக் கல்யாணத்துக்கு எத்தனை எத்தனை பட முதலாளிகள் வருவார்கள்...சந்தர்ப்ப வசமாக யாராவது ஒரு ஆளிடம் அறிமுகமானால் அவரைப் பிடித்துக் கொண்டு சினிமா உலகில் நுழைந்து விடலாமே..."—அப்பாச்சாமி மிகவும் 'குஷி'யாகச் சொன்னான்.

அநுராதா அவனை ஆத்திரத்தோடு பார்த்தாள். அவன் பெட்டிப் பாம்பானான்!

"மன்னித்துக் கொள்ளுங்கள், சார்! நீங்கள் எனக்கு உதவி செய்ய முனைந்தால், உங்களுடைய நல்ல பெயரும் வீணாகிவிடும். அனாவஸ்யமாக உங்களுக்கு..."

"அநுராதா...என்னைப்பற்றி என் முதலாளிக்கு நன்றாகத் தெரியும்! அவர் என்மேல் எள்ளளவும் சந்தேகம் கொள்ள மாட்டார்!...அவருக்கு என்னிடத்தில் ஒரு மரியாதையே உண்டு...அதனால்தான் இப்போது நான் அவரிடம் வேலை செய்யாமல் தனியாக—சுயேச்சையாக—இருந்தபோதிலும் எனக்கு ஒரு முக்கியத்துவம் கொடுத்துக்கொண்டே இருக்கிறார்!"

"சார்..."—அநுராதாவின் குரல் தடுமாறியது.

"உன்னுடைய நடனத்தைப் பார்க்க வேண்டும் என்பது என் ஆசை! அந்த ஆசை இந்தக் கல்யாணத்தில் நடனமாடினால்தான் நிறைவேறும். எனக்காக நீ இங்கே ஆடித் தான் ஆக வேண்டும்..."

அநுராதா தலையை உலுக்கிக்கொண்டு, உதட்டைக் கடித்துக்கொண்டாள்.

"ஒன்றும் யோசனை செய்ய வேண்டாம்...சரியென்று சொல் அநுராதா..."—அவன், அவளுடைய ஒப்புதலை எதிர் பார்த்து விழிகளை விரித்தபடி பார்த்துக் கொண்டிருந்தான்.

"ஊம்..."— ஒரு மெல்லிய முனகலோடு அவளுடைய தலை ஆடியது! அவனது முகத்திலே மகிழ்ச்சி கூத்தாடியது!

திருமணப்பந்தல் எள் போட்டால் விழாத நிலையில் கூட்டம் நெருக்கிக்கொண்டிருந்தது. திரைப்பட உலகப் பிரமுகர்கள், நகர முக்கியஸ்தர்கள், கலைஞர்கள் முன்வரிசை

யிலே போடப்பட்டிருந்த நாற்காலிகளில் அமர்ந்தபடி மேடையையே பார்த்துக்கொண்டிருந்தனர்.

விஜயன் மன'பதைபதைப்போடு' அநுராதாவின் நடன ஆரம்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான் !

அவனுக்கு ஒரே கவலை! அநுராதா நல்ல முறையில் நடனமாடி, தான் முதலாளியிடம் கேட்டு அவள் ஆடுவதற்கு அநுமதி வாங்கியதற்கு ஒரு மரியாதை உண்டாக்க வேண்டுமே என்று எண்ணிக் கொண்டிருந்தான்.

அந்தக் கல்யாணத்தில் தங்கள் திறமையைக் காட்ட ஒவ்வொரு பாடக, பாடகியரும், நடனக்காரர்களும் ரொம்ப ரொம்ப முயற்சி செய்து பார்த்தார்கள். ஆனால் அங்கே இடம் பெற்றவர்கள் மிகவும் கொஞ்சமானவர்களே! எண்ணிக்கை கொஞ்சமாக இருந்தாலும் திறமையில் மிக மிகச் சிறந்தவர்கள்!

அநுராதாவுக்கு அங்கே இடம் கிடைத்ததன் முக்கியக் காரணம் விஜயனின் சிபாரிசுதான்! சிபாரிசு செய்தவனுக்கு, இந்தச் சிறந்த சபையில் அநுராதா நல்ல முறையில் நடனமாடி, பெயர் வாங்க வேண்டுமே என்ற பயம் கலந்த கவலை இருக்காதா, என்ன ?

விஜயனும் அநுராதாவின் நடனத்தை இதற்கு முன்னர் பார்த்ததே கிடையாது. அவன் மனத்திலே ஒரு வகை ஆவலும், அந்தப் பயத்துக்கும் கவலைக்கும் மத்தியில் இருந்தது.

பின்னணி இசைக்காரர்கள் இசைச் கருவிகளை மீட்டினர். விஜயன் வெறிக்கப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தான்.

'ஜல்...ஜல்'...சலங்கை கொஞ்சியது. ஜதிகள் பேசின. திரை விலகியது!

உடலை வில்லாக வளைத்தபடி நெஞ்சுக்கு நேராக இரு கைகளாலும் ஒரு அழகிய தீபத்தை ஏந்தியபடி அநுராதா பதுமைபோல் இருந்தாள்!

" தீப மங்கள ஜோதி நமோ நமோ......
தூய அம்பல லீலா நமோ நமோ
தேவகுஞ்சரி பாகா நமோ நமோ!
—அருள்தாராய் !"

பின்னணியில் புல்லாங்குழல் குரலில் இசை கிளம்பி வெளி வந்தது.

பொற்பதுமை உயிர் பெற்று அசைவது போன்று அநுராதா தலையை நிமிர்த்தித் தன்னிரு கரங்களில் ஏந்தியுள்ள தீபத்தைத் தலைக்குமேல் உயர்த்திக் கொண்டு போனாள்...அந்தக் கரங்களில்தான் எவ்வளவு நெளிவு குழைவு!

'தட...தட' — சபையோர்களும் கைதட்டி ஆரவாரித்தனர். விஜயனுக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை! அநுராதா எடுத்த எடுப்பிலேயே தன்னுடைய நடனத்தால் எல்லோரையும் கவர்ந்து விட்டாள்.

இனிய பாடலோடு அழகிய ஆடல்—நாதமயக்கிலே ஜோதி துடிப்பது போல—தென்றல் காற்றின் அசைவிலே தேன்சிட்டின் இறகுகள் படபடப்பது போல—...இணைந்து ஒன்றாகி விருந்துருக்கொண்டது!

'கலீர்...கலீர்' என்று சலங்கைகள் தாளங்களைத் தழுவ, அசைவுகள் பாடலின் பொருளை உணர்த்த, முகம் உணர்ச்சி பாவங்களை வெளிப்படுத்த அவள் சுழன்று சுழன்றாடினாள்! அந்த சுழற்சியிலே—

விழிபடைத்தவர்கள் இமையா நிலையடைந்து தேவர்கள் ஆயினர்—இதயம் படைத்தவர்கள் ஆரவாரிக்கும் கடலில் அமைதி நாதத்தைக் காணும் அற்புத சித்தர்கள் ஆயினர்!

அமைதி—எங்கும் நிசப்தம்—ஆனால் அதனிடையிலும் கூட எத்தனை ஓசையற்ற ஊமைக்கதைகள்!

பாடல் முடிந்தது—ஆடல் நின்றது—திரை விழுந்தது!

மடை திறந்த வெள்ள ஒலி போன்ற மகிழ்ச்சி ஆரவாரம் பிறந்தது! விஜயன் நெஞ்சை உயர்த்திக் கொண்டு, தலை நிமிர்ந்தபடி சபையினரைப் பார்த்தான். அவனுடைய பார்வையிலே ஒரு கர்வம் கவிந்திருந்தது!

விஜயன் எதிர்பார்த்ததற்கு மேலாகவே, அநுராதாவின் ஆடலில் சிறப்பு இருந்தது. அழகு உடம்பு ஆடலின் கலை உருவங்களை வெளிக்காட்டும்போது ஆடலும் உயர்வு பெற்றது—அவளது அழகிலும் மெருகேறியது!

அலாரிப்பு— ஜதிஸ்வரங்கள்— தில்லானு...— அடுக்கடுக்காக அவள் ஆடினுள்! ஒவ்வொன்றிலும் அவள் பெற்றிருந்த பயிற்சியின் தேர்ச்சி, கவர்ச்சிகரமாக வெளிப்பட்டுக் கொண்டே இருந்தது!

திடீரென்று—

அநுராதா...ராதையாக வேஷமணிந்து ஒய்யாரமாக ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருந்தாள். பின்னணியில் இனிமையான வேணுகானம் கேட்டது! அந்த கானத்தின் கவர்ச்சியிலே அவள் பித்தேறியவளாக...மெய்மறந்தவளாக ஊஞ்சலிலிருந்து இறங்கி...அந்த இசை வரும் திசையை நோக்கி ஏக்கம் ததும்பும் விழிகளோடு பார்த்தபடி...காற்றிலே மிதப்பவள்போல் அடிமேல் அடிவைத்து நடைபயின்ருள்...

விஜயனின் உள்ளம் களிவெறி கொண்டு ஆடியது!

'காதலெனும் தீவினிலே—...'பின்னணியில் பாடல் துவங்கியது. அதற்குப் பின்னர் அநுராதா மேடையிலிருந்து மறைந்து விட்டாள். அங்கே நின்றது—ஆடியது, கண்ணனின் காதலி ராதை—ராதையேதான்!

அந்த ராதை...அந்த ராதையின் மேல் எடுப்பாகிய அநுராதை...

விஜயன் இமைகளை இறுக மூடிக்கொண்டு மெய்ம்மறந்து விட்டான். அவள், அவனுடைய உள்ளத்திலே ஆட ஆரம்பித்து விட்டாள்.

மீண்டும் அவன் கண் திறந்தபோது...—

அநுராதா ஊஞ்சலில் வேகமாக ஆடிக் கொண்டிருந்தாள். வானவில்லின் ஒளி ஜாலங்கள் அவள் உடலெங்கும் பட்டுப்பட்டுத் தெறித்துச் சிதறின! காற்றிலே படபடக்கும் அவளது ஆடைகள்—காதலின் துடி துடிப்பைக் கண்முன்னே நிறுத்திக் காட்டின! ஊஞ்சலின் ஆட்டம்—உச்சகட்டத்திற்குச் சென்றது. அவள் அந்தரத்து கந்தர்வக் கன்னிகை போல வானவிதானத்திலே தொங்கிய நட்சத்திர ஊஞ்சலிலே சந்திரனின் அமுதக்கிரண வெள்ளத்திலே ஆடிக் கொண்டிருந்தாள்...

"பட்"— எங்கும் ஒரே இருள்! விஜயன் திடுக்கிட்டான். மறுவிநாடி விளக்குகள் தானுகவே எரிந்தன! எல்லாம்

மறைந்து விட்டன! அவன் எதிரில் வர்ணத்திரைதான் தொங்கிக் கொண்டிருந்தது.

அவனுக்கு ஓரே சோர்வு! ஆனால்—

கூட்டமாகப் பறக்கும்போது புறாச்சிறகுகள் படபடப்பது போன்று ஒரு ஆரவாரம் அவனைச் சுற்றி வளைத்துக் கொண்டிருந்தது.

யாரோ ஒருவன் ஒலி பெருக்கியில் அடுத்து நிகழ இருப்பது 'மங்களம்' என்று அறிவித்தான். விஜயன் பரபரப்போடு மேடைக்குள் செல்ல எழுந்தான். ஒரு கரம் அவனது தோளைப் பிடித்து அழுத்தியது. திரும்பிப் பார்த்தான். அவனுடைய முதலாளி பக்கத்தில் நின்று கொண்டிருந்தார்.

"விஜய்! உன்னுடைய ஏற்பாடு பிரமாதம்...நடனம் நன்றாக இருந்தது! இதை அந்தப் பெண்ணுக்கு என்னுடைய சன்மானமாகக் கொடுத்து விடு!"—அவர் ஒரு 'செக்கை' நீட்டினார். விஜயன் அதை வாங்கிப் பார்த்தான்.

1001 ரூபாய்கள்—இரண்டு ஒன்றுகளுக்கு மத்தியில் இரண்டு வட்டங்கள்! அவன் கண்கள் வியப்பால் விரிந்தன! அவர் மெல்லச் சிரித்துக்கொண்டார். அவருடைய விரல்கள் லேசாக அவனுடைய் முதுகில் தட்டிக் கொடுத்தன.

"ரொம்ப நன்றி, சார்!"—அதற்குமேல் அவனால் பேசவே முடியவில்லை!

"சரி...அவர்களுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விட்டு உடனே வந்துவிடு! ஹூம்ம்..."—அவனுடைய பதிலுக்குக் காத்திராமல் அவர் நகர்ந்தார். பெருந்தன்மை அவருடைய தனிப்பெரும் சிறப்பு!

விஜயன் மேடைக்குப் பின்வழியாக உள்ளே நுழைவதற்கும், நடனக் கச்சேரி முடிவதற்கும் சரியாக இருந்தது!

அநுராதா வேஷம் கலைக்கும் அறையில் நின்று கொண்டிருந்தாள். அப்பாச்சாமி அவளோடு ஏதோ சிரித்துப் பேசிக் கொண்டிருந்தான்.

அநுராதா விஜயன் வருவதைப் பார்த்தாள்.

"சார்"—அவள் குரலில் மகிழ்ச்சி துளும்பியது. அவள் மான்குட்டி போல துள்ளிக் கொண்டு அவனருகில் ஓடி வந்தாள். அவனுக்குப் பெருமிதம் தாங்க முடியவில்லை!

"அநுராதா...இன்று ஆட்டம் வெகு பிரமாதம்! நீ ஆடிய ராதை நடனம் என் கண்ணுக்குள்ளேயே நிற்கிறது!"

அவள் புகழின், கனம் தாளாமல் தலை குனிந்தாள்.

"என்னுடைய நடனம் இன்று நன்றாக அமைந்தது என்றால் அதற்கு நீங்கள்தான் காரணம்..."—அவள் நாணம் கலந்த குரலில் சொன்னாள்.

"ஏன் அநுராதா...இன்று நீ எனக்காக ஆடியதால், இவ்வளவு அழகாக அமைந்தது என்று சொல்லுகிறாயா?"

"அதுவும் ஒரு காரணம்தான்—ஆனால் அதைவிட முக்கிய மான காரணம் ஆடும் அரங்கத்தை நீங்கள் அமைத்திருந்த முறைதான்! அடடா...அங்குலத்துக்கு அங்குலம் உங்களின் கை வண்ணம் ஒளிவிட்டுக் கொண்டிருந்தது. சூழ்நிலை விளக்கத்திற்கென்று நீங்கள் வரைந்து தொங்கவிட்டிருந்த திரைத் துணிகள் ஒவ்வொன்றும்...அப்பப்பா...! உங்கள் கற்பனை...அதைப் புகழ எனக்குச் சக்தியே இல்லை! இது போன்ற ஒரு அரங்கம் அமைந்தால் ஆடத் தெரியாத குழந்தைகூட உணர்ச்சி பெற்று ஆட ஆரம்பித்துவிடும்!"

விஜயன் மெல்லச் சிரித்தான்.

"என் வாயை அடைக்க நீ கையாளும் தந்திரம் மிகவும் நன்றாக இருக்கிறது!"—அவன் குரலில் கேலி நிறைந்து இருந்தது.

"தந்திரமா?"—அவள் திடுக்கிட்டவளாக அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

"பிறகு என்ன? நீ என்னை நேரடியாகவே 'என்னைப் புகழ்ந்து பேசாதே' என்று சொல்லி விடுவதுதானே! எதற்கு இப்படி ஒரேயடியாகப் புகழ்ந்து என்னைப் பேசவொட்டாமல் செய்கிறாய்?"

அநுராதா 'கலகல'வென்று சிரித்தாள். விஜயனும் சிரித்தான். அப்பாச்சாமி வாயெல்லாம் பல்லாகத் தெரிந்தது!

"ஹூம்ம்...மறந்து விட்டேனே! உனக்கு இதை முதலாளி 'சன்மானமாக' கொடுக்கச் சொன்னார்!"—விஜயன் ஏதோ நினைவு வந்தவன் போல 'செக்'கை அவளிடம் கொடுத்தான்.

அப்பாச்சாமியின் 'கழுகுக் கண்கள்' 'செக்'கில் உள்ள தொகையைக் கூர்ந்து கவனித்தன!

"ஆயிரத்தோரு ரூபாய்...ஹா..."— அவன் வாயைப் பிளந்தான்! அநுராதாவின் நெற்றியிலே சிந்தனை வரிக் கோலம் தீட்டியது! அவள்—

அவள் திடீரென்று விஜயனின் பாதங்களில் விழுந்து வணங்கினாள். விஜயனுக்குத் தூக்கி வாரிப் போட்டது!

"அநுராதா...இதெல்லாம் என்ன?"—அவன் திடுக்கிட்டபடி கேட்டான்.

"இது என்னுடைய ஆசை..."—அவள் அந்தச் 'செக்'கை அவனுடைய காலடியில் வைத்தாள். விஜயன் பரக்கப் பரக்க விழித்தான்!

"அநு...இது உனக்கு வந்த சன்மானம்!"

"ஆமாம்...நீங்கள் எனக்கு உண்டாக்கிய தகுதியால் கிடைத்தது. இதை நீங்கள்தான் வைத்துக் கொள்ள வேண்டும். இது என்னுடைய அன்புக் காணிக்கை!"

"அநுராதா..."—அப்பாச்சாமி அவளை எரித்து விடுபவன் போல பார்த்தான்! ஆனால் விஜயனோ பெருமூச்செறிந்தபடி மௌனமாக நின்றான்.

அநுராதா அப்பாச்சாமியை அலட்சியமாகப் பார்த்து விட்டு விஜயன் பக்கம் திரும்பினாள்!

"ஏன் சார்...! என் காணிக்கையை ஏற்றுக்கொள்ள ஏன் தயங்குகிறீர்கள்? இது...என் கலைக்குச் சன்மானமாக வந்தது......இதில் எந்தவிதமான தோஷமும் இருக்க முடியாது......"—விஜயனின் உள்ளத்தில் சாட்டையடி விழுந்தது.

விஜயன் அவளை ஏறிட்டுப் பார்த்தான். அவனுடைய கண்கள் கலங்கின.

"அநுராதா...எனக்கு இந்தக் காணிக்கை போதாது. இதைவிடப் பெரிய காணிக்கையை உன்னிடமிருந்து எதிர் பார்க்கிறேன். இதை நீயே வைத்துக் கொள்!"—அந்தச் 'செக்'கை எடுத்து அவளுடைய கையிலேயே திணித்தான். அவள் தலை குனிந்தாள். அப்பாச்சாமி ஆயிரத்தோரு

ரூபாய் மீண்டும் அநுராதாவின் கையில் ஏறியதைக் கண்டு நிம்மதியாகப் பெருமூச்செறிந்தான்.

"கடையில் நீங்கள் என் ஆசையை..."—அவள் மெல்ல தேம்பினாள்.

"ஏன் அநுராதா வீணாக மனதை அலட்டிக் கொள்கிறாய்! என்றாவது ஒரு நாள் உன்னிடமிருந்து...மிக மிக உயர்ந்த ஒன்றைக் காணிக்கையாகப் பெற்றுக் கொள்கிறேன்..."—அவன் சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டு வேகமாக நடந்தான்.

விஜயன் போவதை அவள் ஏங்கும் விழிகளால் பார்த்துக் கொண்டே இருந்தாள். அவளுடைய கையில் இருந்த 'செக்' மெல்ல நழுவி கீழே விழுந்தது.

கோழிக்குஞ்சைப் பருந்து கவ்வுவது போல அதை யெடுத்து அப்பாச்சாமி தன் சட்டைப் பைக்குள் பத்திரப் படுத்திக் கொண்டான்.

அவர்கள் இருவருடைய இதயங்களிலிருந்தும் பெருமூச்சுக்கள் வெடித்துக் கொண்டு வெளி வந்தன. ஒன்றிலே நிம்மதி நிறைந்திருந்தது—மற்றொன்றிலே ஏக்கம் விரவிக் கிடந்தது.

## 5. விஷப்பரீட்சை

வீடு திரும்பிய விஜயனுக்கு ஒரு விநோதமான செய்தி வரவேற்பளிக்கக் காத்துக் கொண்டிருந்தது.

காவேரியும், நாராயணனுடைய அம்மாவும் அவனுக்காக வழிமேல் விழி வைத்து காத்துக் கொண்டிருந்தனர். விஜயனைக் கண்டதும் நாராயணனுடைய அம்மாவுக்கு அழுகை பொத்துக்கொண்டு வந்து விட்டது! விஜயன், அவர்களுடைய அழுகையின் காரணம் தெரியாமல் விழித்தான்.

காவேரி மெல்ல விவரத்தைச் சொன்னாள். அவள் சொன்னதின் சாரம்: நாராயணனுடைய அம்மா நாராயணனுக்குப் பெண் பார்ப்பதற்கு இன்னொருவரை

துணைக்கு அழைத்துக் கொண்டு சென்றார்களாம்! பெண் அவர்களுக்குப் பிடித்து விட்டது. அந்த அம்மாவுடன் கூடச் சென்றவர் 'மாப்பிள்ளைப் பையனை' பெண் பார்க்க அனுப்பி வைக்கிறோம். இப்போது நாங்கள் ஊரிலிருந்து பெண் பார்க்க வந்ததற்கு ஏழு ரூபாய் வழிச் செலவு ஆகிவிட்டது. அந்தப் பணத்தை நீங்கள்தான் கொடுக்க வேண்டும் என்று கண்டிப்பாகப் பேசி, அந்தப் பணத்தை வாங்கி இந்த அம்மாளிடம் கொடுத்து விட்டார். இந்த விபரம் நாராயண னுக்குத் தெரிந்து அவன் தன் அம்மாமேல் ஒரே கோபமாக இருக்கிறான். அவனை எப்படியாவது சமாதானப்படுத்திப் பெண் பார்க்கச் செல்ல ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதே இப்போது அந்த அம்மாவின் கவலை!''

இதைக் கேட்டதும் விஜயனுக்கு சிரிப்பு வந்தது.

"ஏன் காவேரி, நீதான் அவனிடத்தில் சொல்லிச் சமாதானப்படுத்தி இருக்கக் கூடாதா?"

"இப்போது அண்ணன் என் பேச்சை கேட்கிற மாதிரியில் இல்லை. நீங்கள் போய் சொன்னால்தான் ஒருவேளை அது கட்டுப்பட்டு வரும்!"

"ஆமாம் தம்பி! இப்போதுகூட அவன் வீட்டில்தான் இருக்கிறான். நீ கொஞ்சம் வந்து சொல்லி அவனைச் சரிப் படுத்தேன்! அந்த ஆள் கொடுத்த ஏழு ரூபாயை தெரியாத கேடாக வாங்கினதும் போதும், அவன் என் கிட்டே சீறு கிறதும் போதும்! நீ கொஞ்சம் வா அப்பா...!

அவனுக்கு நாராயணன் குணம் நன்றாகத் தெரியும்! தவறு செய்தது தன் தாயாக இருந்தால்கூட அதற்காக அவன் கண்டிக்காமல் இருந்துவிட மாட்டான்!

ஏழு ரூபாய்—சிறிய தொகைதான். ஆனால் அது வாங்கப்பட்டிருக்கும் முறை...?—விஜயனுக்கு சமூகத்தின் அழுகிய பகுதியிலிருந்து கிளம்பும் முடை நாற்றமாக அது தென்பட்டது!

என்ன செய்வது—நாராயணனின் அம்மாவைப் பார்த் தால் மிகவும் பரிதாபமாக இருந்தது. அவள் தான் வாங்

பிரயாண அனுப்பைக் கூட ஒரு மூலையில் ஒதுக்கி வைத்து விட்டு அந்த அம்மாவோடு கிளம்பினான்.

நாராயணனின் வீடு, மெத்தைக் கட்டிடம்! நாராயண னுடைய அறை மாடியில் உள்ளது.

நாராயணனுடைய அம்மாவும், விஜயனும் வீட்டில் நுழைந்ததும், அந்த மாடிப் பக்கம் கையைக் காட்டிவிட்டு கீழேயே தங்கி விட்டார்கள் அந்த அம்மா! விஜயன் மெல்ல மாடிமேல் ஏறினான்.

அவன் மனதுக்குள்ளே, தான் ஊருக்குச் செல்லும் போது நாராயணன் கொடுத்த பிரயாணச் சீட்டைப் பெற்றுக் கொள்ளாமல் போனதில் அவன் ஏதேனும் வருத்த மடைந்திருப்பானோ என்று ஒரு ஐயமும் இருந்தது!

விஜயன் மெல்ல மெல்லச் சென்று நாராயணனின் அறை வாசல் அருகில் நின்று உள்ளே எட்டிப் பார்த்தான். அப் போது நாராயணன் அறையில்இருந்த புத்தகங்களையெல்லாம் எடுத்துத் துடைத்து ஒழுங்காக அடுக்கிக் கொண்டிருந்தான்!

"நாராயண்...நான் உள்ளே வரலாமா?"—விஜயன் மெல்லக் கேட்டான். நாராயணன் திரும்பிப் பார்த்தான். அவன் முகத்திலே ஒரு மகிழ்ச்சி!

"வா...விஜயா..."—நாராயணன் குழந்தை போல ஓடி வந்து அவனுடைய கரங்களைப் பற்றிக் கொண்டான்.

"என்ன, சென்னையில் நீ போன வேலைகள் எல்லாம் முடிந்து விட்டதா?" அவன் 'பிரயாணச் சீட்டு' நிகழ்ச்சியை மறந்தவன்போல பேசினான். இதைக் கண்டதும் விஜயனுக்கு ஒரே ஆச்சரியம்!

"என்ன நாராயண்...வரவேற்பெல்லாம் பலமாக இருக் கிறதே?"—அவன் கேலியாகக் கேட்டான்.

"என்ன இது பலமான வரவேற்பு!"—நாராயணனுக்கு அவனுடைய 'கேலி'யின் காரணம் புரியவில்லை! விஜயன் சிரித்தான்.

"நான் ஊருக்குப் போகும்போது, நீ என்னிடம் காட்டி விட்டுச் சென்ற கோபத்தைப் பார்த்ததும், நீ இப்போது

பேசப் போகிறாயோ இல்லையோ என்று மிகவும் பயந்தபடி தான் இருந்தேன்!”

“ப்சு...அந்தக் கோபத்தில் இருந்த வரட்டுத் தன்மையைப் புரிந்து கொண்ட பிறகு அதையேன் நான் ‘குரங்குப் பிடி’யாகப் பிடித்துக் கொள்ள வேண்டும்...” — அவன் வருத்தத்தோடு சொன்னான்.

“ஹிம்ஹூம்...அதை நீ உண்மையிலே புரிந்துகொண்டு விட்டாயா?”

“பின்னே என்ன? பயன் கிடைக்கும் வரையில்தான் உனக்கு சௌகரியங்கள் செய்து கொடுப்பேன்...இல்லையென்றால் ஆண் தேனீயை விரட்டியடிப்பது போல விரட்டி விடுவேன் என்று சொன்னது எவ்வளவு தப்பு தெரியுமா? நான் உனக்கு சிநேகிதன்...உனக்கு நான் எதுவும் செய்ய வேண்டுமென்றால், உன்னிடம் நான் எந்தப் பயனும் எதிர் பாராமல் செய்வதுதானே ஒழுங்கு...! அந்த ஒழுங்கை குலைப்பது போல நான் பேசியது தப்புதானே...”

“நாராயணா, உன் ஒழுங்கு இருக்கிறதே...ரொம்ப பிரமாதம்! ஆஹா...”—விஜயன், அவனைப் பரிகசிப்பதைப் போல் சிரித்தாலும், அவனுடைய மனதுக்குள் அவனு டைய உயர்வான மனப்பான்மையை போற்றியபடிதான் இருந்தான்.

“நாராயணா...எனக்கு ஒரு சந்தேகம்?”—விஜயன் திடீரென்று கேட்டான். ‘கேளேன்’ என்று சொல்லுவது போல நாராயணன் சிரித்தான்.

“உன்னுடைய தப்பைத் திருத்திக் கொள்வதற்கு நீ ஒரு சந்தர்ப்பம் எடுத்துக் கொள்வது போல, பிறருக்கும் அவர் களுடைய தப்பைத் திருத்திக் கொள்ள ஒரு சந்தர்ப்பம் கொடுப்பதுதானே, ஒழுங்கு!”

“ஆமாம்...அதிலே என்ன சந்தேகம் இருக்கிறது?”

“ஹூம்ம்...சரி! அம்மா பெண் வீட்டுக்காரர்களிடம் பார்க்க போய் வந்த செலவு ஏழு ரூபாய் வாங்கியது தப்பு!...அந்தத் தப்பைத் திருத்திக் கொள்ள நீ அவர்களுக்கு என்ன சந்தர்ப்பத்தை உருவாக்கிக் கொடுத்தாய்?”—வானைப்

பழத்தில் ஊசியை ஏற்றுவதுபோல சிரித்துக் கொண்டே கேட்டான்.

நாராயணனின் முகம் 'கடு கடு'வென்று மாறியது.

"தப்பு வேறு—குற்றம் வேறு..."—அவன் கோபத்தோடு உரக்கச் சொன்னான்.

"எது தப்பு? எது குற்றம்?...அதைக் கொஞ்சம் விளக்கமாகச் சொல்லிவிட்டு பின்னால் உன்னுடைய கோபத்தைக் காட்டு..."—விஜயன் சிரித்தான்.

"செய்யும் காரியத்தின் விளைவுகளைத் தெரிந்து கொள்ளாமல், துன்பத்தின் ஆஸ்பதமான காரியத்தைச் செய்வது, தப்பு! விளைவுகளை நன்றாகத் தெரிந்துகொண்டு துன்பத்தை உண்டாக்கும் காரியத்தைச் செய்வது, குற்றம்,"

"உன் விளக்கப்படியே பார்த்தாலும் அம்மா தப்புத் தானே செய்திருக்கிறார்கள்!"

"விஜயா...என்னைப் பெற்ற தாய்க்கு என் குணம் தெரியாதா...? என்னை வளர்த்து ஒழுங்கானவனாக வளர்த்து விட்ட என் தாய்க்கு என் போக்குப் புரியாதா...!? அம்மா செய்தது தெரிந்தே செய்த குற்றம்—தப்பு அல்ல!"

விஜயன் சிரித்தான்.

"நாராயணா...நீ சொல்லுவது எனக்கு மிகவும் வேடிக்கையாக இருக்கிறது! உன்மீது அன்பு கொண்டு, உன்னோடு நெருங்கிப் பழகுகிறவர்கள் எல்லோரும் உன்னைப் புரிந்து வைத்திருப்பார்கள் என்று நீ எண்ணுவது சரியல்ல...! அம்மா உன்னைப் பெற்று வளர்த்து ஒழுங்கானவனாக உருவாக்கியது என்னமோ உண்மை...ஆனால் அவர்கள் இன்னும் உன்னை சரியாகப் புரிந்து கொள்ளவில்லை..."

"ஆமாம்...புரிந்து கொள்ளவில்லை!...அம்மாவுக்கு ஒழுங்கான்படி புத்தி கொடுத்தால்தானே புரிந்து கொள்ளுவார்கள்..."—நாராயணன் உதட்டைக் கடித்துக் கொண்டான்.

"அதுதான் கொடுத்து முடித்து விட்டாயே! இன்னுமா கொடுக்க வேண்டும்? பாவம்...தெரியாத்தனமாக அவர்கள் அந்த ஏழு ரூபாயைப் பெற்றுக்கொண்டதும் போதும்; நீ அம்மாவை சித்திரவதை செய்ததும் போதும்!"

"விஜயா...நீயே சொல்லு! ஒருவன் விதி வசத்தால் மணப்பருவத்திலே ஒரு பெண்ணை வீட்டில் வைத்துக்கொண் டிருந்தால், அவனை குளவி கொட்டுவது போல மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் கொட்டி சித்திரவதை செய்வது சரியா? இதுபோன்ற நிலைமை பல தடவைகள் அவனுக்கு ஏற் பட்டால், அவன் அந்த வாலிபத்தின் வாசலிலே கனவு கண்டு கொண்டிருக்கும் அந்தப் பெண்ணிடம் எது போல நடந்து கொள்ளுவான்?"—நாராயணனின் குரல் தழதழத்தது. அவனுடைய உருக்கமான பேச்சு விஜயனின் இதயத்தை குலுக்கியது. அவனுடைய நெஞ்சிலே அநுராதா மின்ன லிட்டு மறைந்தாள்.

அவன் மெல்ல பெருமூச்செறிந்து கொண்டான்.

"பெண்ணில் பெருந்தக்க யாவுள என்பது பேச்சிலே தானே இருக்கிறது? நடைமுறையில், பெண்ணாகப் பிறந்தவர் களை பீடையாக எண்ணுவதுதானே இயல்பாக இருக்கிறது. உன்னையே எடுத்துக் கொள்ளேன்! அம்மா பெண் வீட்டா ரிடம் பணம் வாங்கியதை எதிர்த்து நிற்கிறாய்...ஆனால் அந்தப் பெண்ணுக்காக—அவளுடைய துயரத்தின் விளைவுக்காக நீ என்ன செய்யப் போகிறாய்?..."

"விஜயா...சுற்றி வளைத்துப் பேசி என் கழுத்தையே அழுத்துகிறாயே!"— நாராயணன் சிரித்துக்கொண்டான்.

"உண்மையாகத்தான் சொல்லுகிறேன், நாராயண்! சமூகத்திலே இதுபோன்ற கேடுகள் மலிந்து இருக்கும்போது வெறும் அநுதாபம் காட்டிப் பேசுவதில் மாத்திரம் பலன் இல்லை!"

"விஜயா...உனக்கு ஒரு கும்பிடு! காலையில் அம்மா வீட்டை விட்டு போனபோதே எனக்குச் சந்தேகம்...இப் போது நீ பேசுவதைப் பார்த்தால், அம்மா உன்னை சரியாக தயார் செய்து களத்தில் இறக்கி விட்டிருக்கிறார்கள் என்பது நன்றாகத் தெரிகிறது!"

"ஆமாம்...அதிலே என்ன தப்பு இருக்கிறது? அம்மா பெண் பார்க்கச் சென்று அவர்களிடம் போக்கு வரத்து செலவை வாங்கியதை மாத்திரம் தப்பு என்று பெரிதாகச் சொல்ல வந்து விட்டாயே! தன் மகனுக்கு கல்யாணம்

நடந்தால் போதும் அதற்காக எந்த சிறுமைக்கும் ஆளா வோம் என்று, நிர்ப்பந்தத்தின் நெருக்கடியிலே தவிக்கும் ஒரு குடும்பத்தினரை உன்னுடைய மனம் எப்போதாவது எண்ணிப் பார்த்ததுண்டா? அப்படிப்பட்ட எண்ணம் உனக்குத் தோன்றியிருந்தால், நீ இப்படி சும்மா உட்கார்ந்து இருக்கமாட்டாய்...நீ அந்தப் பெண்ணைப்போய் பார்த்து அந்தக் குடும்பத்தினரின் மனதிலே நிம்மதி நிலவ, ஓரளவாவது முயற்சி செய்திருப்பாய்!"

"அம்மா செய்த காரியத்தை எண்ணும்போது அந்த வீட்டுக்குள் எந்த முகத்தை வைத்துக் கொண்டு போவது என்பதுதான் எனக்குப் புரியவில்லை!"—அவன் நெற்றியை அழுத்திக் கொண்டான்.

"இதற்கென்ன பெரிய யோசனை செய்கிறாய்? அந்தப் பணத்தைத் திருப்பி அனுப்பிவிட்டு தப்பை சரி செய்து கொள்! அதற்குப் பிறகு போகலாம் அல்லவா?'

'அது சரி விஜயா! இப்போதே இப்படி நடந்து கொண்ட அம்மா பின்னால் வரதட்சிணை, சீர், வரிசை என்று கேட்காமல் இருப்பார்கள் என்பது என்ன நிச்சயம்?"

"ஒரு தடவை சூடு கண்ட பிறகு அம்மாவுக்கு மறுபடியும் அதைப்பற்றி பேச பைத்தியமா பிடித்து இருக்கிறது?"—விஜயன் சிரித்தான். நாராயணன் ஏதோ யோசனையில் ஆழ்ந்தவனாக மௌனமாக இருந்தான்.

"அப்படியானால் அம்மாவிடம் போய் சொல்லிவிட்டு வந்து விடவா?"

நாராயணன் மெல்லச் சிரித்தான்!

"பல பேர்கள் என்னிடத்தில் சொல்லத் தயங்கிக் கொண்டிருந்ததை நீ தைரியமாக சொல்லி என்னை ஒத்துக் கொள்ளும்படி வைத்து விட்டாய்! ஹூம்...போ...போ...! உனக்கு வாய்த்திருப்பதுபோல எனக்கும் ஒரு மனைவி கிடைத்தால் நான் அதிர்ஷ்டக்காரன்தான்!"

விஜயன் சிரித்துக்கொண்டே கீழே இறங்கி ஓடினான்... நாராயணனின் அம்மாவுக்கு தன் மகனின் முடிவைக் கேட்டதும் ஒரே ஆனந்தம்! அந்த வயதான அன்னை, தன் வீட்டுக்கு

விளக்கேற்றி வைக்க ஒரு மருமகள் வருவதற்கு எதையும் விட்டுக் கொடுக்கத் தயார்தான்! அவள் மகிழ்ச்சிப் பெருக்கால், விஜயனின் கன்னங்களைத் தன் கரங்களால் தடவி முத்தமிட்டுக் கொண்டாள்!

நாராயணனும், விஜயனும் வீட்டை விட்டுக் கிளம்பு வதற்குள் பலப்பல விஷயங்களைப் பேசி முடிவு செய்துவிட் டனர். அவைகளில் மிகவும் முக்கியமான விஷயம் அன்று மாலையே பெண் பார்ப்பதற்கு நாராயணன் செல்ல வேண்டும் என்பது! நாராயணன் தன்னோடு காவேரியையும் விஜயனையும் பெண் பார்க்க வரவேண்டும் என்று வற்புறுத் தினான். ஆனால்...விஜயன் காவேரியை மட்டும் அழைத்துக் கொண்டு போகச் சொல்லி விட்டான். நாராயணன் அதில் மட்டும் முரண்டு பிடித்தபடியே இருந்தான்!

அவர்கள் இருவரும் வீட்டை விட்டுக் கிளம்பி விட்டனர். கல்யாண விஷயங்கள் அவர்களுடைய மனதுக்குள்ளேயே அடங்கிவிட்டன.

நாராயணன், விஜயன் சென்னை சென்று வந்த செய்தி களைக் கேட்க ஆரம்பித்தான். விஜயன், தன் பிரயாண ஆரம்பத்திலிருந்து முடிவு வரை நடந்தவைகளை அப்படியே அவனிடம் சொன்னான்.

"விஜயா...நீ அந்த அநுராதாவுக்கு அவ்வளவு முக்கியத் துவம் ஏற்படும்படி செய்து விட்டிருக்கக் கூடாது!"—அவன் சலித்துக் கொண்டபடி சொன்னான்.

"ஏன் நாராயணா?"

"அவள் இவ்வளவு கெட்டலைந்த பிறகும் இன்னமும் அந்த ராஜாவோடு தொடர்பு வைத்துக்கொண்டு இருப்பது மன்னிக்க முடியாத ஒன்று!"— அவன் பற்களைக் கடித்துக் கொண்டு தலையை ஆட்டினான்.

"என்ன நாராயணா நீ சொல்லுவது?"—விஜயன் ஒன்றும் புரியாமல் கேட்டான்.

"இந்த ராஜாதான் அந்த அநுராதாவின் அழிவிற்குக் காரணமானவன். அநுராதா ஒரு நல்ல குடும்பத்தைச் சேர்ந்த பெண்! நடனத்திலே மிகவும் ஆர்வம் கொண் டவள். இளிமாவில் சேர்ந்து கலையை வான மண்டலத்துக்கு

உயர்த்திவிட வேண்டுமென்று கனவு கண்டு கொண்டிருந்தவள்...''

''நாராயண்...உனக்கு அநுராதாவை ரொம்ப நாட்களாகவே தெரியுமா?''

''அவளைச் சிறு குழந்தையிலிருந்தே எனக்குத் தெரியும்.... என் தாயைப் பெற்ற பாட்டனுர் வீட்டுக்கு அடுத்த வீடு தான் அவளுடைய அப்பா வீடு! நான் என்னுடைய தாத்தா வீட்டுக்குப் போகும்பொழுதெல்லாம் அவளோடு ஓடியாடி விளையாடியவன்தான்!'' —அவன் மெல்ல பெருமூச்செறிந்தான்.

விஜயனுக்கு அநுராதாவைப்பற்றிய செய்திகளைக்கேட்க மனதிலே ஒரு துடிப்பு உண்டாகியது!

''நாராயண்...மேலே சொல்லு நாராயண்!'' விஜயன் அவனை ஊக்கினுன்.

''இப்போது அநுராதாவோடு காவலாளி போல சுற்றிக்கொண்டு இருக்கிருனே இந்தக் கிழட்டு அப்பாச்சாமி... அவன் அநுராதாவுடைய குடும்பத்துக்கு அறிமுகமானுன். அவனுக்கு அநுராதாவின் இதயத்திலே துடித்துக்கொண்டிருக்கும் ஆர்வமும் கனவும் தெரிந்தது!...மெல்ல அவன் அநுராதாவை அந்த ராஜாவிடம் அறிமுகப்படுத்தினுன். அப்போது...ராஜா...திரை உலகின் முடிசூடா மன்னனுக இருந்தான் என்பதுதான் உனக்கே தெரியுமே ! அவன் அநுராதாவைப் பெரிய நட்சத்திரமாக ஆக்குகிறேன் என்று சொல்லி ஆசைகாட்டி...''—நாராயணனின் தொண்டையை துக்கம் அடைத்தது. அவன் பெருமூச்செறிந்தபடி தன் பேச்சை நிறுத்தினுன். அவன் சொன்னதைக் கேட்ட விஜயனின் மனதில் ஒரு புழுக்கம் !

''ராஜா வீட்டுக்கு அநுராதா போய் வருவதுபற்றி பல விதமான வதந்திகள் கிளம்பின ! அநுராதாவின் பெற்ருேர்கள், அவளுடைய நடத்தையில் மிகவும் வேதனைப்பட்டனர். மகளையும் கண்டித்தனர். ஆனுல் அநுராதா ஊரை விட்டே ஓடி விட்டாள்...! அவர்களுக்கு அநுராதாவின் செய்கை பெரிய தலைகுனிவை உண்டாக்கி விட்டது. என்ன செய்வது

அவள் எக்கேடாவது கெட்டுப் போகட்டும் என்று அவர்கள் அவளுக்கு ஒரு முழுக்கே போட்டு விட்டார்கள் !"

"அப்புறம் என்ன ஆனது நாராயண்?"

"என்ன ஆகும்? எப்போதும் ஆவதுபோலத்தான்...! கொஞ்சநாளில் ராஜா அவளைக் கைவிட்டு விட்டான்!...அவள் கடைசியில் அப்பாச்சாமியைத் துணைகொண்டு தன் வாழ்க்கையை நடத்த நம் ஊருக்கு வந்து விட்டாள்!"—அவன் விரக்தியோடு சிரித்தான்.

அநுராதாவின் அவதி நிறைந்த—ஏமாற்றங்கள் கவிந்த—வாழ்க்கை அவனுடைய இதயத்தை உருக்கியது! அவள் மீது விஜயனுக்கு ஒரு விவரிக்க இயலாத பச்சாத்தாபம் உண்டாகியது !

அநுராதா கலையில் கொண்டு இருந்த ஆர்வம் நல்லது தான். ஆனால் இந்த ஆர்வம் செயலாகப் பரிணமிக்கும்போது ...— விஷப்பரிட்சையில் இறங்கி அவள் தன்னை வீணாக்கிக் கொண்டு விட்டாள்.

"விஜயா!"—நாராயணன் மெல்ல அழைத்தான்.

"நான் சொல்லுகிறேன் என்று தப்பாக எண்ணிக் கொள்ளாதே! நீ...அநுராதாவுக்கு உதவியே செய்து இருக்கக் கூடாது!"

"ஏன் நாராயண்...அவள் ராஜாவோடு இன்னமும் பழகுகிறாளே என்பதற்காகவா ?"

"ஆமாம்......இவள் ஒரு காலத்திலே தெரியாத் தனத்தினால்—உணர்ச்சி வசப்பட்டு—தவறு செய்து வீணாகப் போனாள் ! அவள் இன்னமும் இதே சூழ்நிலையில், இதே மனிதர்களை சுற்றுச் சார்பாக வைத்துக்கொண்டு வாழ்வது தெரிந்து செய்கிற குற்றம். நீ இரக்கத்தால் செய்த உதவி இந்தக் குற்றத்துக்கு இன்னும் கொஞ்சம் ஒத்தாசையாகத் தான் அமையும்!"

நாராயணன் சொல்வதை விஜயனால் ஒத்துக்கொள்ள முடியவில்லை ! ஆனால்—

அநுராதா அவன் சொன்னது போன்ற ஒரு சூழ்நிலையில் தான் இருக்கிறாள். அதை அவனால் மறுக்கவே முடியவில்லை!

விஜயன் மௌனமாக இருந்தான்.

"விஜயா...நடந்து போனதைப் பற்றி இனிமேல் சிந்தித்து என்ன பயன்? ஒருகாலத்தில் நான் கூடத்தான் அவளுக்கு விளையாட்டுத் தோழனாக இருந்தேன். இப்போது அவளோடு நான் பேசுவதுகூட இல்லை!

"உன்னைப் போன்றவர்கள் அவளைப் பகிஷ்கரித்து கொண்டு இருப்பது எனக்கு மிகவும் வேதனையாக இருக்கிறது!"

"ஏன் நானும் அவளோடு பழகி என்னையும் ஆபாசச் சேற்றிலே மூழ்கடித்துக் கொள்ள வேண்டுமா?"—அவன் 'பட்' டென்று கேட்டான்!

"நீ நினைப்பது தவறு நாராயண்! அவள் ஒரு சூழ்நிலை காரணமாகக் கெட்டுப்போகிறாள் என்பது உனக்கே தெரிகிறது...அந்த சூழ்நிலை இல்லாமல் வேறொரு சூழ்நிலை அமைந்தால் அவள் கெட்டுப் போகாமல்கூட இருக்கலாமல்லவா?"

நாராயணன் மெல்லச் சிரித்தான்.

"நீ சொல்லுவது வாதத்திற்கு வேண்டுமானால் பொருத்தமானதாக இருக்கலாம்! அதை நடைமுறையில் செய்து காட்ட முயற்சித்தால்...முடிவில்...அது ஒரு விஷப்பரிட்சையாகத்தான் போய் முடியும்! சேற்றை அள்ளும் முயற்சியில் சேறு மேலே படாமல் இருக்கும் என்பது முடியாத காரியம்!"

"மேலேபடும் துளி சேற்றிற்காக, சேற்றுக் குட்டையை அப்படியே இருக்க விடலாமா?"

"நீ கேட்டது நல்ல கேள்விதான்! ஆனால்..."—நாராயணன் மேலே என்ன சொல்வது என்று தெரியாமல் விழித்தான்.

"நான் உன்னோடு வாதம் செய்வதற்கென்று இதைக் கேட்கவில்லை! நான் முன்பு அநுராதா மீது, அவளுடைய கொள்ளை அழகிற்காகவும், அவளிடம் குடி இருக்கும் கலைத் திறனுக்காகவும் அபிமானம் கொண்டிருந்தேன். ஆனால் இப்போதே அவளுடைய வாழ்க்கையைப்பற்றி எண்ணும் போதோ—ஒரு விவரிக்க முடியாத அநுதாபம்தான் உண்டாகிறது...—"

"அவள்மீது நீ கொண்டிருக்கும் அநுதாபமும், அபிமானமும் ரொம்ப ரொம்ப ஆபத்தானவைகள்!"—நாராயணன் இடைமறித்துச் சொன்னான்.

"நான் அநுராதாவின் மேல் மயக்கமுற்றுப் போய்க் கிடக்கிறேன், என்று நீ எண்ணுகிருயா?"—கோபமாகக் கேட்டான்.

"இல்லை! நீ அவளிடத்தில் மயங்கி இருந்தால் இவ்வளவு பச்சையாக நடந்த நடப்புகளை எல்லாம் என்னிடம் சொல்லியிருக்கமாட்டாய்! அப்போது நீ, நீதிபதியின் முன் குற்றவாளி நெளிந்து கொண்டு நின்று மழுப்பி மழுப்பி பேசுவது போலத் தான் பேசுவாய்!... ஆனுல் இனிமேல் நீ மயங்கிவிடக்கூடாது என்பதற்காகத்தான் நான் அதைச் சொன்னேன்"

"நீ எப்படி சொல்லியிருந்தாலும் சரி! அதைப்பற்றி அக்கறையில்லை. என் மனதை எப்படிக் கட்டுப்படுத்திக் கொள்வது என்பது எனக்குத் தெரியும்!"

"மனம்...இஹ்ஹஹிஹ்ஹிம்...பாரம்பர்ய சிந்தனைகளை அடி நிலமாகக் கொண்டு சூழ்நிலை நெருக்கடியில் தோன்றும் எண்ணங்களுக்கு நீ 'மனம்' என்ற பெயர் கொடுத்துப் பேசி இருந்தால் நீ சொன்ன முன் பேச்சு தவறு—அது இல்லாமல் வாழையடி வாழையாக எல்லோரும் சொல்லிக்கொண்டு வருவது போல 'மனம்', என்று நீ சொல்லியிருந்தால்—அந்த 'மனம்' ஒரு பிரமை...நீ மனதை கட்டுப்படுத்திக் கொள்வேன் என்பது, 'உன்னை நீயே ஏமாற்றிக் கொள்வது...'என்றுதான் என்னை எண்ண வைக்கிறது."

விஜயன் ஒன்றும் புரியாமல் உற்றுப் பார்த்தான்.

"ஏன், என்னை அப்படி உற்றுப் பார்க்கிருய் விஜயா! நான் சொல்லுவது உண்மை! நமக்கு பாரம்பர்ய சிந்தனைகள் 'பெண்களை' நமக்கு அடிமைகளாகவும், நாம் ஆட்டுவிக்கும் போது, ஆடும் மாவுப் பொம்மைகளாகவும் எண்ணும் படி வைத்திருக்கிறது. இயற்கை உருவாக்கிக் கொடுத்துள்ள இனக் கவர்ச்சிச் சூழ்நிலையோடுகூட, பழக்கம் ஏற்படுத்தும் அழகுக் கவர்ச்சி சூழ்நிலைவேறு இருக்கிறது. இவைகளுக்கு மத்தியில் பெண்களோடு மனதைக் கட்டுப்படுத்திக் கொண்டு தனிமையில் பழகி வெளிவந்து விடுவது மிகவும் அபூர்வம்! அந்த அபூர்வப் பிரகிருதிகளுக்கு வேண்டுமானுல் நான் ஒரு வணக்கம் செலுத்த தயார்! ஆனுல் நீயும், நானும் சாதாரண

ஆட்கள் தான்!"—நாராயணன் 'கல கல'வென்று சிரித்தான். அவனுடைய தர்க்கம் உண்மைச் சுவட்டிலே தடம் புரளாமல் சென்றாலும்கூட விஜயன் தன்மேல் வைத்திருந்த நம்பிக்கையை இழக்கத் தயாராக இல்லை!

"என்னைப்பற்றி எனக்குத்தான் நன்றாகத் தெரியும்!"—அவன் கர்வத்தோடு சொன்னான். நாராயணன் கேலியாகச் சிரித்தான்.

"விஜயா! நாம் வாதம் செய்து கொண்டிருந்ததை மனதில் வைத்துக்கொண்டு, அநுராதாவிடம் பழகி எதுவும் விஷப்பரிட்சை செய்ய ஆரம்பித்து விடாதே!"

"உனக்குத்தான் அநுராதாவைக் கண்டால் பயமாக இருக்கிறது. வேண்டுமானால் பார்...அவளுடைய உருவத்தையே மாதிரியாக வைத்துக்கொண்டு ஒரு சித்திரம் எழுதிக் காட்டுகிறேன்!"

"நன்றாக எழுது—அதை எழுதி உலக சித்திரப் போட்டிக்கு வேண்டுமானாலும் அனுப்பு...நான் தடுக்கத் தயாராக இல்லை! ஆனால் நான் ஏதோ அநுராதாவைக் கண்டு பயப்படுவதாகச் சொன்னாய் பார்...அதுதான்...தப்பு! பயம், முட்டாள்களும் குற்றவாளிகளும்தான் கொள்ளுவார்கள்! நான் முட்டாளுமல்ல—குற்றவாளியுமல்ல!"—அவன் சிரித்தான்.

...உலகச் சித்திரப் போட்டிக்கு வேண்டுமானாலும் அனுப்பு'—நாராயணன் 'கேலி'யாகச் சொன்ன வார்த்தைகள், விஜயனின் நெஞ்சை வண்டுபோல துளைத்தன! அவன் மெல்ல உதட்டைக் கடித்துக்கொண்டான்.

ஊஞ்சலில் ஆடியபடி அநுராதா—அவனுடைய நினைவிலே மின்னினாள்! அந்த உருவம்...அதை வைத்துக் கொண்டு சித்திரம் வரைந்து அனுப்பினால் அதை உலக சித்திரப் போட்டியில் தள்ளியா விடுவார்கள்?

விஜயனின் வீடு வந்து விட்டது!

காவேரி மலர்ந்த முகத்தோடு வாசலில் நின்று கொண்டிருந்தாள்!

# 6. அணை உடைந்தது

விஜயனுக்கு வேலையில் மனம் செல்லவில்லை. திரைச் சீலையில் குறுக்கும் நெடுக்குமாக வெறுங்கோடுகள் மாத்திரம் தான் தென்பட்டன. அவன் தூரிகையை நெருடியபடி 'வெறிக்க'ப் பார்த்துக்கொண்டிருந்தான். வர்ணக் குழம்புகள் கண்ணாடித் துண்டில் திட்டு திட்டாகக் கிடந்தன!

காவேரிகூட வீட்டில் இல்லை. வீடு 'வெறிச்'சிட்டுப் போய்க் கிடந்தது.

காவேரி, நாராயணனுடன் பெண் பார்க்கச் சென்று விட்டாள்!

'காவேரி—நாராயணன்...'—அவர்கள் இருவரும் ஒரே மாதிரியானவர்கள்! ஒழுங்கிலே நம்பிக்கை பூண்டு நடப்பவர்கள்! ஆனால்—

காவேரி கடைப்பிடிக்கும் ஒழுங்கு, செக்குமாடுகள் கழுத்திலே பாரத்தைச் சுமந்துகொண்டு தடம்புரளாமல் சுற்றி வருவது போன்ற ஒழுங்கு! நாராயணன் கடை பிடிக்கும் ஒழுங்கோ, முடுக்கிவிட்ட இயந்திர 'டாங்கு' தான் செல்லுவதற்கு இடைஞ்சலாக இருப்பவைகளை அழித்துத் துவைத்து, தான் செல்லுவதற்கு பாதையை அமைத்துக் கொண்டும், தன் பின்னால் வருபனவற்றிற்கு பாதையை அமைத்துக் கொடுத்துக் கொண்டும் செல்வது போன்ற ஒழுங்கு!

அவர்கள் ஒழுங்கை கடைபிடிக்கும்போது ஏன் இந்த மாறுபாடு உண்டாகிறது?!—சும்மாயிருக்கும் மனதுக்கு வேலை கொடுப்பதற்கென்று விஜயன், தனக்குள் இந்தக் கேள்வியை கேட்டுக்கொண்டான்.

ஆனால், அவனுடைய மனமோ அந்தக் கேள்வியை உதறித் தள்ளிவிட்டு, அநுராதாவை நோக்கி ஓடியது!

அநுராதாவினிடத்தில் பிரமாதமான ஒழுங்கில்லை. ஆனால் அவளிடத்தில் அழகிருந்தது; கலை இருந்தது!

அழகு—கலை...

இரண்டும், ஒன்றிலே ஒன்று பிணைந்து இருப்பது; ஒன்றுக்கொன்று மெருகேற்றி, சிறப்படையும் இயல்பு படைத்தவைகள்!

அந்த அழகும், கலையும் ஒன்றிய நிலையில் உருவாகும் அற்புதத்தை சித்திரமாக வைத்தால்—

அப்படிச் செய்வதினால் அநுராதாவிடம் ஒழுங்கு உண்டாகிவிடுமா?

விஜயன் மெல்ல பெருமூச்செறிந்து கொண்டான்.

'ஒழுங்கு —' அவன் மெல்ல முணுமுணுத்துக் கொண்டான்.

ஒழுங்கு அழகாகி—அந்த அழகு கலை உருப்பெற்றால்...?

நன்றாகத்தான் இருக்கும்—சிறப்பாகத்தான் இருக்கும். ஆனால் —

இயற்கை விசித்திரமாக அமைந்து இருக்கிறது. சூரியனின் பொன் வண்ணச் சுடரொளியில் தண்மை இருப்பதில்லை! ஆனால் அந்த தண்மையை—குளிர்ச்சியை—சீதளத்தை—அநுபவிக்க, அந்தச் சுடரொளியை செயற்கையாகச் சந்திரனில் ஏற்றிப் பார்க்க வேண்டியிருக்கிறது! அப்படிப் பார்க்கும்போதுகூட சந்திரன் ஒளியில் தண்மையைத் தவிர, சூரிய ஒளியில் இருக்கும் அந்தப் பளபளப்பை, ஜொலிப்பைக் கண்டுவிட முடிகிறதா?

குறை—உலகம் முழுவதுமே குறையுடையதாகத்தான் இருக்கிறது! காவேரி—அநுராதா—நாராயணன்... எல்லோருமே குறையுடையவர்கள்தான்;

விஜயனின் மனதுக்குள் லேசாக ஒரு அதிர்ச்சி!

அநுராதாவிடம் குறையிருப்பது என்னவோ உண்மை! ஆனால் காவேரியிடமும், நாராயணனிடமும் என்ன குறையிருக்கிறது?—திடீரென்று ஒரு கேள்வி, முளைத்து, அவனை நோக்கி சிரித்தது! அவன் மனம் திக்குமுக்காடியது!

அவன் தலையைக் குனிந்தவாறு தரையை வெறிக்கப் பார்த்தான்.

* * *

"ஹூம்ம்...நான் வரட்டுமா?"—தாபம் நிறைந்த விழிகளோடு காவேரி அவனைப் பார்த்தாள். விஜயனுக்குச் சிரிப்பு வந்தது!

"என்னமோ, லண்டனுக்கு போய்விட்டுத் திரும்புவதற்கு விடை கேட்பதுபோல அல்லவா கேட்கிறாய்?"

"உங்களுக்கு எப்போதும் இந்த வேடிக்கைதான்!...இந்த இரண்டு நாட்களை நீங்கள் எப்படித்தான் கழிக்கப்போகிறீர்களோ?"—அவள் மெல்லப் பெருமூச்செறிந்தாள்; விஜயன் சிரித்தேவிட்டான்.

"உன் வேதனையை என்மேலே ஏற்றி, எனக்காக அநுதாபப்படுவதுபோல எதற்குப் பேசுகிறாய், காவேரி! உன்னால் என்னைப் பிரிந்து இரண்டு நாட்கள் இருக்க முடியாது என்று வெளிப்படையாகச் சொல்லிவிட்டேன்!"

காவேரியின் முகம் சிவந்தது! அது கோபமா, வெட்கமா என்பது விஜயனுக்குப் புரியவில்லை!

"நான் உங்களைப் பிரிந்து வேண்டுமானால் இருந்து விடுவேன். ஆனால், நீங்கள்தான் என்னைப் பிரிந்து இருக்க முடியாது!"

"ஹூம்ம்..."—விஜயன் 'கேலியாக' தலையை ஆட்டினான்.

"ஒரு டம்ளர் 'தண்ணீர்' மொண்டு தானாக குடிப்பதற்குக் கூட உங்களுக்கு இன்னும் பழக்கம் வரவில்லை! பேச்சு மாத்திரம் பெரிதாகப் பேசுகிறீர்கள்? இந்த இரண்டு நாட்களில் நீங்கள் படப்போகும் பாடு எனக்கல்லவா, தெரியும்!"—அவள் செல்லமாக விஜயனின் கன்னத்தை நிமிண்டினாள்.

"நீயும்தான் பாரேன்...நான் ஜோராக ஹோட்டலில் சாப்பாடு எடுத்து வந்து சாப்பிட்டுவிட்டு, நிம்மதியாக நீ வருவதற்குள் ஒரு அழகான சித்திரம் போட்டு வைத்துவிடுகிறேன்!"—அவன் சிரித்துக்கொண்டே சொன்னான்.

"இதோ பாருங்கள், ஹோட்டல் சாப்பாடு உடம்புக்கு ஒத்துக்கொள்ளாது! நேரா நேரத்திலே நாராயண அண்ணா வீட்டிலே போய் சாப்பிடுங்கள்! என்ன நான் சொல்கிறது தெரிந்ததா?"

அவளுடைய கவலை அவனுக்கு வேடிக்கையாக இருந்தது! அவன் சிரித்தான்.

"இந்த சிரிப்புத்தானே வேண்டாம் என்கிறது! நாராயண அண்ணன் காரியமாக மாத்திரம் இல்லாமல் இருந்தால்,

நான் இப்போது ஊருக்கே கிளம்பமாட்டேன்! நான் வரு வதற்குள்... நீங்கள் உடம்பை எவ்வளவு கெடுத்துக்கொள்ளப் போகிறீர்களோ?"—அவள் பெருமூச்செறிந்தாள். அவள் கண்களிலே நீர் துளிர்த்தது!

"காவேரி"—அவன், மெல்ல காவேரியை அணைத்துக் கொண்டான்!

விஜயனின் உடல் குலுங்கியது! அவன் பிடியில் காவேரி இல்லை! காவேரி நாராயணனுக்குப் பெண் பார்க்கச் சென்று விட்டாள்!...

காவேரிக்குத்தான் தன்னைப்பற்றி எவ்வளவு கவலை. அந்தக் கவலையில் வேண்டுமானால் பொருள் இல்லாமல் இருக் கலாம்—ஆனால்...

அந்தப் பொருளற்ற கவலையின் ஊடே கண் சிமிட்டிக் கொண்டிருக்கும் அவளுடைய காதலின் ஜொலிப்பு!—

அவளுடைய மனதில் உருவான அந்தப் பொருளற்ற கவலையைக் குறையென்று சொல்லிவிட முடியுமா?

புல் நுனியிலே ஒட்டிக்கொண்டிருக்கும் பனித்துளி காலைக் கருக்கலின் அழகையெல்லாம், அந்த அழகின் தாயான வானத்தைவிட, எழிலோடு வெளிக்காட்டும் இந்திர ஜாலத்தை மறக்க முடிகிறதா? பனித்துளி—சூரியவொளியில் சில விநாடிகள்கூட நிலைத்து நிற்க முடியாததுதான். ஆனால் அது செய்யும் அந்த அற்புதம் குறையானதா?

விஜயனின் கண்களிலே நீர்த் திரையிட்டது! அவனது மன அரங்கிலே நாராயணன் பெருமூச்செறிந்தபடி நின்று கொண்டிருந்தான்.

*   *   *

"விஜயா! நீ கூட இல்லாமல், பெண் பார்க்கப் போவது எனக்குக் கொஞ்சங்கூட பிடிக்கவில்லை! ஆனாலும் நீ செய்யப் போகும் வேலை தடைப்பட்டுவிடக் கூடாதே என்பதற்காக, நான் உன்னை வாவென்று வற்புறுத்தவில்லை!"

"காவேரிதான் உன்கூட வருகிறாளே...அப்புறம் எதற்கு நீ, நான் வரவில்லை என்பதற்காகக் கவலைப்படுகிறாய்?"

"காவேரி, பெண்ணைப் பார்த்து அவள் நல்லவளா, இல்லையா என்பதை சொல்லிவிடும். ஆனால் நீ என் உடன் வந்தால்தான் அந்தப் பெண் எனக்கு ஏற்றவளா இல்லையா என்பதை முடிவு கட்டிச் சொல்லுவாய்..."

"அட பைத்தியம்...! உன்னைக்காட்டிலும் நான் என்ன அப்படி ஒரு பெரிய முடிவைச் சொல்லிவிடப் போகிறேன்! இதற்காகவா நீ கவலைப்படுகிறாய்?"—விஜயன் சிரித்தான்.

"என்னைப்பற்றி, நான் தெரிந்து வைத்திருப்பதைவிட அதிகமாக என்னைப்பற்றி நீ தெரிந்து வைத்துள்ளாய்...! அதனால் என்னைப்பற்றிய விஷயங்களில் நான் கட்டும் முடிவுகள்கூட தவறிப் போகலாம். ஆனால் நீ கட்டும் முடிவு தவறியே போகாது!"—அவன் பேச்சில் ஏதோ ஒரு ஆழ்ந்த நம்பிக்கை புதைந்து இருந்தது! அந்த நம்பிக்கை விஜயனுக்கு சிரிப்பை உண்டாக்கியது! அவன் சிரித்தான்.

* * *

தன்னைப்பற்றி முடிவு கட்டுவதில், தன்னையே நம்பாமல், நண்பனை நம்பும் அந்த பொருளற்ற நம்பிக்கை—அதை குறையென்று சொல்லிவிட முடியுமா?

பிரசித்தி பெற்ற வைத்தியர், தன் நோய்க்கு மருந்தை தானே எடுத்துக்கொள்ளாமல், தனக்குத் துணையாக இருக்கும் வைத்தியரிடம் சிகித்சை செய்துகொண்டு குணமடைவது தவறானதா? குறைவானதா?

நாராயணனின் நம்பிக்கையிலே அடங்கியிருந்த நட்புத் திண்மை விஜயனுக்கு பெருமிதத்தை உண்டாக்கியது! விஜயனால் அவனிடமும் குறை கண்டு பிடிக்க முடியவில்லை!

விஜயன் சோர்ந்துபோய் உட்கார்ந்தான்.

அநுராதா...

அவன் திரைச்சீலையைப் பார்த்தான். அதில் அவள் இன்னும் உருவாகவில்லை! அவள் மட்டும் இதில் உருவாகி விட்டால்?—

அநுராதாவை யாரும் குறை சொல்லிவிட முடியாது! அவளிடம் குடிகொண்டிருக்கும் கலை நெகிழ்ச்சியை, அழகின் துடிப்பை...யாருமே குறை சொல்ல முடியாது!

விஜயன் மெல்ல தன் கையிலிருந்த தூரிகையால் வர்ணத் தட்டிலிருந்த வர்ணங்களை குழப்பினான்; இரண்டு நிறங்கள் கலந்து புதிதாக ஒரு நிறம் உண்டாகியது! அந்த நிறம்.... அந்த இரண்டு நிறத்திலிருந்தும் வேறுபட்டதாக...ஒரு தனி அழகோடு விளங்கியது!

அவனுக்கு மனதுக்குள் ஏதோ ஒரு அலுப்பு! தூரிகையை வீசியெறிந்தான்! எழுந்தான்; நடந்தான். வெளி உலக வீதி அவனை தலைமேல் ஏந்திக்கொண்டு சென்றது!

இருள் படரும் நேரம். தெரு விளக்குகள் எரியாமல் குருடர்களாக நின்றது! வானத்தில் மப்பு படர்ந்து இருந்தது!

விஜயன் சிந்தனையில் ஆழ்ந்தவனாக, கால்போன போக்கில் நடந்துகொண்டு போனான்! ஊருக்கு வெளியே செல்லும் சாலை தன் முகப்பு வளைவை முன்னிறுத்தியபடி அவனை வேடிக்கை பார்த்தது!

விஜயனின் சிந்தனை விழித்துக்கொண்டது. நெடுந்தூரம் நடந்ததினால் ஏற்பட்ட சோர்வு, கால்களை சுருக்கிட்டுப் பின்னுக்கு இழுத்தன! அவன் திரும்பினான்; பழைய வேகம் இப்போது அவனுடைய கால்களில் இல்லை.

தூரத்தைக் குறைக்க, பாதையின் இடைப்பட்ட குறுக்குச் சந்துக்குள் நுழைந்தான்! அந்தச் சந்தை அவன் அதற்கு முன் பார்த்ததே கிடையாது! அங்கே சந்தடி செத்துப்போய் கிடந்தது!

வீடுகள் எல்லாம் ஒரே வரிசையில்தான் இருந்தன. எதிர் வரிசையில் கோயில் சுற்றுப்புறச் சுவர் ஓங்கி நின்றது.

அந்த வீடுகள் ஒவ்வொன்றின் திண்ணைகளிலும் சிறிய சிறிய விளக்குகள் 'மினுக்'கிட்டுக் கொண்டிருந்தன! விஜயனுக்கு அதைக் கண்டதும் வேடிக்கையாக இருந்தது!

அந்த மங்கிய விளக்கொளியில்...சே!

அவன் கண்களைச் சுழித்துக்கொண்டான்!

நிலைப்படியைப் பிடித்துக்கொண்டு பெண்கள் ஏன் இப்படி சிரித்துக்கொண்டு நிற்கிறார்கள்?

அவன் வேகமாக நடந்தான்!

"சார்..."—பின்னாலிருந்து குரல் கேட்டது! அவன் திடுக்கிட்டான். மெல்லத் திரும்பிப் பார்த்தான். அநுராதா ஒரு

வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தாள். அவனுடைய முகத்திலே ஒரு ஆச்சர்யம்!

"எங்கே சார், இந்தப் பக்கம்?"—அவள் சிரித்துக் கொண்டே கேட்டாள். அந்தச் சிரிப்பு அவனுடைய இதயத்தை வாளால் அறுப்பது போல இருந்தது! அவன் தலை குனிந்தபடி மௌனமாகப் பெருமூச்செறிந்தான்!

"ஏன் சார் வெளியில் நிற்கிறீர்கள்...உள்ளே வாருங்களேன்!"

அவன் மனம் தடுமாறியது! ஆனால் அவனுடைய கால்கள் மெல்ல அவனை இழுத்துக் கொண்டு நகர்ந்தன!

அநுராதா திண்ணையில் எரிந்து கொண்டிருந்த விளக்கை யெடுத்துக் கொண்டு உள்ளே அவன் பின்னால் வந்தாள். வெளியில் இருள் சூழ்ந்தது! ஆனால் மின்சார விளக்குகளின் வெளிச்சம் கண்களைப் பறித்தது!

"வாங்க சார்...வாங்க..."—வாயிலிருந்து தம்பலம் வழிய ஊஞ்சலில் அமர்ந்தபடி வரவேற்றான், அப்பாச்சாமி. விஜயன், அநுராதாவைத் திரும்பிப் பார்த்தான்! அவள் தன் கையிலிருந்த விளக்கை ஒரு மூலையில் வைத்துவிட்டு கதவை சார்த்திக் கொண்டிருந்தாள்.

"அநுராதா...!'— விஜயனின் விழிகள் வியப்பால் உயர்ந்தன.

"சார்...நீங்கள் அந்த ஊஞ்சலில் அமருங்கள்... '— அநுராதா அப்பாச்சாமியை கண் ஜாடையில் எழுந்திருக்கச் சொன்னாள். அவன் எழுந்து எச்சல் உமிழ்வதற்கு செல்பவன் போல பின்கட்டுக்குச் சென்றான்.

'கிரிச்...கிரிச்...' என்று சப்தமிட்டபடி ஊஞ்சல் ஆடிக் கொண்டிருந்தது, விஜயனுக்கு அநுராதா ஆடிய நடனம் நினைவுக்கு வந்தது.

"நீ அங்கே உட்கார் அநுராதா..."—அவன் ஊஞ்சலை சுட்டிக் காட்டினான். அநுராதா மெல்லச் சிரித்தாள்.

"நீங்கள் உட்காரவில்லையா?"

"நான் பலகையில் உட்காருகிறேன்..."— விஜயன் முகத்தில் ஒரு சிரிப்பு! திகைத்தபடி அநுராதா அவனைப

பார்த்தான். அவன் அந்த ஊஞ்சலுக்கு எதிரில் போடப்பட்டிருந்தபலகையில் உட்கார்ந்தே விட்டான்.

அவளுடைய உதட்டைக் கிழித்துக் கொண்டு ஒரு பெருமூச்சு வந்தது.

"என்ன அநுராதா நிற்கிறாய்...உட்காரேன்!"

அவள் ஒருமுறை அவனை ஏறிட்டுப் பார்த்துவிட்டுக் கீழே தரையில் அமர்ந்தாள்! விஜயன், அவளை ஆச்சரியத்தோடு பார்த்தான்.

"அநுராதா..."— விஜயனின் குரல் தழ தழத்தது.

"இன்றைக்கு ராஜா ஒரு கடிதம் போட்டிருக்கிறார், சார்..."—அவனுடைய பேச்சை கவனிக்காதவள் போல சொன்னாள்.

"என்ன எழுதியிருக்கிறான்?"

"நீங்களே படியுங்களேன்...இதோ அந்தக் கடிதத்தையே கொண்டு வந்து தருகிறேன்!"—அவள் எழுந்து பக்கத்தில் இருந்த அறைக்குள் சென்றாள். சில விநாடிகளில் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தாள்.

விஜயன் அதை பரபரப்போடு பார்த்தான். அதில்:

"அநுராதா,

நீ ஊருக்குப் போகும்போது என்னிடம் சொல்லாமலேயே போய் விட்டாய். அதில் எனக்குக் கொஞ்சம் வருத்தம்தான்! இப்பொழுது நான் சில பட முதலாளிகளிடம் உன்னையும், என்னையும் கதாநாயகன் கதாநாயகியாகப் போட்டு படம் எடுக்க வேண்டுமென கேட்டுக் கொண்டிருக்கிறேன். அவர்கள் என்னைக் கதாநாயகனாக ஏற்றுக் கொள்ள சம்மதம் தெரிவிக்கிறார்கள். ஆனால் உன்னைத்தான் கதாநாயகியாக போடுவதற்குத் தயங்குகிறார்கள்!

எனக்கு என்னவோ உன்னோடு 'ஜோடியாக' நடிக்க வேண்டுமென்று ஒரே ஆசை. அதனால் அந்த முதலாளிகளின் வார்த்தைகளுக்கு நான் சம்மதம் தெரிவிக்கவில்லை.

நீ எதற்கும் மீண்டும் ஒரு முறை சென்னைக்கு வந்தால் நலமாக இருக்கும்! உனக்கு இங்கே சில இடங்களில் நட்சத்திரக் கச்சேரி வேண்டுமானாலும் ஏற்பாடு செய்கிறேன். அதற்குப்

பின்னலாவது அவர்கள் வழிக்கு வருகிருர்களா என்று பார்ப்போம்!..."—அந்தப் படித்துக் கொண்டு வரும்போதே விஜயன் சிரித்தான்.

"ஏன் சார், சிரிக்கிறீர்கள்?"

"இந்தக் கடிதத்தைப் படிக்கும்போது சிரிக்காமல் என்ன செய்வது? தந்திரத்திலே நரியும், காக்கையும் ராஜாவிடத்திலே தோற்றுப்போக வேண்டியதுதான்! இவனே யாரோ கதாநாயகனுக நடிக்க, பாக்குப்பணம் வைத்துக் கூப்பிட்டதாக அல்லவா எழுதியிருக்கிருன்!"

"அந்த விஷயத்தை நான் இந்தக் கடிதத்தை பார்த்தவுடனேயே புரிந்து கொண்டுவிட்டேன்!"—அநுராதா சிரித்தாள்.

"எந்த பட முதலாளியாவது உன்னைப்பற்றி எதுவும் விசாரித்து இருப்பார்கள்...ராஜா அந்த நேரத்தில் சமயம் பார்த்து தனக்கு ஒரு 'சான்ஸ்' படத்திலே கேட்டிருப்பான்! அப்படித்தான் இருக்கும்...இல்லையென்ருல் ராஜாவது, தனக்கு கதாநாயகன் 'சான்ஸ்' கிடைப்பதை உனக்காக தியாகம் செய்வதாவது?"—விஜயனும் சிரித்தான். அநுராதா மௌனமாக தலைகுனிந்தபடி நின்ருள்.

"ஏன் அநுராதா...உனக்கு மறுபடியும் சென்னையில் நடனம் ஆடுவதற்குப் போக வேண்டும் என்று ஏதாவது அபிப்பிராயம் இருக்கிறதா?"

"இன்னொரு முறை இந்த ராஜா சந்தர்ப்பம் வாங்கித் தருவார் என்று நம்பிக்கொண்டு சென்னைக்கு போவதா? ஒரு தடவை பட்டபாடு போதாதா?"—அநுராதா வரட்சியோடு சிரித்தாள்.

விஜயன் அநுராதாவின் முகத்தை கூர்ந்து கவனித்தான். அவள் விழிகளிலே ஒரு மாற்றம்—அநுபவக் கசப்பு ஊறிய சோர்வு!

"ஆனல் ஒன்று மாத்திரம் நிச்சயம்...உனக்கு இப்போது சென்னையில் ஒரு கிராக்கி—மதிப்பு—ஏற்பட்டிருப்பது மட்டும் உண்மை! நீ, தி. சொ. ரா வன்னு வீட்டுக் கல்யாணத்தின் ஆறுபடி நடனம் எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்து விட்டது!"

அநுராதா மெல்ல சிரித்துக்கொண்டாள்.

"என்ன ஏற்பட்டுத்தான், என்ன பயன்? எனக்கு இந்த சினிமா உலக சூழ்நிலைகளைப்பற்றி எண்ணினாலே மனதுக்குள் வேதனைதான் உண்டாகிறது!"

விஜயன் பெருமூச்செறிந்து கொண்டான். பாவம் அவள் பட்ட கஷ்டங்கள் அவளுக்குத்தாமே தெரியும்!

"ஏன் அநுராதா நிற்கிறாய்?...அந்த ஊஞ்சலில் உட்காரேன்!"

"ஊஹூம்...வேண்டாம் சார்..."

"அநுராதா..."—விஜயனும் எழுந்தான்.

"உனக்கு என் எதிரில் உட்காருவதற்குப் பிடிக்க வில்லையா?"—அவனுடைய பேச்சில் ஏக்கம் குமிழியிட்டுக் கொண்டிருந்தது! அநுராதா தலைகுனிந்தபடி மௌனமாக நின்றாள்.

'சொட்...சொட்...'— கண்ணீர்த்துளிகள் உருண்டு அவளுடைய காலடியில் விழுந்தன!

"ஏன், அநுராதா அழுகிறாய்?"—விஜயன் பரிவோடு அவளருகில் நெருங்கினான். அவசரம் அவசரமாக அவள் தன்னுடைய கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். அவள், அவனை நோக்கி சிரிக்க முயன்றாள்! ஆனால் முடிந்தால் தானே?

விஜயன் யோசனையில் ஆழ்ந்தவனாகச் சற்று நேரம் மௌனமாக நின்றான்..

"அநுராதா...நீ எனக்கு முன்பு காணிக்கை தருவதாகச் சொன்னது நினைவிருக்கிறதல்லவா?"—ஏதோ நினைவுக்கு வந்தவன் போலக் கேட்டான்.

"நன்றாக நினைவு இருக்கிறது!...உங்களுக்கு என்ன வேண்டும்...?"

"நீ முதலில் இந்த ஊஞ்சலில் உட்கார்ந்து ஆட வேண்டும்!..."

"எதற்கு சார் இதெல்லாம்..."— அவள் சிணுங்கியபடி கேட்டாள்.

"எதற்கா?—அநுராதா......நான் உன்னை மீண்டும், ஊஞ்சலில் ஆடும் ராதையாகக் காண விரும்புகிறேன்!

ஆடு...ஆடு...உன் அழகு உருவம் என் இதயத்திலே பதியும் வரையில் ஆடு! அந்த ஆட்டத்திலே ஆழ்ந்து இருக்கும் உன்னை...நான் அப்படியே சித்திரத்தில் வடிக்கப் போகிறேன். ...ஆடு அநுராதா ஆடு!''—அவன் உணர்ச்சி வசப்பட்டவனாக அநுராதாவின் கரங்களைப் பற்றினான்.

''இதைத்தான் நீங்கள் என்னிடமிருந்து காணிக்கை யாகப் பெறவிரும்புகிறீர்களா?''—அவள் சிரித்துக்கொண்டே கேட்டாள். விஜயனின் முகம் கூம்பியது!

''அநுராதா...நீ கூடவா என்னைப் புரிந்து கொள்ள வில்லை! உன் கலை உள்ளத்தால் கூடவா, என் காணிக்கையின் தன்மையைப் புரிந்துகொள்ள முடியவில்லை!''

''சார்...''— அவள் வீறிட்டாள்.

''என்னுடைய போக்கு உனக்குப் பைத்தியக்காரத்தன மாகத் தெரியலாம்...ஆனால்...எனக்கு உன்னுடைய எழில் தோற்றம்தான் காணிக்கையாக வேண்டும்!...அதை நான் அப்படியே சித்திரத்தில் வரைந்து, 'உலக சித்திரப் போட்' டிக்கு அனுப்பப் போகிறேன்...என் ஆசை...என் கனவு... எல்லாமே உன்னிடத்தில்தான் நிறைவேற வேண்டும்... அநுராதா...''— அவன் சோர்வோடு தலைகுனிந்தான்.

''சார்...''— அநுராதா அவனுடைய கால்களைக் கட்டிக் கொண்டு 'விக்கி விக்கி' அழுதாள்! விஜயன் திடுக்கிட்டான்.

''அநுராதா...''—அவனுடைய உடல் நடுங்கியது. அவள் மெல்ல தலையை உயர்த்திப் பார்த்தாள். அவளுடைய கண் களில் கண்ணீருக்கு மத்தியிலும் ஒரு பெருமிதம் கூத்தாடிக் கொண்டிருந்தது.

''என்னுடைய பஞ்சை மனதுக்கு உங்களைப் புரிந்து கொள்ளும் சக்தியில்லை! என்னை மன்னித்து விடுங்கள். இதோ நீங்கள் சொன்னபடியே செய்கிறேன்!''— அவள் கண்களைத் துடைத்துக்கொண்டு, ஊஞ்சலில் ஆடத் தொடங் கினாள்.

விஜயனின் முகம் மலர்ந்தது. அவன், அவளையே பார்த் துக்கொண்டிருந்தான்.

ஊஞ்சலில் சங்கிலி மாட்டப்பட்டிருந்த உத்தரத்துக்கு மத்தியிலே மின்சார விளக்கு ஒளி வீசிக்கொண்டிருந்தது.

ஒரு விட்டில்...அந்த ஒளிச்சுடரின் அழகிலே சொக்கி அதையே வட்டமிட்டுக் கொண்டிருந்தது! அந்த ஒளிச் சுடருக்கும், விட்டிலுக்கும் மத்தியில் கண்ணாடிக்கூடு...

அநுராதா ஒளிச்சுடராக ஆடிக்கொண்டிருந்தாள். விஜயன் விட்டிலைப்போல அவளுடைய அழகை இதயத்தால் வட்டமிட்டுக் கொண்டிருந்தான்! அவர்களுக்கு இடையிலே கண்ணாடிக்கூடு போல......கலை...உயிர்பெற்றுக் கொண்டிருந்தது!

"கொர்...கொர்..."— திண்ணையில் படுத்திருந்த அப்பாச் சாமியின் 'குறட்டை' சப்தம், விஜயனின் காதுகளைக் குடைந்தது. ஆனாலும் அவனுடைய கையிலிருந்த தூரிகை, திரைச்சீலையில் நர்த்தனமாடிக் கொண்டிருந்தது நிற்கவே இல்லை!

அநுராதா...காற்றைக் கிழித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய கண்களிலே ஒரு மயக்கம்! வாரி விடப்பட்டிருந்த கேசம், லேசாகக் கலைந்து கொண்டிருந்தது! அவளுடைய மேலாடை அவளுடைய அழகின் வெற்றிக் கொடியாக படபடத்துக் கொண்டிருந்தது!—திரைச்சீலையில் அற்புதமான ஓவியம் உருவாகி விட்டது!

விஜயன் அந்தச் சித்திரத்தை ஒருமுறை பார்த்தான். அவனது முகத்திலே வெற்றியின் பெருமிதம் தெளிந்தது. அவனது கனவு உயிர்பெற்று விட்டது! அன்று, அவன் நடனத்திலே கண்ட அதே அநுராதா...இன்று சித்திர உருப்பெற்று விட்டாள்.

அவனது கையிலிருந்த தூரிகை மெல்ல...அநுராதாவின் முகத்தை வருடியது...செம்மையின் நீர்க்கோலம் அவளுடைய முகத்தில் ஏறியது! அதுகூட அவளுடைய முகத்துக்கு ஒரு சோபையைத்தான் அளித்தது!

விஜயன் திரும்பிப் பார்த்தான்! அநுராதா குழந்தை போல் ஊஞ்சலிலே படுத்திருந்தாள். அவளுக்கு நல்ல தூக்கம்!

அவள் எப்போது தூங்க ஆரம்பித்தாள்?—விஜயன் மனதில் ஒரு கேள்வி!

‘டண்ண்...’— சுவர்க்கடிகாரம் மணி ஒன்று என முழங்கியது!

விஜயன் சாயங்காலம் ஐந்து மணிக்கே அநுராதாவின் வீட்டுக்கு சித்திரம் வரைவதற்கு வேண்டிய உபகரணங்களோடு வந்து விட்டான்! அவன் வந்ததிலிருந்து அநுராதா ...அவனுக்குத் தேவைப்பட்ட ‘சித்திர நிலை’ கொடுப்பதற்கென்று ஊஞ்சலில் அமர்ந்து ஆடியபடியே இருந்தாள்.

ஐந்து மணியிலிருந்து ஒரு மணி வரையில்—எட்டு மணி நேரங்கள்...! அவள் இரவு சாப்பாட்டுக்குக்கூட எழுந்து செல்லவில்லை!

பத்துமணிச் சங்கு ஊதும்போதுகூட அவள் விழித்துக் கொண்டுதானேயிருந்தாள்! விஜயனின் மனதிலே ஒருநினைவு!

அதற்குப் பிறகு விஜயன் அவளைக் கவனிக்கவே இல்லை! ஒருவேளை அவள் அதற்குப் பிறகுதான் தூங்கி இருப்பாளோ?

‘ஹீம்ம்ஸ்...ஹீம்ம்ஸ்...’—அநுராதா மூச்சுவிடும் ஒலி மெல்லியதாகக் கேட்டது! அவள் அயர்ந்து தூங்குகிறாள்.

இரண்டு இரவுகள்...! அந்த இரண்டு இரவுகளில் ஒரே இடத்தில் அமர்ந்தபடி அவனுக்கு ‘மாதிரி’யாக இருப்பதென்றால் சாமான்யமானதா? எவ்வளவு கஷ்டம்!

விஜயன், மெல்ல அவளருகில் சென்று, அவளுடைய முகத்தைக் கவனித்தான். அவளுடைய முகத்திலே களைப்பில்லை—சோர்வில்லை! ஆனால் ஒரு சிரிப்பு—உறக்கத்தில்கூட அவளுடைய முகத்தில் சிரிப்புத்தான் இருந்தது!

அவன் திரும்பி தான் வரைந்திருந்த சித்திரத்தைப் பார்த்தான். அதிலும் அவள் சிரித்துக் கொண்டுதான் இருந்தாள். அவன் திரும்பியும் அநுராதாவைப் பார்த்தான்.

சிரிப்பு—சிரிப்புத்தான் இருந்தது! ஆனால் அந்தச் சிரிப்புகளிடையே ஒரே ஒரு கண்ணிய வேறுபாடு! சித்திரத்திலுள்ள அநுராதாவின் சிரிப்பிலே—ஒரு ஏக்கம்—நிறைந்த மயக்கம் இழைந்து கொண்டிருந்தது. ஆனால் உறங்கிக்கொண்டிருந்த அநுராதாவிடமோ—? அதில்தான் எவ்வளவு நிம்மதி!

அவள், அவன் வேண்டிய காணிக்கையை அளித்துவிட்டோம் என்று நிம்மதியாக உறங்குகிறாளா?

விஜயன் மெல்ல பெருமூச்செறிந்து கொண்டான்!

முற்றத்துக் கம்பிகளின் இடுக்கு வழியாக காற்று ஜிலு ஜிலுவென்று வீசியது. நிலவு ஒளிப்பட்டைகளாக தரையிலே அப்பிக் கொண்டிருந்தது!

அவன் மீண்டும் அநுராதாவைப் பார்த்தான். மெய்ம் மறந்த நிலையில், உறக்கத்திலே அவளுடைய உடல் சிந்திக் கொண்டிருந்த அழகை மீண்டும் பார்த்தான்! மேடிட்டு விம்மித் தணிந்து, வெள்ளை ஜாக்கெட் பளபளப்பிலே, குத்திட்டுக் கொண்டிருக்கும் தசைக் கோணங்கள்— இரவிக்கை முடிச்சுக்குக் கீழே, புடவைக் கட்டுக்கு மேலே நிலவிலே ஒளிவீசும் சந்திர காந்தக் கல்சுற்று வளையம் போன்ற வயிற்றின் அடிப்புறம் — தந்தக் கழுத்திலே தொண்டைக் குழியை ஒட்டி ஓடும் வெற்றிலை நரம்பு போன்ற பச்சைக் கோடு— மாதுளை முகத்தின் இரத்தச் சிவப்பிலே குவிந்த தாமரை மொக்கு போன்ற உதடுகள்—மாம்பழக் கதுப்புக் கன்னங்களிலே வரிக்கோலம் போட்டிருந்த கேசச் சுருள்கள்— நெற்றிப் பொட்டுக்கு கீழிருந்து வளர்ந்து உயர்ந்து மேல் ஒரு விரற்கடை இடைவெளி விட்டுத் தொட்டுக் கொண் டிருக்கும் அழகிய எள்ளுப்பூ நாசி - அகல் விளக்கின் ஒளிச் சுடர்போல, உறக்க நிலையிலே லேசாகத் துடிதுடித்துக் கொண்டிருக்கும் கண்ணிமைகள்--பிறைக் கீற்றுப் போன்ற நெற்றி!......

அவனுடைய உடலிலே ஒரு சிலிர்ப்பு! அவன், மெல்ல அநுராதாவின் கரங்களைத் தொட்டான்...அவள் கையிலே ஒரு லேசான நடுக்கம் ! ஆனால் அவளுடைய கை துவண்டு கொடுத்தது!

அவனுடைய மனதிலே ஒரு உந்தல்! அவன் அந்தக் கையை எடுத்து நெஞ்சோடு அணைத்துக்கொண்டான்! அவனுடைய இதயத்திலே ஒரு கிளுகிளுப்பு! அவனுடைய உடல் கதகதத்தது! அவன் மெல்லக் குனிந்து அவளுடைய முகத்தைப் பார்த்தான். அவள் முகத்திலே இருந்த சிரிப்பு, மாறவே இல்லை!

அவளுடைய உதடுகள்—அந்த உதடுகளிலே நெளிந்து நடனமாடிக் கொண்டிருந்த உணர்வு அலைகள்—காந்தத்

துண்டங்கள்போல அவனை இழுத்தன!, அவன் குனிந்தான். அவனுடைய உதடுகளுக்கும் அவளுடைய உதடுகளுக்குமுள்ள இடைவெளி குறைந்து குறைந்து...நூலிழையில் வந்து நின்றது...

"ஹா..."—ஒரு அலறல்! விஜயன் அதிர்ச்சியடைந்தவனாக முகத்தைப் பின்னுக்கு இழுத்துக்கொண்டான். அநுராதா மிரள மிரள விழித்தபடி விஜயனைப் பார்த்தாள்.

"அநுராதா..."— விஜயன் அவளுடைய கரத்தை மெல்ல அழுத்தியபடி அழைத்தான். அநுராதாவின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந்தது!

"ஏன் அழுகிறாய், அநுராதா?"—அவன், மெல்ல அவளை கையைப்பற்றி இழுத்தான்! அநுராதாவின் முகத்திலே சவக்களை தட்டியது! அவள், அவனை ஒருமுறை உற்றுப் பார்த்தாள். திரும்பி அந்த சித்திரத்தைப்பார்த்தாள்!

"உங்கள் வேலை முடிந்து விட்டதல்லவா?...போங்கள்... இங்கிருந்து போய் விடுங்கள்..."— அவள் தன் கையை 'வெடுக்'கென்று இழுத்துக்கொண்டு வேகமாகச், சொன்னாள்.

"அநுராதா..."— அவன் திகைத்தபடி அவளைப் பார்த்தான்.

"நீங்கள் நிற்க வேண்டாம்...போய் விடுங்கள்... அய்யோ...அம்மா!" அவள் கதறினாள். விஜயனுக்கு ஒன்றுமே புரியவில்லை! அவள் முகத்தை தன்னிரு கரங்களால் மூடியபடி உடம்பை முறித்துக்கொண்டாள்!

"ஏன், இன்னும் நிற்கிறீர்கள்?"

பழுக்கக் காய்ச்சிய இரும்புச் சலாகையால் அவனுடைய இதயத்தில் யாரோ சொருகுவது போல இருந்தது. அவன், அநுராதாவைப் பார்க்காதபடி தலையைக் குனிந்துகொண்டே வெளியே நடந்தான்!

'படார்...'— என்று கதவு மூடப்படும் ஒலி! அதைத் தொடர்ந்து அநுராதா 'கேவிக் கேவி' அழுவது கேட்டது! அவன் மெல்ல திரும்பிப் பார்த்தான்! அப்பாச்சாமி இவ்வுலக நினைவின்றி தூங்கிக் கொண்டிருந்தான்! விஜயன் தள்ளாடித் தள்ளாடிக் கொண்டு நடந்து போனான்!

# 7. பிரளயம்

'ஏன் நிற்கிறீர்கள்?'— அநுராதா ஆவேசம் வந்தவள் போல சொன்ன வார்த்தைகள், அவனது செவியில் ரீங்கரித்துக் கொண்டே இருந்தன! அவனுடைய இதயத்திலே ஆயிரம் ஆயிரம் குளவிகள் ஏககாலத்தில் கொட்டுவது போன்ற கடு கடுப்பு! அவன், 'ஈஸி சேரில்' படுத்துப் புரண்டபடி துடித்துக் கொண்டிருந்தான்! அவனால் முதல்நாள் இரவு நடந்த நிகழ்ச்சியின் அடியைத் தாளவே முடியவில்லை!

''தபால்...''—'சொத்'தென்று வீட்டினுள்ளே தபால் உறையொன்று வந்து விழுந்தது! விஜயன் சோர்வோடு எழுந்து, அந்தத் தபால் உறையை எடுத்துப் பிரித்தான். காவேரிதான் எழுதியிருந்தாள்.

'அன்புள்ள அத்தான்,

வந்த இடத்தில் ஏற்பட்ட சூழ்நிலைகள் எங்களை உடனே திரும்பும்படி வைக்கவில்லை; தங்கி விட்டோம்! ஆனால் நாளைக்குள் எப்படியும் அங்கு திரும்பி விடுவோம்.

உங்களைப்பற்றிய கவலைதான் எனக்கு! ஒரே நாள் தான் இடையில் இருக்கிறது. எப்படியாவது—கஷ்டமாக இருந்தால்கூட—பல்லைக் கடித்துக்கொண்டு ஓட்டி விடுங்கள்!

இங்கே பெண் பார்க்க வந்தவிடத்தில் நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. அந்தப் பெண் முன்னமே யாரையோ ஒரு பையனைக் காதலித்து வந்ததாம்! எப்படியோ நாராயண அண்ணன் அதை விசாரித்துத் தெரிந்துகொண்டு விட்டது! அதோடு, அந்தப் பெண் வேண்டாம் ஊருக்குத் திரும்பி விடுவோம் என்று வந்தாலாவது தேவலையே! அதுவும் இல்லை...தேடு தேடென்று தேடி, அந்தப் பையனைக் கண்டுபிடித்து இழுத்துக் கொண்டு வந்து விசாரித்தது! அந்தப் பையனும், தான் அந்தப் பெண்ணைக் காதலிப்பது உண்மைதான் என்று ஒப்புக்கொண்டு விட்டான்! அப்புறம் அவனையே தன்

கூட அழைத்துக் கொண்டு பெண் பார்க்க கிளம்பி விட்டது!

பெண் வீட்டார்கள் பயந்து போய் விட்டனர். அந்த சூட்டோடு சூடாக நாராயணனே அந்தப் பைய னுக்காக பெண் பேச ஆரம்பித்தது! அவர்கள் முதலில் பிடிகொடுத்துப் பதில் சொல்லவில்லை! கொஞ்சம் முரண்டிக் கொண்டுதான் இருந்தார்கள். ஆனால் நாராயண அண்ணன் மிகவும் நயமாகப் பேசி அவர்களை ஒத்துக் கொள்ளும்படி செய்து விட்டது! இப்போது அந்தப் பையனுடைய பெற்றோர்களிடம் பேசச் சென் றிருக்கிறது. எப்படி வேடிக்கை!? இன்றைக்குள்ளே அந்தப் பேச்சு முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை. நாளைக்கும் இழுக்கும்போல இருக்கிறது. என்ன செய்வது? யாராவது ஒருவர் முனைந்து நின்றால்தானே ஒரு காரியம்—அதுவும் நல்ல காரியம்—சீக்கிரம் முடியும்!

எனக்குக்கூடப் அந்தப் பெண்ணையும், பையனையும் பார்க்கும்போது மிகவும் பாவமாக இருக்கிறது. அவர்கள் உண்மையிலேயே ஒருவரை ஒருவர் ரொம்ப விரும்பியிருக் கிறார்கள்; நாராயண அண்ணனுடைய செய்கை ஆரம் பத்தில் ஏதோ பைத்தியக்காரத்தனம் போல தோன்றி னாலும், இப்போது பார்க்கும்போது அது செய்ததுதான் சரியென்று தோன்றுகிறது. எப்படியாவது அந்த இளம் ஜோடி திருமணம் செய்துகொண்டு சுகமாக இருக் கட்டும்!

நாராயண அண்ணனுக்கு வேறு பெண் கிடைக் காமலா இருந்து விடப்போகிறது? அதனுடைய குணத் துக்கு ஆயிரம் பெண்கள் காத்துக் கொண்டிருப் பார்கள்...!

மற்ற விபரங்களை நேரில் சொல்லுகிறேன்.

தங்கள் அடியாள்,

காவேரி

விஜயன் கடிதத்தை மெல்ல மடித்து வைத்தான்.

தான் மணக்கவேண்டும் என்ற ஆசையோடு பார்க்கப் போன பெண், வேறொருவனை விரும்புகிறாள் என்று தெரிந்த

வுடன், அவனுக்கே அவளைத் திருமணம் செய்து வைக்கப் பாடுபடும் நாராயணன் எங்கே? ஒருத்தியின் விருப்பத்தை உணராமல், அவளிடம் தவறுதலாக நடக்க முற்பட்டு அவமானமடைந்து திரும்பியதானெங்கே? — விஜயனின் மனம், அவமானத்தால் குன்றிப் போனது!

நாராயணன், ஒழுக்கத்தின் சிகரம்...அவன் எந்த நிலையிலும்—எந்தவிதமான சோதனையிலும், மாற்று உயர்ந்து தான் விளங்குவான்! ஆனால்...?

'அநுராதா...'— விஜயன் மெல்ல பெருமூச்செறிந்தான். பனிக்காலத்தில் குளிர்ந்து இருக்கும் உடலில் நீர் தெளித்தால் உண்டாகும் நடுக்கம்போல அவனுடைய இதயம் ஆடியது!

அவள், அவனிடம் எவ்வளவு மரியாதையோடு பழகினாள்? எவ்வளவு நம்பிக்கையோடு நெருங்கி உறவாடினாள்?

கடைசியில்...கடைசியில்...

'ஏன் நிற்கிறீர்கள்?'—அவளுடைய அந்த ஆவேசக்குரல்! அவனுடைய நெற்றிப் பொட்டிலே புடைத்தெழுந்த நரம்பு தெறித்து விட்டது போன்ற உணர்வு! அவனுடைய மனதில் நெருப்பு கனிந்தது. உடல் 'கண கண' வென்று எரிந்தது! அவனுடைய தலை கிறு கிறுத்தது!

அவன் கண்களை மூடிக்கொண்டு அப்படியே சாய்ந்து விட்டான்!

யுகங்கள்...ஆடி அசைந்துகொண்டு கழிந்தன!

'பட்...பட்—'—கதவை மெல்ல தட்டும் ஒலி!

"காவேரி..."—அதை மெல்ல முணு முணுத்துக் கொண்டான். ஆனால் கண்களைத் திறக்க முடியவில்லை! மீண்டும் கதவு தட்டப்படும் ஒலிகள்!

"வா...காவேரி...வா..."—விஜயனின் தலை மெல்ல ஆடியது.

"சார்..."

விஜயன் திடுக்கிட்டான். அது காவேரியின் குரலில்லை! அவன் அவளுக்கு 'சார்' அல்ல— கணவன்—அத்தான்! அவள் 'சார்' என்று அழைக்கவே மாட்டாள்!

"சார்..."

விஜயன் மெல்ல திணறிக்கொண்டு எழுந்தான்! அவனுக்கு நடக்கக்கூடத் தெம்பில்லை!

"என்ன சார், தூங்குகிறீர்களா?"—அது அநுராதாவின் குரலேதான்!

"அநுராதா..." —அவன் ஒரே எட்டில் கதவைத் திறந்து விட்டான். அநுராதா தலைகுனிந்தபடி வாசலில் நின்று கொண்டிருந்தாள்.

"அநுராதா..." — அவனுடைய குரல் சோர்ந்தது. உடல் சோர்ந்தது! அவனால் நிலைத்து ஒருஇடத்தில் நிற்கவே முடியவில்லை! அடுத்த கணம்...

அநுராதா அவனைத் தாங்கிப் பிடித்துக்கொண்டாள். அவனுடைய உடம்பு மழுப்போல காய்ந்துகொண்டிருந்தது!

"என்ன சார், இப்படி உடல் கொதிக்கிறது!"

"அது என் இதயத்தின் எதிரொலி, அநுராதா..."— அவன் சோர்வோடு பதில் சொன்னான். அவன் மெல்ல நகர்ந்து நகர்ந்து சென்று சாய்வு நாற்காலியில் அமர்ந்தான்! அநுராதாவின் கண்களில் நீர் துளிர்த்தது!

"சார்...நீங்கள் வரைந்து முடித்த சித்திரம்...இதோ இருக்கிறது!"—அவள் தன் கையிலிருந்த சுருளைப் பிரித்துக் காட்டினாள்!

"அநுராதா ... உனக்குப் புண்ணியமாக இருக்கும்; அதை...அதை..."—அவன் 'சட்' டென்று முகத்தை மூடிக் கொண்டான். அவளுக்கு ஒரு அதிர்ச்சி! அவளுடைய கையிலிருந்த சித்திரம் நழுவிக் கீழே விழுந்தது!

"சார்..."

"அநுராதா...நீ போய்விடு! நீ போய்விடு! போகும் போது அந்த சித்திரத்யையும் எடுத்துக்கொண்டே போய் விடு!"

அநுராதாவின் கண்களிலிருந்து நீர்த்துளிகள் பொல பொலத்தன!

"நான் போய்விடுகிறேன், சார்...ஆனால் நீங்கள் அந்தச் சித்திரத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்..."

"சித்திரம்...ஹா...எனக்கு வேண்டாம் அந்த சித்திரம்! அந்தச் சித்திரத்தில் எனக்கு எந்த உரிமையும் இல்லை!... வேண்டாம்..."

அவள் மெல்ல சிரித்தாள்.

"சார்...அந்த சித்திரம் என்னுடைய இதயத்தின் காணிக்கை!"

விஜயன் திடுக்கிட்டபடி அவளைப் பார்த்தான்.

"மாசும், தூசும் என்னுடைய உடலைக் கவிந்து இருக்கலாம்...ஆனால்..."

"அநுராதா..."

"என்னுடைய காணிக்கையை இந்த உடலால் அளிக்க விரும்பவில்லை...இதயத்தால் அளிக்க விரும்பினேன்... அளித்தேன்!"

"அநுராதா..."—அவன், அவளை எட்டிப் பிடித்து அணைத்துக்கொண்டான்! அவனுடைய உடலிலே ஒரு சிலிர்ப்பு!

"என்னை விட்டு விடுங்கள்...என்னை விட்டுவிடுங்கள்..."— அவள் மெல்ல அவனுடைய பிடியை விலக்கி, நாற்காலியில் அமர வைத்தாள்.

"என்னைத் தீண்டி உங்களைக் களங்கப்படுத்திக்கொள்ள வேண்டாம்...! இந்த உள்ளம் பல ஆண்டுகளாக ஒரு மனிதனைப் பார்க்க வேண்டுமென்று துடியாய்த் துடித்தது! நீங்கள் எனக்கு 'தெய்வ'மாகக் கிடைத்தீர்கள்!...என் தெய்வம் களங்கமில்லாமலேயே இருக்கட்டும்..."—அவள் தேம்பித் தேம்பி அழுதாள்!

விஜயனின் முகத்திலே ஆச்சரியம் அலை மோதியது!

"அநுராதா..."—அவனுடைய குரலில் விவரிக்க இயலாத ஒரு துடி துடிப்பு! அவன் கீழே கிடந்த சித்திரத்தை மெல்ல குனிந்து எடுத்தான். அதில் அநுராதா ஆடிக்கொண்டிருந்தாள்...தரைக்கு உயரே அவள் அந்தரத்தில் அவள் கால்கள் காற்றை உதைத்துக்கொண்டிருந்தன!

அவன், அதை தன் நெஞ்சோடு அணைத்துக்கொண்டான். அநுராதாவின் முகம் மலர்ந்தது!

"நான் வருகிறேன் சார்!"

"நில் அநுராதா...உன்னை நான் இப்போதுதான் புரிந்து கொண்டேன்! இனி நான் உன்னைத் தீண்டவே மாட்டேன்! நீ என் பக்கத்திலேயே இரு! என் உள்ளக் கொதிப்பை குளிர வித்ததுபோல என் உடல் கொதிப்பையும்...''

''நான் சென்று வைத்தியரை அழைத்து வரட்டுமா?"—அவள் படபடப்போடு இடைமறித்துக் கேட்டாள். விஜயன் விரக்தியோடு சிரித்தான்.

அநுராதா, அவனைக் கவலையோடு பார்த்தாள்.

"வா...அநுராதா...நீ என் அருகில் வா! உன் நிழல் என் மேல் படட்டும். நான் அமைதியாக...நிம்மதியாக..."—அநுராதா 'சட்'டென்று அவனுடைய உதடுகளைப் பொத்தினள். அவனுடைய நாசியிலிருந்து வெளிக் கிளம்பிய அனல் மூச்சு, அவளுடைய கையைச் சுட்டது!

"அம்மா...என்ன சூடு!"— அவள் பெருமூச்செறிந்தாள்.

"இல்லை அநுராதா...உன் விரல்கள் குளிர்ச்சியாகத்தான் இருக்கிறது!"—அவன் மெல்ல சிரித்தான். அவள் மௌனமாக இருந்தாள்.

"என் கண்களை இப்போது என்னுலேயே நம்ப முடியவில்லை! இன்று — நீ புதிய அநுராதாவாக எனக்குத் தோன்றுகிருய்!"

"இல்லை, நான் எப்போதும்போலத்தான் இருக்கிறேன்...! நான் நினைத்தால்கூட என்னை என்னுல் மாற்றிக்கொள்ள முடியாத அளவுக்கு சேற்றிலே புதைந்துபோய் கிடக்கிறேன்..."

"சேற்றிலேதான் செந்தாமரை கிடைக்கும்..."

''இஹ்ஹிஹ்ஹிம்..."—அவள் அலட்சியமாகச்சிரித்தாள்.

"ஏன் சிரிக்கிருய் அநுராதா?"

"சேற்றிலே உழலும் செந்தாமரை வானத்தில் ஒளி பரப்பும் ஆதவனைக் கண்டு மலர்ந்து என்ன பயன்?"

அவளுடைய கேள்வி விஜயனை உலுக்கியது.

"அநுராதா..."

"வண்டுகளுக்கு தேனை அளித்துவிட்டு, எச்சில் பாண்டமாக ஆதவனைப் பார்த்து அழ ஏங்கிக்கொண்டிருக்கலாம்—

கூம்பி மடியலாம்! அதற்குமேல் அந்தத் தாமரையால் என்ன செய்ய முடியும்?"—அவள் பெருமூச்செறிந்தாள்.

"அநுராதா..."—அவனுடைய கண்களில் நீர் குபு குபுத்தது! அவனுடைய கண்கள் சிவத்து பளபளத்தன! அநுராதா மெல்ல அவனுடைய கண்ணீரை துடைத்தாள். அவன் அந்த வளைக்கரங்களை இறுகப் பற்றிக்கொண்டான்!

"அநுராதா...நீ என்னை விண்ணுக்கு உயர்த்துகிறாய்—ஆனால், என் இதயமோ இந்த மண்ணையே வட்டமிட்டுக் கொண்டிருக்கிறது. நான் 'திரிசங்கு' போல...திண்டாடுகிறேன்..."

"கடகட'வென்று ஓடிவந்த வண்டி ஒன்று வாசலருகில் நின்றது!

"யாரது?"—அநுராதா முன்னுக்கு நடந்தாள்!

"யார்...நீயா?"— நாராயணனின் அதட்டும் குரல் கேட்டது. விஜயன் திடுக்கிட்டான். அநுராதா தலை குனிந்தாள்!

"உனக்கு இங்கே என்ன வேலை? போ...வெளியே..."—நாராயணன் கத்தினான். அநுராதா விஜயனைப் பார்த்து பெருமூச்செறிந்தபடி வெளியே நடந்தாள். விஜயன் பிரமை பிடித்தவன்போல மலைத்துப் போய் நின்றான்!

நாராயணன் கோபத்தால் சிவந்த விழிகளை உருட்டிக் கொண்டு உள்ளே நுழைந்தான்! அவனுக்குப் பின்னால் காவேரி...கண்ணீரும் கம்பலையுமாக நின்றாள்!

விஜயனின் கண்கள் இருவரையும் பார்க்கவே கூசின!

"அத்தான்...யார் அவள்?"—விம்மலுக்கிடையில் காவேரி கேட்டாள். விஜயன் தலைகுனிந்தபடி மௌனமாக நின்றான். நாராயணன் சுற்றுமுற்றும் பார்த்தான். அவனுடைய கண்ணிலே அந்தச் சித்திரம் தட்டுப்பட்டது!

"ஓஹோ...அவளை இதுபோன்ற ஒரு சித்திரம் வரைவதற்கு என்றுதான் காவேரியை என்னுடன் தனியாக அனுப்பி வைத்தாயோ?"—நாராயணனுடைய பேச்சில் கோபத்துக்கு மத்தியிலும் 'கிண்டல்' சுழிவிட்டுக் கொண்டிருந்தது! அவன் அதற்கும் பதில் சொல்லவில்லை!

நாராயணன் கோபமாக சிரித்தான்!

"ஏன் வாயடைத்துப்போய் நிற்கிறாய்? செய்த குற்றத்தை மறைக்கக் காரணம் கற்பித்துச் சொல்ல யோசனை செய்துகொண்டிருக்கிறாயா?"

"நாராயணா..." —விஜயன் அலறினான்.

"என் பெயரைச் சொல்லி கூப்பிட உனக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? உனக்கு உண்மையாக காலம் முழுவதும் நடந்து வந்த உன் மனைவிக்கே, உண்மையாக நடக்க முடியாத நீ, என்ன உரிமையில் என்னை பெயரிட்டுக் கூப்பிடுகிறாய்?"

"நான் காவேரிக்கு எந்தவிதமான துரோகமும் செய்யவில்லை! இப்போது அது ஒன்றைத்தான் என்னால் சொல்ல முடியும்..."

"வேறென்ன சொல்ல முடியும், இதைத் தவிர! உன்னுடைய வேஷம் கலைந்தபிறகு உன்னால் இந்தப் பசப்பு மொழிகளைத் தவிர வேறு என்ன சொல்ல முடியும்?"—அவன் ஆத்திரத்தோடு கத்தினான்.

"அத்தான்...இதெல்லாம் என்ன...?"—காவேரி விஜயனிடம் ஏக்கத்தோடு கேட்டாள். விஜயன் மெல்ல அவளருகில் வந்தான்.

"நில் அப்படியே...! உன்னுடைய பாப நிழல்கூட இந்தப் புனித உடலை தீண்டக்கூடாது!...... காவேரி ... நீ இங்கே வாம்மா!"—நாராயணனின் குரல் தழுதழுத்தது! காவேரி திகைத்தபடி நின்றாள்.

"தங்கச் சிம்மாதனத்திலே நாய்க்கு இடங் கொடுக்கக் கூடாதம்மா! இவன் நாயினும் இழிந்தவன்..."—நாராயணை கண்களில் நீர் வழிந்தது.

"அண்ணா..."—அவள் தேம்பித் தேம்பி அழுதாள்.

"அழாதே அம்மா! உன் கண்ணிலிருந்து உதிரும் ஒவ்வொரு சொட்டு கண்ணீருக்கும் இவன் பதில் சொல்லாமல் என்னிடமிருந்து தப்பிவிட முடியாது!"—அவன் உடம்பை சிலிர்த்துக்கொண்டு சிங்கம் போல முன்னுக்கு வந்தான்!

"நாராயணா...நீ என்ன நினைத்துக்கொண்டு இதுபோல பேசுகிறாய்?"

நாராயணன் பயங்கரமாகச் சிரித்தான்!

“உனக்கு, என்னை கேள்வி கேட்கக் கூட, வாய் இருக்கிறது! ஹும்ம்...அநுராதா ஏன் இங்கே வந்தாள்?”

‘‘ஏனு?...அது...அது...அவள் இஷ்டம்!’’

‘‘அவள் இஷ்டம்!’’—நாராயணன் பற்களை கடித்துக் கொண்டான்.

“இது யார் வீடு தெரியுமா?...இது என் தங்கை காவேரியின் வீடு...என் தங்கை காவேரியின் வீடு...! இந்த வீட்டுக்குள் இவளுக்கு என்ன வேலை...?” —அனல் பிழம்பாக நாராயணனின் முகம் ஜொலித்தது!

“நாராயணு...தெரியாத்தனமாக தவறு நடந்துவிட்டது. அவள் இங்கே வந்துவிட்டாள்...அதற்காக மன்னித்து விடு!”—விஜயன் மிகவும் நயமாக அவனுடைய கையை பிடித்தான். ஒரு உசும்பல்—விஜயனின் கை ஊசலாடியது!

“தவறு...எது தவறு? அநுராதா யார்? எப்படிப்பட்டவள் என்பது உனக்கே தெரியும்...! தெரிந்திருந்தும் நீ அவளை உள்ளே அநுமதித்து இருக்கிருய்? ஏன் அப்படித்தானே...”

“நாராயணு...நீ தயவுசெய்து அநுராதாவைப்பற்றி ஒன்றும் பேசாதே...”

“பேச வேண்டிய நேரம் வந்துவிட்டதே அதற்கு நான் என்ன செய்வது? இதோ...பார்...என் தங்கை காவேரியைப் பார்? இந்த வைரத்தைவிட அந்தக் கூழாங் கல்லிலே நீ என்ன ஜொலிப்பதைக் கண்டாய்?”—அவன் சீறினுன்.

“இதற்கு நான் பதில் சொல்லித்தான் ஆகவேண்டுமா?” —விஜயனின் முகம் ‘ஜிவ்’வென்று சிவந்தது.

“பதில் சொல்லப் போகிருயா? சொல்...நன்ருகச் சொல்!”—நாராயணன் ஏளனமாகச் சிரித்தான்.

“இதோ...இந்த சித்திரத்தைப் பார்...அது சொல்லும் உன் கேள்விக்குப் பதில்!”—விஜயன் ‘சட்’டென்று தன் பக்கத்திலிருந்த சித்திரத்தைத் தூக்கிக் காட்டினுன்!

‘டர்...ருர்...டிர்...’ —அந்த சித்திரம் கிழிந்து தூள் தூளானது! நாராயணன் வெறி பிடித்தவன் போல சிரித்தான்.

"ஹா...!" —ஒரு அலறல்! அடுத்த கணம்... 'படார்!'

விஜயன் நாராயணன் கன்னத்திலே ஓங்கி யறைந்து விட்டான்!

எரிமலை தீ நாக்குகளை கழட்டிக்கொண்டு பொங்கி விட்டது.

"ஏய்..." —நாராயணன் குமுறிக்கொண்டு பாய்ந்தான்.

"அண்ணா..." —அவன் எதிரில் காவேரி நின்றுகொண்டிருந்தாள்? விஜயனின் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது!

"அம்மா நீ விலகிக்கொள்ளம்மா! உன்னை தாழ்த்தப் புறப்பட்ட சித்திரம் எந்தக் கதியை அடைந்ததோ, அதே கதியை இவனையும் அடையச் செய்துவிடுகிறேன்! விலகிக் கொள்ளம்மா..."

"அண்ணா! நான் உங்களை கையெடுத்து கும்பிடுகிறேன்..."

"இவனுக்காக நீ கும்பிடவே வேண்டாம் அம்மா... இவன் வஞ்சகன். துரோகி! குற்றம் செய்தவனை தண்டிக்க துணிந்து வரும் இறுமாப்புக்கு தகுந்த பாடம் கற்பிக்க வேண்டும் அம்மா!"—நாராயணனின் கைகள் துடிதுடித்தன! அவனுக்கு மட்டும் நெற்றிக் கண்ணிருந்தால் விஜயனை பொசுக்கியே இருப்பான்!

ஆனால் விஜயனோ 'அபின்' மயக்கத்தில் தள்ளாடுபவனைப் போல ஆடிக்கொண்டிருந்தான்.

"அண்ணா உங்கள் கோபத்தைத் தணித்துக்கொள்ள என்னை வேண்டுமானாலும் ஒரு அடி அடித்து விடுங்கள்..."—காவேரி கைகளை அகல விரித்தபடி கண்களிலே நீர் சோர நின்றாள்.

"குற்றம் செய்தவன்தான் தண்டிக்கப்பட வேண்டும். அதில் சலுகை காட்டினால்—குற்றம் செய்தவனுக்காக வேறொருவர் தண்டனை ஏற்றுக்கொண்டால்—குற்றவாளிகளின் பாடு கும்மாளமாக போய்விடும்!"

"நீங்கள் என் பேச்சைகேட்கவே மாட்டீர்களா; என் கண் எதிரிலேயே அவர் தண்டிக்கப்படுவதை நான் பார்க்கத்தான் வேண்டுமா? சொல்லுங்கள் அண்ணா!"—அவள் படபடப்போடு கேட்டாள்.

"அவனைப்பற்றி நீ கவலைப்படுவதில் ஆயிரத்தில் ஒரு பங்கு உன்னைப்பற்றி அவன் கவலை கொண்டிருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! இந்த துரோகிக்கா அம்மா நீ இவ்வளவு இரக்கம் காட்டுகிறாய்?"

"அவர் துரோகியாக இருக்கலாம்—ஆனால் அவர் என் கணவர்..." —அவள் விம்மியபடி தலைகுனிந்தாள்.

"கணவனென்ற பொறுப்பு கொஞ்சம்கூட இல்லாமல், உன் வீட்டுக்குள்ளேயே இன்னொரு அழுக்குப் பிண்டத்தோடு கொஞ்சிக் குலாவிய இவனை நீ எப்படியம்மா கணவனென்று சொல்லுகிறாய்?"

'ஹா..." —காவேரி தன் கண்களை உருட்டி விழித்தாள்.

"உனக்கு என்ன நெஞ்சு துணிச்சல்? என் கணவனை நான் 'கணவன்' என்று சொல்லக்கூடாதா? என் வீட்டில் நின்று கொண்டு என்னையே பார்த்தா கேட்கிறாய்?"—அவள் ஆவேசம் வந்தவள் போல் பேசினாள். நாராயணன் திடுக்கிட்டு நின்றான்.

"இனி, உனக்கு இங்கே இடமில்லை ...போ...வெளியே..." அவள் குரல் அந்த அறையெங்கும் எதிரொலித்தது!

"காவேரி..."—விஜயன் திடுக்கிட்டவனாக அலறினான்.

"நீங்கள் சும்மா இருங்கள்...! போ...வெளியே!"

நாராயணன் அவளை விறைத்துப் பார்த்தான்!

"என் தங்கை காவேரியா இப்படிப் பேசுவது?"

"இல்லை! அவர் மனைவி காவேரி பேசுகிறேன். போ வெளியே!"

திடீரென்று நாரயாணன் 'கல கல'வென்று சிரித்தான்..

"போகிறேன்...! உன்னை இலட்சியப் பெண்ணாக எண்ணி பூரிப்படைந்திருந்த இந்த நெஞ்சுக்கு இதுவும் வேண்டும். இன்னும் வேண்டும்! உன்னைப் போன்ற 'நளாயினி'கள் இருக்கும் வரையில் வீடும் உருப்படாது; நாடும் உருப்படாது! நான் உங்களை விட்டே தொலைந்து போகிறேன்..."

நாராயணன் 'படார்' என்று தலையில் அடித்துக்கொண்டு வேகமாக வெளியே நடந்தான்.

"நாராயணா...நாராயணா..." விஜயன் அலறினான். அவன் திரும்பியே பார்க்கவில்லை...!

"நாராயணு...நாராயணு..."—அவன் வாசலில் வந்து எட்டிப் பார்த்தான்! நாராயணன், அவனுடைய பார்வையிலிருந்து மறைந்தே போய்விட்டான்!

"காவேரி..."—அவன் சோர்வோடு அவள் பக்கம் திரும்பினுன் காவேரி ஒரு மூலையில் நின்றுகொண்டு, விசித்து அழுதுகொண்டிருந்தாள்! கிழித்தெறியப்பட்ட சித்திரத் துணுக்குகள் அறை பூராவும் சிதறிக் கிடந்தன.

விஜயனுக்கு அதைப் பார்க்க மிகவும் வேதனையாக இருந்தது. அவன் தன் பார்வையை மறைத்துக்கொள்ள கையைக் கொண்டுபோனுன். வலது உள்ளங்கை சிவந்து இருந்தது.

அவன் அந்தக் கையை நெரித்து முறித்துக்கொண்டான்.

ஒரு சித்திரம் போனுல் இன்னொரு சித்திரம் வரைந்து கொள்ளலாம். ஆனுல் நாராயணன் போன்ற ஒரு நண்பன் போய்விட்டால் இன்னொரு நண்பன் அவனைப்போன்று கிடைத்துவிட முடியுமா?

"நாராயணு..."—அவன் தேம்பித் தேம்பி அழுதான் அவனுடைய உடலே சோர்வு அசத்தியது...அவன் நாற்காலி தொப்பென்று சாய்ந்தான்!

முனகல்—வேதனைக் குமுறல் இவைகள்தான் முடிவாக அங்கே நிலவி நின்றது!

## 8. இரு மலர்கள்

நாராயணன் ஊரைவிட்டு எங்கேயோ போய் விட்டான் என்று கேள்விப் பட்டதும் விஜயன் அதிர்ச்சி யடைந்தே போனுன்! அவன் எங்கு போனுன் என்பது அவனுடைய அம்மாவுக்கே தெரியவில்லை!

ஆனுல், அவன் ஏன் போனுன் என்பது விஜயனுக்குத் தெரியும்!

அவன் தன்னுல்தான் போனுன்—தன்னுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றத்தினுல் உண்டான மன அதிர்ச்சிதான் அவனை எங்கேயோ விரட்டிவிட்டது! அவன் போய்

விட்டான்!—விஜயனின் மனதில் குமுறி எழுந்த எண்ணங்கள் அவனை நோக்கி சீறிப் பாய்ந்தன.

நாராயணன் மீது ஒரு தவறுமில்லை. அவன், என் குடும்ப வாழ்க்கை சீர் குலையக்கூடாது என்ற நல்லெண்ணத்தினுல் தான் சீறிப் பாய்ந்தான். அந்த சித்திரத்தைக் கிழித்து எறிந்தான்! ஆனுல் நான்...நான்...?

அய்யோ...எவ்வளவு பலமான அடி...அவனுக்கு விழுந்து விட்டது!

விஜயனின் மனம் குலுங்கியது!

'போ...வெளியே!...'—காவேரி ஏன் அவனை அப்படிச் சொன்னுள்? நாராயணன் அவளை தன்னுடன் பிறந்த தங்கைக்கு மேலாகவல்லவா நேசித்து வந்தான்! அவன் அவளுடைய அந்த கொடுஞ் சொற்களைக் கேட்டு எவ்வளவு துடித்து இருப்பான்?

காவேரி, என் மனைவி என்ற உணர்வில் அவனை அந்த அளவு கொடுமைப்படுத்தி இருக்கக்கூடாது...! அவள்... அவள்...?—அவள் அவனுக்குத் தங்கையாகவே இருந்து அவனுடைய நொந்த உள்ளத்திற்கு இதமளித்திருக்கலாம்...!

'நாராயணா...நாராயணு...'—அவனுடைய உதடுகள் முணு முணுத்துக் கொண்டன! அவனுடைய உடல் கொதித்தது. உள்ளம் கொதித்தது—அவனுடைய மூளை குழம்பியது!

'கள...கள'—கண்ணுடிப் பாத்திரத்தில் ஊற்றப்படும் ஒலி! விஜயன் கண்களை திறந்து பார்த்தான். காவேரி ஒரு 'கிளாஸில்' மருந்தை ஊற்றி அவனிடம் நீட்டினுள்!

"எனக்கு மருந்து வேண்டாம்!"—அவன் தலையை உலுக்கிக் கொண்டான். காவேரி, அழுகை தொண்டையில் அடைக்க முகம் சோர்ந்து அவனைப் பார்த்தாள்.

"காவேரி எனக்கென்று இப்போது யாருமே இல்லை... நான் தனி ஆளாகி விட்டேன்!"—அவன் பித்தன் போல புலம்பினுன். காவேரியின் கண்களில் நீர் வழிந்தது. விஜயன் அவளைப் பார்த்தான்; திடுக்கிட்டான்!

"நீ ஏன் அழுகிருய், காவேரி!"

அவள், கண்களை 'சட்'டென்று துடைத்துக் கொண்டாள்.

"நான் அழவில்லை!"— அவள் பேச்சில் உயிரில்லை!

"காவேரி...நீ என்னை சித்திரவதை செய்கிறாய்...! என்னால் இதைத் தாளவே முடியவில்லை! நீ என்னை மனம் கொண்ட மட்டும் திட்டு...பேசு! இதுபோல நான் சொல்வதற் கெல்லாம் கட்டுப்பட்டுக் கொண்டே இருக்காதே!"

"சரி...நீங்கள் இந்த மருந்தை குடியுங்கள்!"—அவள் தன்னுடைய இதயத்தை இறுக்கிப் பிடித்துக் கொண்டு மருந்தை அவனிடம் கொடுத்தாள்! அவன் அதை வாங்கி, கண்களை இறுக மூடிக்கொண்டு குடித்தான்!

"அப்பா...என்ன கசப்பு...என்ன கசப்பு?"—அவன் முகத் தில் ஒரே சுளிப்பு! காவேரி காலிக் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு நடந்தாள்.

"காவேரி...நீயாவது என்னை நம்புகிறாயா?"—அவன் ஏக்கத்தோடு கேட்டான்! அவள் உதட்டைக் கடித்துக் கொண்டு மௌனமாக நின்றாள்!

"அநுராதா...நல்லவள், காவேரி! அவள் மிகவும் நல்லவள்!"

"ஹும்...ச்..."—அவள் 'குபுக்'கென்று கண்களை மூடிக் கொண்டு கேவினாள். அவன், அவளை வியப்போடு பார்த் தான்.

"நீ என்னை நம்பமாட்டாய்...! நீ என் வார்த்தையை நம்பவே மாட்டாய்!"— அவனுடைய இதயத்தை உடைத்துக் கொண்டு ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது. அவன் மெல்ல கையை ஊன்றிக்கொண்டு எழுந்தான்.

"அத்தான்..."—காவேரி விவிட்டாள்.

விஜயன் காற்றிலே அசையும் செடியென நிலையாக நிற்க செயலின்றி ஆடிக்கொண்டு இருந்தான்.

"அத்தான்...படுத்துக் கொள்ளுங்கள், அத்தான்! உடல் மிகவும் பலஹீனமாக இருக்கிறது!"

"நான் எதற்குப் படுக்கவேண்டும்? என்னுடைய கடைசி ஆசையும் இப்போது கருகி விட்டது. நீயாவது அநுராதா நல்லவள் என்பதை நம்புவாய் என்று நினைத்தேன்...எனக்கு அதிலும் ஏமாற்றம் கிடைத்து விட்டது!"

"நான் நம்புகிறேன் அத்தான்...அநுராதா...நல்லவள்... அநுராதா நல்லவள்!"—அவள் 'கிளிப்பிள்ளை' போல சொன்னாள்!

"நீ நம்புகிறாயா, காவேரி!"—அவன் கண்களிலே ஒரு ஒளி! அவனுடைய மனதிலே ஒரு நிம்மதி!

"உண்மையில் அநுராதா நல்லவள்தான் காவேரி! அவள்...எனக்கு மிக உயர்ந்த ஒரு காணிக்கை தந்தாள்! ஆனால் நாராயணன் அதை புரிந்து கொள்ளவே இல்லை! அவன் அவளுடைய இதயத்தை கிழித்து விட்டான்... பைத்தியக்காரன்...அவனுக்கு அவளிடம் இருந்த அழகிய பகுதி மாத்திரம்தான் தெரியும்...!"—விஜயன் பிதற்ற ஆரம்பித்தான்.

"அத்தான்...படுங்கள் அத்தான்..."—அவள் அவனுடைய கையைப் பற்றி படுக்கையில் படுக்க வைத்தாள். அவளுடைய முகம், அவனுடைய பிதற்றலைக் கண்டு பயந்து வெளுத்தது!

"அநுராதா...அநுராதா..."—அவன் முணு முணுத்தபடி சோர்ந்து கிடந்தான்! காவேரி அவனுடைய காலடியில் அமர்ந்து கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தாள்!

விஜயன் மெல்ல கண்களைத் திறந்து பார்த்தான்! அவனுடைய காலடியில் காவேரி சுருண்டு துவண்டு போய்க் கிடந்தாள்! அவளுடைய கன்னங்களிலோ, கண்ணீர், வரிக் கோலமிட்டு உப்பு பூத்திருந்தது.

அவனது தலையணையருகில் மருந்து புட்டிகளும், காகிதப் பொட்டலங்களும் கிடந்தன! அவைகளை ஒட்டி ஒரு கண்ணாடிக் கோப்பை அனாதையாக உருண்டு கீழே கிடந்தது!

விஜயன் எழுந்து உட்கார்ந்து, காவேரியின் முகத்தைக் கவனித்தான். அவளுடைய முகத்திலே விவரிக்க இயலாத ஏமாற்றம்—சோர்வு! அவன் மெல்ல பெருமூச்செறிந்து கொண்டான்.

"அவள் இரவெல்லாம் கண் விழித்து விட்டு, இப்போது தான் அயர்ந்து தூங்குகிறாள்! தூங்கட்டும்... நன்றாகத் தூங்கட்டும்!"—அவன் மனதுக்குள் முணு முணுத்துக் கொண்டான்

அவன் மெல்ல எழுந்து ஜன்னல் கதவைத் திறந்தான் நிலவு தெளிந்து விட்டது! 'ஜிலு ஜிலு' வென்று மென் காற்று வீசியது!

அந்தக் காற்றின் சுகத்தை விஜயனால் தாங்க முடிய வில்லை. அவனுக்கு ஓரே குளிராக குளிர்ந்தது!

'கல்...கல்' என்று சலங்கைகள் கொஞ்ச ஒற்றை மாட்டு வண்டிகள் வரிசையாகச் சென்று கொண்டிருந்தன! அந்த சலங்கைகளின் ஆட்டம், மனதில் ஒரு இனிமையை—கிளு கிளுப்பை—உண்டாக்கியது! அவனுடைய நினைவில் ஏதோ ஒரு வெறி!

"அநுராதா..."—அவன் மெல்ல முணு முணுத்துக் கொண்டான். அவன் திரும்பி காவேரியைப் பார்த்தான். அவள், இன்னமும் தூங்கிக் கொண்டுதான் இருந்தாள்!

அவன் மெல்ல பெருச்செறிந்து கொண்டான்.

"அநுராதா..."—அவனது தளர்ந்த உடலில் ஒரு புது சக்தி புகுந்தது! அவன் கதவைத் திறந்துகொண்டு வெளியே நடந்தான்.

வெளி வீதிகளில் நீர் தெளிக்கப்படும் சலசலப்போ—காற்று வீசுவதனால் ஏற்படும் ஜிலுஜிலுப்போ—வானத்தின் ஓரத்தில் செம்மை தெளித்து நிலவும் பளபளப்போ அவனுக் குத் தென்படவில்லை!

அவன் மனதிலே தென்பட்டதெல்லாம் அநுராதா—அநுராதாவேதான்!

அந்த நினைவு மயக்கிலே அவன் நடந்தான்—நடந்தான்—நடந்துகொண்டே இருந்தான்! அந்தச் சந்து—அநுராதாவின் வீடு இருக்கும் சந்து—வந்து விட்டது! அவன் கால்களிலே ஒரு பரபரப்பு...

அநுராதவின் வீட்டு வாசலில் ஒரே வெளிச்சம்! வாசல் கதவுகூட திறந்திருந்தது! விஜயன் படிகட்டுகளில் காலடி யெடுத்து வைத்தான்!

'பட்...'—விளக்கு அணைந்தது! அவன் திடுக்கிட்டான். அடுத்தகணம்...

ஒரு மெல்லிய இனிய சுகந்தம் பரவியது! புறப்பாட்டுக்கு கிளம்பும் 'அம்மன் விக்கிரகம்' போல அநுராதா தோன்றினள்.

"அநுராதா..."—விஜயனின் கண்கள் கூசின!

"சார்...நீங்கள் எங்கே இப்படி வந்தீர்கள்?"—அவள் அதிர்ச்சியடைந்தவளாகக் கேட்டாள்.

"உன்னைப் பார்க்கத்தான் வந்தேன் அநுராதா..."—அவனால் நிற்க முடியவில்லை! சோர்ந்து போய் படிக்கட்டிலேயே உட்கார்ந்து விட்டான்.

அவள் அவனுடைய முகத்தைப் பார்த்தாள். வாடி வதங்கிய தளிர்போல 'சாம்பி'க் கிடந்தது! தலையில் செம்பட்டை படிந்து 'திரிதிரி'யாக தொங்கிக் கொண்டிருந்தது கேசம்! கண்கள் இடுங்கி ஒளியிழந்து கிடந்தன! கோடைக் காலத்து வயல்வெளிபோல அவனுடைய உதடுகள் வெடித்துக் கிடந்தன! அவளுடைய கண்களில் நீர்முட்டிக் கொண்டு வந்தது.

வீட்டினுள்ளிருந்து அப்பாச்சாமி ஒரு கையில் பெரிய பெட்டி ஒன்றையும், இன்னொரு கையில் ஒரு கூஜாவையும் பையையும் தூக்கிக்கொண்டு வெளியே வந்தான்! விஜயன் அவனை ஆச்சரியத்தோடு பார்த்தான்.

"அநுராதா...நீ ஊருக்குப் போகிறாயா?"—அவன் குரலில் தென்பில்லை!

"ஆமாம் சார்! சென்னையிலே ஒரு பெரிய 'சான்ஸ்' கிடைத்து இருக்கிறது! அடுத்த தடவை பார்க்கிறபோது அநு இப்படி இருக்க மாட்டாள் சார்! பெரிய 'ஸ்டாராக' இருப்பாள்!"—அப்பாச்சாமி பெட்டியையும் பையையும் சுமந்தபடி பெருமை பேசினன்.

விஜயன் பெருமூச்செறிந்து கொண்டான். அவன் முகத்திலே ஒரு விவரிக்க இயலாத ஏமாற்றம்!

அநுராதா அப்பாச்சாமியைப் பார்த்து பல்லைக் கடித்தாள். அவன் வழக்கம்போல அசட்டுச் சிரிப்பு சிரித்தான்.

"சார்..."—அவள் மெல்ல அருகில் வந்தாள்.

"அநுராதா..."—அவன் கண்களிலே நீர் முத்திட்டன.

"என்னை மன்னித்து விடுங்கள் சார்! இப்போதைக்கு நாம் கொஞ்சம் பிரிந்து இருப்பதுதான் நல்லது!"

"அதற்காகத்தான் நீ சென்னைக்குப் போகிறாயா?"—அவன் திடுக்கிட்டபடிக் கேட்டான். ஆனால் அவள் பதில் சொல்லவில்லை!

"அநுராதா...நீ அளித்த காணிக்கையைக்கூட நான் இழந்து விட்டேன், அநுராதா..."—அவன் தேம்பும் குரலில் சொன்னான்.

அவள் மெல்லச் சிரித்தாள்.

"அதைக் காட்டிலும் உயர்ந்த காணிக்கையை உங்களுக்கு நான் தருகிறேன்...சார்!"—அவள் அமைதியாகச் சொன்னாள்.

"அநுராதா..."—அவனுடைய கண்கள் மலர்ந்தன!

"என் நெஞ்சு இப்போதுதான் அநுராதா நிறைந்தது. இன்னொரு முறை நான் உன்னை அநுராதையாக—ஊஞ்சலில் ஆடும் பேசும் பொற்சித்திரமாக வரைந்து பார்க்க வேண்டும் ...அதுதான் என் ஆசை—அதுதான் என் லட்சியம்!"—அவன் மெல்ல எழுந்தான்.

"எழுதுங்கள்...தாராளமாக எழுதுங்கள்! ஆனால் என்னுடைய சிறிய வேண்டுகோளை மாத்திரம் நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும்!"

"என்ன...? சொல்லு அநுராதா...சொல்லு!"

"கொஞ்ச நாள்—கொஞ்ச நாட்கள் பொறுத்திருங்கள்!"—அவளுடைய கண்களிலே நீர்த்துளிகள் அரும்பின!

"பொறுத்திருக்கிறேன் அநுராதா...உனக்காக நான் எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் காத்திருக்கிறேன்!"—அவனுடைய முகத்திலே ஒரு மலர்ச்சி!

"வண்டிக்கு நேரமாகி விட்டது, அநு..." அப்பாச்சாமி பிரயாணத்தை நினைவூட்டினான்.

"நான் போய் வரட்டுமா, சார்!"—அவள் கலங்கிய கண்களோடு பார்த்தாள்.

"ஹூம்ம்...!"—விஜயன் தலைகுனிந்து கொண்டான். அநுராதாவும், அப்பாச்சாமியும் கிளம்பி விட்டனர்.

அநுராதா விஜயனைத் தாண்டிச் செல்லும்போது அவளுடைய கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீரைச் சிந்தினுள்!

அவளுக்கு, விஜயனைப் பார்க்கப் பார்க்க வேதனையாக இருந்தது! ஆனாலும் அவள் மனதை திடப்படுத்திக்கொண்டு இருந்தாள்!

விஜயன் மெல்ல தலையை உயர்த்திப் பார்த்தான். அநுராதாவின் வீடு பூட்டப்பட்டு இருந்தது. அந்தச் சந்திலே கூட ஒரு ஆளையும் காணேம். ஒரே சூன்யம்!

அநுராதா போய்விட்டாள்—

அவன், வெறிக்க அந்த சந்தையே பார்த்துக் கொண்டிருந்தான்!

அவனுடைய கால் மூட்டுகள் 'விண்...விண்' ணென்று தெறித்தன! உடம்பெல்லாம் ஒரு குடைச்சல்! அவனுல் நிற்க முடியவில்லை!

'குப்'பென்று ஒரு ஜ்வாலை நெஞ்சிலிருந்து கிளம்பி, தொண்டை வழியாக மூக்கு, கண்கள் முதலியவைகளில் பரவி விரிந்தன. அவனுடைய தலை கிறு கிறுத்தது. நெற்றிப் பொட்டுகள் இற்றுப் போய் வெடித்து விட்டது போல இருந்தது!

அவன் பார்க்குமிடங்கள் எல்லாம் தீப்பிடித்துக் கொண்டு எரிவதுபோன்று தோன்றியது. அடுத்த கணம்...

விஜயன் கீழே சாய்ந்து விட்டான்! அவனுடைய உடல் நெருப்பிலே வெந்து கொண்டிருப்பதுபோல தோன்றியது!

முக்கல்—முனகல் ஒலிகள் அவனுடைய உதடுகளிலிருந்து கிளம்பியது!

'ஹாம்...ஹாம்...ஹாம்...'— அவனுக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கியது.

"அத்தான்..."

விஜயன் மெல்ல கண்களைத் திறக்க முயன்றான். இமை ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு 'சண்டித்தனம்' செய்தன! ஆனல் அவனுக்கு குரல் மட்டும் தெளிவாகக் கேட்டது!

"காவேரி..."—அவன் குரல் கிணற்றுக்குள்ளிருந்து கிளம்புவதுபோல இருந்தது!

"உங்கள் உடம்பு இருக்கும் நிலையில் சொல்லாமல் இப்படிக் கிளம்பி வரலாமா அத்தான்?"—காவேரி மெல்லத் தேம்பினாள்.

"அழாதே, காவேரி! எனக்கு இப்போது ஒன்றுமில்லை! நான் அநுராதாவைப் பார்த்து விட்டேன்! அவளிடம் கேட்க வேண்டியதையும் கேட்டு விட்டேன்..."—அவனால் பேசுவதற்கு முடியவில்லை—மெல்ல இருமிக் கொண்டான். அந்த இருமலின் அதிர்ச்சியில் கண்ணிமைகள் விலகிக் கொண்டன.

அவன் எதிரில் காவேரி முகத்தை மூடியபடி அழுது கொண்டு இருந்தாள்.

"ஏன் காவேரி இப்படி அழுகிறாய்?"—அவன் மெல்ல அவளுடைய தலையை கோதிவிட்டான்.

"அத்தான்...நான் உங்கள் காலில் விழுந்து கேட்டுக் கொள்ளுகிறேன். இனிமேல் நீங்கள் எனக்குத் தெரியாமல் எங்கும் போகக்கூடாது! நீங்கள், யாரைப் பார்க்க விரும்பினாலும் என்னிடம் சொல்லுங்கள்...நானே உங்களை அவர்களிடம் அழைத்துக் கொண்டு செல்கிறேன்!"—அவள் தேம்பித் தேம்பி அழுதாள்!

"காவேரி...நீ என்ன சொல்லுகிறாய், காவேரி?"

"அத்தான், நான் கொஞ்ச நேரத்துக்குள்ளே, உங்களைக் காணாமல் பட்ட வேதனை போதும்...எனக்கு மீண்டும் இதே வேதனையைக் கொடுத்து விடாதீர்கள், அத்தான்..."

"பைத்தியம், இதற்குப் போயா இவ்வளவு கவலைப்பட்டு விட்டாய்!"—அவன் மெல்லச் சிரித்தான். அந்த சிரிப்பின் கடைசியிலும் ஒரு இருமல் முத்தாய்ப்பு இட்டது!

"சரி...நாம் போகலாமா, காவேரி!"—விஜயன் தடுமாறிக் கொண்டு எழுந்தான்.

'கொஞ்சம் பொறுங்கள் அத்தான். உங்கள் உடம்பு மிகவும் பலஹீனமாக இருக்கிறது. வண்டி பிடித்துக் கொண்டு போய் விடலாம்!"

"வேண்டாம் காவேரி! மெல்ல நடந்து போவதற்குத் தான் ஆசையாக இருக்கிறது! கால்களில் வலுக்குறைந்து விட்டால் என்ன? உன்னுடைய தோள்களை பிடித்துக் கொண்டு நடந்து வர முடியாதா?"—விஜயன் காவேரியின் தோள்களைப் பிடித்துக்கொண்டு மெல்ல உலுக்கினான்.

"அத்தான்..."—காவேரியின் கண்களிலிருந்து கண்ணீர் ஆறுகப் பெருகியது!

"ஏன் காவேரி உனக்கு வெட்கமாக இருக்கிறதா?"

"இல்லை அத்தான்...இல்லை!...என்னுடைய தோள்கள் உங்களுடைய சக்தியில்லா நிலைமைக்கு துணை செய்வதற்குத் தானு உதவ வேண்டும்!"—அவள் கேவினாள்!

"பைத்தியம்...இதற்காகவா அழுகிறாய்! என்னுடைய, உடலில் விரைவில் தென்பு உண்டாகிவிடும்...கவலைப் படாதே! இப்போது நான் உள்ளத்திலே இரண்டு ஆள் வலிமை கொண்டவனாக இருக்கிறேன்..."—அவன் மெல்ல அடியெடுத்து வைத்து நடந்தான். காவேரி தன் கரத்தால் அவனுடைய இடுப்பை சுற்றி வளைத்து அணைத்துக்கொண்டு அவனுடன்கூட இணைந்து வந்தாள்.

சமையல் முடிந்ததும் உள்ள அடுப்புப் புகையைப் போல அவனுடைய உடல் காய்ந்து கொண்டிருந்தது! புது ஆடை அணிந்தவன் சகதியிலே நடக்கும்போது தடுமாறித் தத்த ளிப்பது போன்று அவன் நடந்தான்! ஒவ்வொரு அடியெடுத்து வைக்கும் போதும் அவனுடைய கரங்கள் காவேரியின் தோள் களை அழுத்தி, அழுத்திப் பிடித்துக் கொண்டன!

காவேரி, விஜயனை கவனத்தோடு ஏந்திப் பிடித்துக் கொண்டு வந்தாள். தூரம், கொஞ்சம் கொஞ்சமாக கரைந்து கொண்டு வந்தது!

"காவேரி..."—விஜயன் மெல்ல அவள் மேல் சாய்ந்தான்.

"என்ன அத்தான் நடக்க முடியவில்லையா?"—அவள் அவனை இறுக அணைத்தபடி கேட்டாள்!

"இல்லை காவேரி...அதோ பார்!"—அவனுடைய விரல் பக்கத்தில் சுட்டிக் காட்டியது! காவேரி அதைப் பார்த்தாள்!

ஒரு சிறிய குட்டை! பாசிக் கொடிகள் படர்ந்து பச்சை பசேல் என்று இருந்தது. அந்தப் பாசிக்கு மத்தியில்—

கூம்பலுக்கும், மலர்ச்சிக்கும் இடையில் தாமரைகள் செவ்வண்ணச் சொக்கழகோடு இருந்தன! அந்த மலர்களை ஒட்டி...இலைகள் சாம்பல் நிறம் படர்ந்து 'பசேல்' என்று காட்சியளித்தன! அந்த இலைகளின் இதயத்திலே நீர் முத்துக் கள் உருண்டு புரண்டு கொண்டிருந்தன! அவைகள் எதற்காக கண்ணீர் வடிக்க வேண்டும்?

காவேரி விஜயனைத் திரும்பிப் பார்த்தாள்! அவன் முகத் திலே மகிழ்ச்சி ஒளி வீசிக் கொண்டிருந்தது. ஆனால் அந்த ஒளியின் மத்தியிலும்—அவன் முகத்திலே ஒரு சோர்வு?

''காவேரி...அந்த தாமரை எவ்வளவு அழகாக இருக் கிறது பார்த்தாயா?''—அவன் குரலில் ஒரு தனி மகிழ்ச்சி!

''ஊம்ம்...''—அவள் தலையை ஆட்டினாள். அவனுடைய மனதிலே ஒரு விவரிக்க இயலாத வேதனை! அவள் அழுத்த மாக சுவாசத்தை உள்ளுக்கு இழுத்துக் கொண்டாள்!

'கம்...'—மென்று ஒரு மணம்! காவேரி திடுக்கிட்டுப் பார்த்தாள்.

எங்காவது தாமரை மணம் வீசுவது உண்டா? அது தாமரையின் மணம் அல்ல—மல்லிகையின் சுகந்த மணம்!

அந்தக் குட்டையின் கரையோரத்திலே மல்லிகைச் செடி ஒன்று அசைந்தாடிக் கொண்டிருந்தது! அந்த செடி தன் உயிர்ச் சக்தியையெல்லாம் ஒன்று திரட்டி குண்டு குண்டாக— வெள்ளை வெளேரென்று தன் தலையிலே மொக்குகளாக ஏந்திக்கொண்டு உலகத்தைப் பார்த்து பெருமிதத்தோடு சிரித்தது!

''காவேரி...''—தாமரையின் அழகை ரசித்த கண்களைத் திருப்பிய விஜயன், மல்லிகை மொக்குகளைப் பார்த்தபடி நிற்பதைக் கண்டு விட்டான்! அவன் அதைக் கூர்ந்து கவனித் தான்.

அந்தச் செடி, மல்லிகை மொக்குகளை ஏந்தியபடி, குட்டையை ஒட்டி வளைந்து சாய்ந்து இருந்தது! அதன் நிழலை யொட்டி—ஒரு தாமரை...

விஜயனின் கண்கள் வியப்பால் உயர்ந்தன!

''நாராயண...''—அவன் ஏதோ யோசனையில் ஆழ்ந்தான்.

'நாராயணன்...'—என்று அவன் சொன்ன வார்த்தை காவேரியின் நெஞ்சை துளைத்தது! அவள் கண்களிலிருந்து 'கல கல'வென்று நீர் கசிந்தது!

அவன் எங்கே போனான் என்றே தெரியாது! ஆனாலும் அவனுடைய அன்பு, பாசம் மல்லிகையின் இனிய மணம் போல அவளுடைய இதயத்திலே வீசியது! ஆனால் அந்த மணத்தைத் துணைகொண்டு அவனை கண்டுபிடித்துவிட முடியுமா?

அவளுடைய இதயத்தில் ஒரே ஏக்கம்! அவள் அந்த மல்லிகை மலரை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"காவேரி...நாம் இப்போதே வீட்டுக்குப் போக வேண்டும்! சித்திரப் போட்டியின் முடிவு நாள்...நெருங்கிக் கொண்டே இருக்கிறது!"—விஜயன், அவளை, தோள்களைப் பற்றி உலுக்கினான்.

"போவோம் அத்தான்..." அவள் தாழ்ந்த குரலில் சொன்னாள்.

"நாராயணன், நான் இந்தச் சித்திரப் போட்டியில் கலந்துகொள்ள வேண்டும் என்று ரொம்பவும் ஆசைப்பட்டான். அவனுக்காகவாவது நான் அதில் கலந்து கொள்ள வேண்டும்.. வா, காவேரி!"—அவனுடைய உடலில் திடீர் என்று ஒரு சக்தி புகுந்து அவனை வேகமாக நடக்கவைத்தது!

காவேரி அந்த இருமலர்களை வேதனையோடு பார்த்தபடியே நடந்தாள்! அவளின் கண் மலர்களில் நீர்த்திவலைகள் குதியாட்டம் போட்டன!

## 9. காவேரியின் அழைப்பு!

காவேரிக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை...வெறும் கோடுகளாக—கோணல் மாணலாக காட்சியளித்துக்கொண்டிருந்த திரைச்சீலை இப்போது எப்படி மாறிவிட்டது!

வானத்தில் பொன்முலாம் பூசப்பட்டு இருக்கிறது. சூரியன் தலையை நீட்டிக்கொண்டு வெளிவருகிறான்! பாசி படர்ந்த குளத்தின் ஒரப்பகுதி...தாமரை மலர்கள் மலர்ந்து

கொண்டிருக்கின்றன. அதன் அருகே...ஒரு மல்லிகைச் செடி... அச்செடியில் கிளையிட்டு நீட்டிக் கொண்டிருக்கும் காம்பின் உச்சியிலே ஒரு குண்டு மல்லிகை—அந்த மல்லிகை இன்னும் மலரவில்லை—மலர்ச்சிக்கும், மொக்கின் பூரண வளர்ச்சிக்கும் கவர்ச்சிக்கும் இடைப்பட்ட ஒரு அபூர்வமான அழகோடு விளங்கியது !

'ஒளியில் குளிக்கும் மலர் அழகிகள்'—அந்தப் படத்தின் தலைப்பில் சிறு எழுத்துக்கள் மின்னின.

அந்த இரு மலர்களும் சூரிய ஒளியில் குளித்துக்கொண்டு தான் இருந்தன !

காவேரி விழிகள் அந்த அழகில் லயித்து நோக்கிச் சுழன்றன ! அவள் முகத்திலே ஒரு பெருமிதம் கூத்தாடியது.

எத்தனை பகல்கள்—எத்தனை இரவுகள், கையிலே தூரிகையை ஏந்தியபடி விஜயன் திரைச்சீலைக்கு எதிரில் தவமாய் தவம் கிடந்தான்! அவனுடைய கற்பனை—அவனுடைய கைத்திறன் எல்லாம் ஒப்பற்ற முறையில் வெளியாகி விட்டது! ஆனால்—

நேற்று மாலை வரையில் கூட, இது போன்ற ஒரு சித்திரம் வரையப் போகிறான், தன் கணவன் என்று காவேரி நினைக்க வில்லை!

ஒரே இரவு—ஒரே இரவுக்குள்தான் எவ்வளவு பெரிய அதிசயம் நிகழ்ந்துவிட்டது!

காவேரியின் பார்வை கீழே படிந்தது!

ஒரு 'ஹரிக்கேன்' விளக்கு இருண்டு கருத்து ஒளியடங்கி இருந்தது. அதற்கு அருகில் தூரிகைகள் 'அனாதைகளாக' கிடந்தன! வர்ணக் குழம்புகள் தரையெல்லாம் சிதறி முத்து முத்துக்களாகத் தெரிந்தன !

அவள் விஜயன் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அவன் அயர்ந்து போய் தூங்கிக் கொண்டிருந்தான்.

'ஹிம்...ஹிம்...'—மெல்லிய முனகல் ஒலிகள் [illegible] வெளிக்கிளம்பிக் கொண்டிருந்தன!

'அவர் இரவெல்லாம் கண் விழித்து இதை வரைந்திருக்கிறார்...'—காவேரிக்கு விஜயனைப் பார்க்கும்போது உடலில்

ஒரு நடுக்கம் உண்டாகியது. அவள், அவனருகில் சென்று அமர்ந்து நெற்றியைத் தடவிக் கொடுத்தாள். அவளுக்கு ஒரு அதிர்ச்சி!

அவனுடைய நெற்றி கொதித்துக் கொண்டிருந்தது.

அவள் அவன் நெஞ்சைத் தொட்டுப் பார்த்தாள். அங்கும் கொதிப்பு. அந்தக் கொதிப்போடு 'படபட'வென்ற ஒரு துடிப்பும் இருந்தது!

அவளுக்குத் தன் உடம்பை யாரோ முறித்துப்போடுவது போல தோன்றியது!

"அத்தான்..."—அவள் பயத்தோடு மெல்ல அழைத்தாள். ஒரு முனகல்தான் அவளுக்குப் பதிலாகக் கிடைத்தது. மின்னல் கீற்று போல அவளுடைய இதயத்தை அதிர்ச்சிக் கிழித்துக்கொண்டு போனது!

"அத்தான்..."—அவள் மெல்ல அவன் உடலில் தட்டினாள்.

"ஹூம்ம்..."— விஜயன் புரண்டு படுத்தான்.

இரவு கண் விழித்து வேலை செய்ததினால் ஏற்பட்ட களைப்பு—சோர்வு—அவனுடம்பில் இருந்த ஜுரத்தை அதிகப்படுத்தி அவனை அயர்ந்து தூங்கும்படி செய்துவிட்டது என்பதை அவள் புரிந்துகொண்டாள்.

ஜுரம் அடிக்கும்போது தூங்கினால் நல்லதுதான்! தூங்கும் நேரத்திலாவது ஜுர வேதனையை மறந்து இருக்கலாம்! ஆனால்—

என்னதான் மனதை சமாதானப்படுத்திக் கொண்டாலும், காவேரியால் தைரியமாக இருக்க முடியவில்லை!

அவள் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந்தது! அவள் மெல்ல அவனுடைய உடலைத் தடவிக் கொடுத்தபடியே அமர்ந்து இருந்தாள்!

காலம், ஓடுவதுபோல 'கண்ணாம்பூச்சி' காண்பித்துக் கொண்டிருந்தது! விஜயன் மெய்ம்மறந்து தூங்கிக் கொண்டிருந்தான்!

"தபால்" வெளியிலிருந்து கேட்டது குரல். அவன் கண்களை கசக்கிக் கொண்டான்! காவேரி ஒரு நீண்ட காகித உறையோடு அவனருகில் வந்து அமர்ந்தாள்.

"யாரிடமிருந்து காவேரி கடிதம் வந்திருக்கிறது?"

காவேரி பதில் ஒன்றும் சொல்லாமல் கடிதத்தை அவனிடம் நீட்டினாள்!

"எனக்கு கண்கள் எரிகின்றன. நீயே அதை பிரித்துப் படி!"—விஜயன் மெல்ல இருமிக்கொண்டான்!

காவேரி, தன் கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். அந்தக் காகித உறையைப் பிரித்து கடிதத்தை எடுத்துப் படிக்க ஆரம்பித்தாள்!

'உங்களை நான் எப்படி அழைப்பது என்றே தெரியவில்லை! தெய்வம் என்று அழைத்து விடுவேன். ஆனால், எந்தத் தெய்வமும் பேசுவதில்லை — நீங்கள் பேசுகிறீர்களே!

எப்போதும் போல 'சார்' என்று அழைப்பதைத் தவிர வேறுவழி எனக்குத் தோன்றவில்லை. அதற்காக என்னை மன்னித்து விடுங்கள்.

"காவேரி...! அநுராதாவின் கடிதமா இது?" — விஜயன் படபடப்போடு கேட்டான்.

"ஆமாம்..." — காவேரிக்குத் தொண்டையை அடைத்தது!

"படி காவேரி...படி!"—விஜயன் உற்சாகமாகச் சொன்னான். காவேரிக்குத் தூக்கிவாரிப் போட்டது. அந்தக் கடிதத்தை தன்னை விட்டு படிக்கச் சொல்லுவார் என்று அவள் எதிர்பார்க்கவே இல்லை!

அவள் தன்னைச் சமாளித்துக்கொண்டு மேலே படித்தாள் :

'நான் உங்களை விட்டுப் பிரிந்துவந்து வெகுநாட்கள் ஆகிவிட்டன. இவ்வளவு நாட்களுக்குப் பிறகு உங்களுக்கு முதல் தடவையாக கடிதம் எழுதுகிறேன்! எனக்கே இது ஆச்சரியமாக இருக்கிறது! நான் உண்மையில் உங்களுக்கு கடிதம் எழுதக்கூடாது என்று தான் இருந்தேன். ஆனால் நாராயணன்தான் என்னை இதுபோல ஒரு கடிதம் எழுத வேண்டிய நெருக்கடிக்குக் கொண்டு வந்து வைத்துவிட்டார்!

நேற்று முன்தினம் நான் அவரைச் சந்தித்தேன். அவர் தானாகவே என்னிடம் பேச வந்தார்! பேசினார், அன்று நான் உங்கள் வீட்டுக்கு வந்துவிட்டுத் திரும்பிய பின்னர் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் சொன்னார். சொன்னாரா—இல்லை அழுதார்!

அதைக் கேட்க எனக்கும் மிகவும் வேதனையாக இருந்தது. என்னால் உங்களுக்கு எத்தனை எத்தனை துன்பங்கள்...?

ஆனால் இவ்வளவு பெரிய குழப்பம் உங்கள் குடும்பத்தில் ஏற்படும் என்று நான் நினைக்கவே யில்லை! ஏதோ சிறிய அளவில் ஏற்படும். அதற்குக் கழுவாய் தேடுவதற்கு உங்களை விட்டே பிரிந்துபோய், உங்கள் குடும்பக் குழப்பம் தீர்வதற்கு வழி செய்வோம் என்றுதான் எண்ணியிருந்தேன்! இப்போதைய நிலைமையில் எதுவுமே செய்ய முடியாது என்றுதான் தோன்றுகிறது!—

நாராயணன் பேச்சிலிருந்தே அதை நான் நன்றாகப் புரிந்துகொண்டேன், அவர், நான் என்ன சொன்னாலும் என்னை நம்புவதற்குத் தயாராக இல்லை என்று. பிறகு அன்று நான் உங்கள் வீட்டிற்கு வந்ததின் உண்மைக் காரணம், அந்தச் சித்திரத்தை உங்களிடம் ஒப்படைக்கத்தான் என்று சொன்னால் அவர் ஒத்துக்கொள்வாரா? அவர் மாத்திரம் என்ன, இந்த உலகமே நான் அந்த உண்மையைச் சொன்னால் நம்புமா?

ஆனால் அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை! உங்கள் உள்ளம் ஒன்று மாத்திரமாவது என் உள்ளத்தை புரிந்ததாக இருந்தால் போதுமானது.

நான், உங்களை உயர்ந்த மலர்களால் வழிபட விரும்புகிறேன். காய்ந்து உலர்ந்த தழைகளை வீசி, உங்களைக் களங்கப்படுத்த விரும்பவில்லை! காரணம்—நான் ஒரு பெண்!

பெண்ணால் ஏதாவது ஒன்றினிடம் தன்னிடமுள்ள எல்லா உயர்ந்த தன்மைகளையும் அர்ப்பணிக்காமல் இருக்க முடியாது! என்னிடம் இன்னமும் கெட்டுவிடாமல் இருப்பது என்னுடைய இதயம் ஒன்றே ஒன்றுதான்!

அதைத்தான் உங்களுக்குத் தர முயற்சித்தேன். ஆனால், என் உடலை—இந்த நாராயணனே உங்களிடம் கொடுக்கச் சொன்னால்கூட நான் கொடுக்க மாட்டேன்!

ஏதோ நாராயணன் கோபத்தில் பேசிவிட்டார்!

ஆனால் அவர் கடைசியாகச் சொன்ன வார்த்தை மட்டும் இன்னும் என்னுடைய செவிகளில் ரீங்காரித்துக் கொண்டே இருக்கின்றன!

அவர் சொன்னார்: 'உன்னுடைய அழகு வலை விரித்து சிறை பிடித்த விஜயனை விட்டுவிடு! அவன் ஒரு கலைஞன்—ஒரு உயர்ந்த பெண்ணின் கணவன்' அதற்காக நீ என்ன விலை கேட்டாலும் தருகிறேன். அவனை கணவனுக்கிக்கொண்டு நீ உயர்வு பெற விரும்புவதாக இருந்தால்கூட அவனுக்குப் பதிலாக நான் உனக்குக் கணவனாக இருக்கிறேன். நீ விரும்பும் உயர்வுகளுக்கெல்லாம் உனக்குத் துணையாக நிற்கிறேன்! என்னால் அதைச் செய்ய முடியும்! செய்கிறேன்...'— என்றார்.

அவர், உங்களுக்காகவும், உங்கள் மனைவிக்காகவும் தன்னால் கொடுக்கக்கூடிய உயர்ந்த விலையைக் கொடுக்க முன்வந்தார். ஆனால் அதை ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை! அதற்குக் காரணம் நீங்கள்தான்!

இதைச் சொல்லும்போது உங்களுக்கேகூட வேடிக்கையாக இருக்கும்!

பக்தி கொண்டவர்கள் வணங்கும் தெய்வத்துக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுப்பதோடு நிற்பதில்லை! அந்த தெய்வத்தின் வாகனங்களிலிருந்து, அலங்காரப் பொருள்கள் வரையில் எல்லாவற்றையுமே புனிதமாக கருதுவார்கள்! அவைகளைக்கூட களங்கம் தீண்டுவதற்கு அநுமதிக்க மாட்டார்கள்!

நான் உங்களை வணங்கினேன்—வணங்குகிறேன்—என் மன நிறைவுக்காக—மன சாந்திக்காக! நீங்கள் என் கடவுளாக ஆகிவிட்டீர்கள்! இந்த நாராயணன் ஆயிரம் தான் என் மனதை புண்படுத்தி இருந்தால் என்ன? அவர் உங்கள் நண்பர்! அவர் களங்கமடைவதை நான் அனுமதிக்கலாமா? ஆனாலும்—

நாராயணன் என்னோடும் சிறு வயதில் நண்பராக இருந்தவர்தான். அந்த நட்பு ஆழமில்லாதது! அவர் இப்போது உங்கள்மீதும், உங்கள் மனைவி மீதும் வைத்திருக்கும் பற்றையும் பாசத்தையும் கவனிக்கும்போது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது! நீங்கள் கொடுத்து வைத்தவர்கள்தான். அதில் சந்தேகமே இல்லை!

எதையோ எழுத நினைத்தேன்; என்னென்னமோ எழுதிவிட்டேன்!

இன்றில்லாவிட்டாலும் என்றாவது ஒருநாள் நான் கண்டிப்பாக பார்க்க வருகிறேன். அப்போது நான் தங்களுக்கு நீங்கள் கேட்ட அந்த காணிக்கையை மட்டும் தந்துவிட்டு திரும்பிவிடமாட்டேன்! உங்கள் மனைவியையும் சந்திப்பேன்! அவர்களும் என்னைப்போன்ற ஒரு பெண்தானே! நான் மனம் திறந்து பேசுவது அவர்களுக்குப் புரியாமலா இருந்துவிடப் போகிறது!

எதற்கும் கொஞ்ச காலம் ஆகட்டும்! நம்மைச் சுற்றிலும் உள்ள பனிமூட்டம் விலட்டும்!

இந்த அபலையின் வணக்கத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்!

இப்படிக்கு,
அநுராதா.

காவேரியின் கண்கள் படபடத்துக்கொண்டன! அவள் நெஞ்சிலே திகைப்பும், வியப்பும் அலையலையாகப் புரண்டன! அவளுடைய நெஞ்சை உடைத்துக்கொண்டு ஒரு பெருமூச்சு வெளிக் கிளம்பியது!

கூரை முகட்டை உறுத்துப் பார்த்தபடி விஜயன் யோசனையில் ஆழ்ந்து இருந்தான்!

"காவேரி! அந்தக் கடிதத்தில் அநுராதாவின் சென்னை விலாசம் இருக்கிறதா?"—ஏதோ முடிவுக்கு வந்தவன்போல கேட்டான்!

"இருக்கிறது..."—ஒன்றும் புரியாமல் அவள் விஜயனைப் பார்த்தாள்.

அவன் உதட்டைக் கடித்துக்கொண்டு சற்று நேரம் மௌனமாக இருந்தான்!

"ஏன் அத்தான், நீங்கள் அநுராதாவுக்கு கடிதம் எழுத வேண்டாமா?"

"ஆமாம்..."—அவன் குரலில் ஒரு சோர்வு!

"அதற்கென்ன, எழுதுங்களேன்!"—அவள் மெல்ல சிரித்தாள்.

"காவேரி..."—விஜயனின் முகத்தில் ஒரு ஒளி வீசியது!

"நீ என்னை நம்புகிறயா காவேரி! நீ என்னை நம்புகிறயா காவேரி! அப்பா...இப்போதுதான் என் மனம் நிம்மதி யடைந்தது! காவேரி நான் உண்மையாகச் சொல்லுகிறேன்... அநுராதா நல்லவள், காவேரி! நான்கூட ஒரு சமயத்தில் தவற இருந்தேன்! ஆனல்...? அவள் நல்லவள் காவேரி! என்னை தவறு செய்யாமல் தடுத்து நிறுத்தி அவள் காப்பாற் றியே விட்டாள்!"—அவன் கண்களிலிருந்து நீர்த் திவலைகள் உருண்டன! அதிகம் பேசிய களைப்பால் அவனுக்கு மேல் மூச்சு வாங்க ஆரம்பித்துவிட்டது!

காவேரி அவனுடைய நெஞ்சைத் தடவிக்கொடுத்தாள்.

"உடம்பு சரியில்லாத போது ஏன் அத்தான், அதிகம் பேசுகிறீர்கள்?"—அவள் கவலையோடு கடிந்துகொண்டாள்! விஜயன் மெல்ல சிரித்தான்.

காவேரி மீண்டும் அநுராதாவின் கடிதத்தை நோட்ட மிட்டாள்!

"என்ன காவேரி, மீண்டும் அந்தக் கடிதத்தையே ஏன் பார்க்கிறாய்?"

"நாராயண அண்ணனைப்பற்றி எண்ணும்போது எனக்கு நெஞ்சே வெடித்துவிடும்போல இருக்கிறது! நான் அவரை எவ்வளவு கொடுமைப்படுத்திவிட்டேன்!"—அவளுடைய கண் களில் நீர் முத்திட்டது! அதைக் கேட்டதும் விஜயனின் முகத் திலும் ஒரு சோர்வு படர்ந்தது!

"இதில் யாரையும் குறை சொல்லி பயன் இல்லை!...அப் போதிருந்த சூழ்நிலை உன்னையும், நாராயணனையும்—உங்களை மட்டுமல்ல என்னைக்கூட ஒரு ஆட்டு ஆட்டிவிட்டது!"—அவன் பெருமூச்செறிந்தான்!

"சூழ்நிலை—நாசமாய்ப் போன சூழ்நிலை!"—அவள் ஆத்திரத்தோடு சபித்தாள்!

"இப்போது கவலைப்பட்டுக் கொண்டு சும்மா இருப்பதில் பயனில்லை!...மீண்டும் எல்லோரும் ஒன்று கூடுவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்வதுதான் புத்திசாலித்தனம்."

விஜயன் மெல்ல தன் விரலைக் கடித்துக் கொண்டான்.

"காவேரி! நான் சொல்லுவது போல அநுராதாவுக்கு ஒரு கடிதம் எழுது...ஊம்ம்..."

காவேரி காகிதத்தையும் பேனாவையும் எடுத்துக் கொண்டு எழுதுவதற்கு தயார் ஆனாள்! விஜயன் மெல்ல கடிதவாசகங்களை சொல்ல ஆரம்பித்தான்.

'அநுராதா,

உன் கடிதம் கிடைத்தது. மிகவும் மகிழ்ச்சி! உன் கடிதத்தைப் படித்ததும் எனக்கு இரண்டு விஷயங்கள் புலனாகிவிட்டன!

ஒன்று, நீ எனக்கு நன்மை செய்வதாக எண்ணிக் கொண்டு, என்னை விட்டுப் பிரிந்து சென்னைக்குச் சென்றது. இரண்டாவது, நாராயணன் எனக்கும் காவேரிக்கும் நன்மை செய்வதாக எண்ணிக் கொண்டு உன்னிடம் தத்துபித்தென்று உளறியது! உங்கள் இருவரையும் பற்றி எண்ணும்போது எனக்கு அழுகைதான் வருகிறது!

நீங்கள் இருவருமே எனக்கு நன்மை செய்ய வேண்டும் என்றுதான் விரும்புகிறீர்கள். ஆனால் நீங்கள் இருவரும் எனக்குக் கெடுதலைத்தான் செய்து விட்டீர்கள்!

நீங்கள் இருவரும் என்னை விட்டுப் பிரிந்து போய் விட்டீர்கள். அந்த அதிர்ச்சியின் விளைவாக நான் இங்கு வேதனைப்பட்டுக் கொண்டு படுத்த படுக்கையாக இருக்கிறேன்! ஒருவனுக்கு நன்மை செய்ய வேண்டுமானாலும் அவனுடைய மனதைப் புரிந்துகொண்டு அதற்கு ஏற்ற படி அந்த நன்மையைச் செய்ய வேண்டும். இல்லையென்றால் அதுவே கெடுதலாக மாறிவிடுவது இயற்கை. இந்த வேடிக்கையைத்தான் நான் இப்போது ரசித்துக் கொண்டு இருக்கிறேன்.

இப்போது எனக்கு ஒரே கவலையாக இருக்கிறது.

சென்னையில் நீ எதுபோன்ற ஒரு சூழ்நிலையில் சிக்கிக் கொண்டு தவிக்கிறாயோ என்று என்னுடைய இதயம் ஏங்குகிறது! அப்பாச்சாமி வேண்டுமானால் உனக்கு அங்கே கிடைக்கும் 'சான்ஸ்'களை பெரிதாக எண்ணிக் கொண்டு பூரித்தபடி இருக்கலாம்! ஆனால் எனக்குத் தெரியும்—அங்கே 'ராஜாக்கள் தான்—அவனைப்போன்ற எத்தர்கள்தான்—அதிகமென்று! எனக்கு நன்மை செய்கிறேன் என்று எண்ணிக்கொண்டு உன்னை இதுபோல அவதிக்கு உள்ளாக்கிக் கொள்ளலாமா?

அநுராதா...நீ உடனே புறப்பட்டு இங்கே வந்துவிடு! நீ சென்னையில் மீண்டும் சதிகாரர்களுக்கும்—மோசக்காரர்களுக்கும் மத்தியில் சிக்கிக்கொண்டு அவதிப்பட வேண்டாம்!

அதோடுகூட நீ எனக்கு இன்னொரு விஷயம் செய்ய வேண்டும்! நீ எப்படியாவது நாராயணனை சந்தித்து அவனிடம், நான் அவனைப் பார்க்க ஏங்குகிறேன் என்று சொல்லு.

நீ அடிக்கடி சொல்லுவாய் என்னை தெய்வமென்று...! ஆனால் என்னால்கூட சில, பல இடங்களில் சாதாரணமான மனிதன் அளவுக்குக்கூட நடந்து கொள்ள இயலாமல் போய் விடும்! அவன்—நாராயணன்—!

அவன் எந்த நிலைமையிலும் மனிதனாக நடந்து கொள்ளத் தவறுவதில்லை! பல இடங்களில் தெய்வமாகக் கூட உயர்ந்து விடுவான்!

அன்று நான் அவனுடைய கன்னத்தில் அடித்தேன்—காவேரி அவனுடைய இதயத்தில் ஈட்டியைப் பாய்ச்சினாள்! ஆனால் அந்த என் அடியும், காவேரியின் ஈட்டிக் குத்தும் அவனை ஒன்றும் செய்யவில்லை! நாங்கள் இருவரும் தான் அந்த வேதனைகளை இப்போது அநுபவித்துக் கொண்டு இருக்கிறோம்! இன்னா செய்தாரை ஒறுக்காது, அவர் நாண, நன்னயம் செய்து அவன் உயர்ந்து விட்டான்!

நான் அவன் சொன்னபடி 'உலக சித்திரப் போட்டிக்கு...' ஒரு சித்திரம் அனுப்ப இருக்கிறேன் என்று அவனிடம் சொல்லு! அவன் நல்ல ரசிகன். அவனுடைய ரசிக உள்ளம் இந்த ஒரு காரணத்துக் காகவாவது என்னை மன்னிக்கும் என்று நம்புகிறேன்.

என் உடல் தென்பு சிதைந்து போய் இருக்கிறது. இல்லையென்றால் நானே சென்னைக்கு நேரில் வந்து விடுவேன்! இந்த மனிதக்கூட்டுக்கு கல கலப்பு அளிப் பதற்கென்றாவது நீங்கள் இருவரும் 'சிட்டுகள்' போல பறந்து வருவீர்கள் என்று நம்புகிறேன்!

உங்களை எதிர்பார்த்து ஏங்கித் துடிக்கும்,

விஜயன்.

காவேரி 'விஜயன்' என்ற பெயரை மட்டும் எழுதவில்லை!

"இது போதும் காவேரி!"—விஜயன் மெல்ல தன் பேச்சை முடித்தான்.

"சரி...நீங்கள் கையெழுத்துப் போடுங்கள்...அப்புறம் நானும் அநுராதாவுக்கு சில செய்திகள் எழுத வேண்டும்"!...காவேரி சலனமற்ற முகத்தோடு அந்தக் கடிதத்தை நீட்டினாள். விஜயன் ஆச்சரியத்தோடு அவளைப் பார்த்தபடி அதில் கையெழுத்துப் போட்டான்!

அவள் அதை வாங்கி அதனடியில் ஏதோ எழுத ஆரம் பித்தாள். விஜயனுக்கு ஒரே வியப்பு! எழுதிக் கொண்டிருக் கும் போதே அவள் கண்களிலிருந்து உதிர்ந்த நீர்த்துளிகள் அந்தக் காகிதத்தில் பட்டுத் தெறித்தன!

"காவேரி..."—விஜயன் பரிவோடு அழைத்தான்! அவள் மௌனமாக தான் எழுதிய பகுதியை அவனிடம் கொடுத் தாள். விஜயன் ஆவலோடு அதைப்படித்தான். அதில்,

'அநுராதா,

உன் கடிதம் கிடைத்தது. நானும் உன்னைப் புரிந்து கொண்டேன். நீ நல்லவள். உனக்கு இந்த வீட்டில் எப்போதும் ஒரு இடம் உண்டு! நீ உடனே புறப்பட்டு இங்கே வா!

நாராயண அண்ணனை இங்கே உடனே ஏப்பாடு பட்டாவது வரும்படி செய்வது இனி உன் கடமை தான்

அவருக்கு பெரிய ஏமாற்றத்தை அளித்து விட்டேன். அவர் எப்போதுமே எனக்கு 'அண்ணனாக'வே நடந்து கொண்டிருக்கிறார். ஆனால் நான்தான் அவருக்கு "தங்கை'யாக நடக்கவில்லை!

நான் அவரிடம் மன்னிப்புக் கேட்கத் துடித்துக் கொண்டிருக்கிறேன். நீ தவறாது அவரை அழைத்துக் கொண்டு உடனே புறப்பட்டு வரவும்.

உன்,
'காவேரி.'

இரத்தின சுருக்கமாக அவள் தன் இதயத்தை அந்தக் கடிதத்தில் திறந்து காட்டியிருந்தாள். அதைக் கண்டதும் விஜயனின் உடல் புல்லரித்தது!

"காவேரி! என் வேண்டுகோளுக்கு இரங்கி, அவர்கள் இருவரும் இங்கே வராவிட்டாலும், உன் அழைப்புக்காவது அவர்கள் வந்துதான் தீருவார்கள்!"—அவன் பெருமூச் செறிந்தான்.

காவேரி அந்தக் கடிதத்தை ஒரு உறைக்குள் போட்டு ஒட்டினான்! அவனுடைய பார்வை எதிரில் மாட்டப்பட் டிருந்த சித்திரத்தில் பதிந்தது.

மல்லிகையும்—தாமரையும் அவனை நோக்கி கண்களைச் சிமிட்டின!

'ஊம்ம்...'—அவன் மெல்ல மூச்சை இழுத்துக்கொண் டான். அவன் நாசியில் மல்லிகை மணம் தட்டுப்படவே இல்லை. ஆனால் அவனுடைய இதயத்தில் 'நாராயணனின் அன்பு' கிளுகிளுப்பை உண்டாக்கியது! அவன் எவ்வளவு தூரத்தில் இருந்தால் என்ன? அவனுடைய அன்பு மனமும், தியாகத் தூய்மையும் வெளிப்படாமலா போய்விடுகிறது?

அந்தத் தாமரை...!—அவன் தலையை உசுப்பிக்கொண் டான்! அதில் தாமரைக் குமரியாக அநுராதா மெல்ல மலர்ந்து கொண்டிருந்தாள்! எட்டிப் பறிக்கும் முயற்சியில் ஈடுபடும்போது வேண்டுமானால் அது தொட்டவர்களை முட் களால் கீறிவிடலாம்—ஆனால் அது, அந்த செயலாலேயே கெட்டதாகிப் போய் விடுவதில்லை!

அவள் மெல்ல பெருமூச்செறிந்துகொண்டாள்.

"அத்தான்...இந்தச் சித்திரத்தையும் இன்றே அனுப்பி விட்டால் என்ன ?"

"ஆமாம்...அனுப்பிவிடு!"—அவன் சுருக்கமாகச் சொல்லி விட்டு சோர்வோடு படுத்துக்கொண்டான்.

காவேரி, அந்தச் சித்திரத்தை சிப்பமிட்டு பத்திரமாக எடுத்துக்கொண்டு வெளியே கிளம்பினாள்.

அவள் மனதிலே ஒரு நிறைவு.

அவளே அன்போடு அழைக்கும்போது, நாராயணனும் அநுராதாவும் வராமலா இருந்து விடுவார்கள்?—அவள் தென்போடு தபாலாபீசை நோக்கி நடந்தாள்!

## 10. மனச்சிமிழ்

நோய்களில் கொடிய நோய் ஏமாற்றம்! ஒருவன் எவ்வளவுதான் உடல் வலிமையும், உள்ள வலிமையும் கொண்டவனாக இருந்தாலும் இந்த ஏமாற்றம் அவனுடைய உள்ளத்தை வேர்ப்புழு போல அரித்துத் தின்று ஆளையே சாய்த்துவிடும்!

விஜயன் மிகவும் நம்பிக்கையோடு அநுராதாவும் நாராயணனும் வருவார்கள் என்று எதிர்பார்த்து இருந்தான். ஆனால் அவர்கள் வரவில்லை—அநுராதாவிடமிருந்து ஒரு கடிதம் மட்டும்தான் வந்தது !

அதில் :

'சார்,

உங்கள் இருவருடைய 'கடிதமு'ம் கிடைத்தது! படித்தேன்; துடித்தேன் ! ஒப்பந்தங்கள் என்ற பெயரால் இங்கே என்னுடைய கையையும் காலையும் கட்டிப் போட்டு விட்டார்கள்!—நான் பெங்களூருக்கும் மைசூருக்கும் வெளிப்புற காட்சிகளில் நடிக்கச் செல்ல வேண்டும். ஒரு மாதம்—முப்பது நாட்கள்—நான் நடிக்க வேண்டும். இல்லையென்றால் இந்தக் 'கழுகுகள்'

என்னைப் பித்துப் பிடுங்கித் தின்று தீர்த்துவிடும்! நான் கூண்டுக் கிளியாக குமுறிக்கொண்டு இருக்கிறேன்! ஆனாலும்—

கொஞ்சம் வழி திறக்கட்டும்—பறந்து வந்து விடுகிறேன். நிற்க.

நாராயணன் அவர்களை விசாரித்தேன். அவர் இப்போது எங்கு இருக்கிறார் என்பதே தெரியவில்லை! ஆனாலும் அவருக்கு மிகவும் வேண்டியவர்களிடம் நீங்கள் எழுதியிருந்த செய்திகளையெல்லாம் சொல்லி, அவரைச் சந்தித்தவுடன் தெரிவிக்கும்படி ஏற்பாடு செய்திருக்கிறேன். அவராவது உங்களைப் பார்க்க விரைவில் வருவார் என்று நம்புகிறேன்.

கடைசியாக—

காவேரியம்மாளுக்கு என் வணக்கம். அவர் ஒரு உயர்ந்த இடத்தை எனக்காக கொடுத்திருக்கிறார். ஆனால், நான் அவருக்காக ஒன்றுமே செய்ய முடியாதவளாகப் போய் விட்டேன்! அவருடைய அண்ணாவை என்னால் அழைத்துக்கொண்டு வர முடியவில்லை! அவரை அன்பு கூர்ந்து என்னை மன்னித்துவிடச் சொல்லுங்கள்!

ஜாக்கிரதையாக உங்களைக் கவனித்துக் கொள்ளுங்கள். எவ்வளவு சீக்கிரத்தில் வந்து விடுகிறேன்.

ஒவ்வொரு விநாடியும் உங்களுக்காகத் துடித்துக் கொண்டிருக்கும்,

'அநுராதா.'

—என்று எழுதியிருந்தது!

ஆனால் இன்னமும் அநுராதாவும் வரவில்லை—நாராயணனும் வரவில்லை! நாட்கள் ஓடிக்கொண்டு இருந்தன. விஜயனின் நம்பிக்கையும் மெல்ல மெல்ல தேய்ந்து கொண்டு வந்தது!

ஏற்கெனவே நோய்வாய்ப்பட்டிருந்த அவன் உடம்பை இந்த நம்பிக்கைச் சிதைவு இன்னமும் சீரழித்தது! விஜயனுக்குப் படுக்கையில் படுத்திருப்பதுகூட ஒரு பாரமாக இருந்தது! வேளைக்கு வேளை உட்கொண்ட மருந்தும்

பகலிலும் இரவிலும் குத்திக் கொண்ட ஊசிகளும் அவனுக்கு உடலில் தென்பை ஊட்டவில்லை!

அநுராதா எப்படி இருக்கிறுளோ? நாராயணன் எங்கே இருக்கிறுனே என்ற கவலைகள் அவனுடைய இதயத்தை முறுக்கிப் பிழிந்தன! அவன், அந்த தவிப்பிலே அணு அணுவாக தன்னுடைய வலிமையை இழந்து கொண்டே இருந்தான்!

காவேரி—

அவளுடைய கண்கள் பல இரவுகள் உறங்கவே இல்லை! பல நாட்கள் அவள் உணவு கொள்ளுவதைக்கூட மறந்து போய் இருந்தாள்! அவள் இரவும் பகலும் விஜயனுக்கு அருகிலேயே இருந்து அவனுக்கு வேண்டியவைகளைக் கவனித்துச்கொண்டு வந்தாள். ஆனுல்—

'விஜயனுக்கு இரத்தத்திலே கொதிப்பு ஏறிவிட்டது!'—என்று வைத்தியர் சொல்லி விட்டார்! அதைக் கேட்டதும் காவேரி அதிர்ச்சியடைந்து போய் விட்டாள்! அவளுக்கு விஜயனைப் பார்க்கப் பார்க்க அழுகை அழுகையாக வந்தது!

"அத்தான்..."—அவள் விவிட்டுக் கதறினுள்.

விஜயன் கண்களை மூடியபடி திணறிக்கொண்டு இருந்தான்! உள்ளே எரிமலைக் குழம்புபோல இரத்தம் கொதித்துக் கும்மாளமிட்டுக் கொண்டு இருப்பது அவனுல் தாளவே முடியவில்லை! சுவாசக் காற்று வெளிவருவது நெருப்புபோல அவனுடைய நாசித் துவாரங்களை தகித்தன!

வைத்தியர் 'ஸ்டதாஸ்கோப்'பால் அவனுடைய இருதய நிலையை மீண்டும் பரிசோதனை செய்தார்! அவருடைய முகத்திலே தெளிவு தென்படவில்லை!

'சிரிஞ்சி'யில் ஏதோ ஒரு மருந்தை அடைத்து, ஊசி மூலமாக அவனுடைய உடலில் செலுத்தினுர். விஜயன் வேதனை தாளாமல் துடித்தான்!

"இன்னும் நான்கு மணி நேரம்: கடந்துவிட்டால் பயமில்லை!"—அவர் தன்னுடைய 'கடையை'க் கட்டிக்கொண்டு கிளம்பிவிட்டார்.

காவேரியின் இதயத்தில் ஒரு சம்மட்டி அடி! அவளுடைய முகத்தில் 'சவக்களை' தட்டிவிட்டது.

'நான்கு மணி நேரம்...நான்கு மணி நேரம்!'—ஆயிர மாயிரம் ஊசிகள் குத்துவது போன்று அவள் துடித்தாள்! அவளுடைய இதயம் உடைந்து கண்ணீராக அவளுடைய கன்னங்களில் வழிந்து ஓடின!

அவள் விஜயனின் முகத்தைப் பார்த்தபடி விசித்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு என்ன செய்வதென்றே புரி யாதக் குழப்பம்!

'டிக்...டிக்...டிக்...'—விநாடிகள் ராஜநடை போட்டுக் கொண்டு நடந்தன!

உலகத்திலுள்ள தெய்வங்களின் கர்ண பேரிகைகள் காவேரியின் இதய அரற்றலின் காரணமாக மெல்ல மெல்ல எழுந்துபோக ஆரம்பித்தன.

தூண்டில் புழுபோல நெளிந்து கொண்டிருந்த விஜய னின் உடல் மெல்ல மெல்ல...அசைவுகள் குறைந்து...ஒரு நிலையடைந்தது! அடுத்தகணம் அவனுடைய சோர்ந்த முகத்தில் ஒரு ஒளி பரவியது!

அதைக் கண்டதும் காவேரியின் முகத்தில் ஒரு மகிழ்ச்சி!

“அத்தான்...”—காவேரி அவனுடைய காதருகில் சொன்னாள்.

“அநுராதா...”—விஜயனின் உதடுகள் மெல்ல முணு முணுத்துக் கொண்டன. காவேரி திடுக்கிட்டாள்! அநுராதா இன்னமும் வரவில்லை என்ற ஏக்கம்—ஏமாற்றம்—அவனுடைய மனதிலிருந்து மறையவில்லை என்பதை அவள் புரிந்துகொண் டாள்!

“அத்தான்...”—அவள் மெல்ல அவனுடைய கன்னத்தை தடவிக்கொடுத்தாள்! பாலைவனத்து மணல் வெளிபோன்று ஒரே கொதிப்பு!

விஜயன் மெல்லக் கண்களை விழித்தான்! போதையேறி இரங்கிச் சிவந்து அனல் துண்டங்கள் போல அவனுடைய விழிகள் பளபளத்தன! காவேரி அதைக் கண்டதும் துணுக் குற்றாள்!

'நான்கு மணி நேரம்—' அவளுடைய இதயத்தில் ஒரு சாட்டையடி விழுந்தது. அவள் மெல்லக் கடிகாரத்தைப்

பார்த்தாள்...இன்னும் இரண்டு மணி நேரம் பாக்கியிருந்தது அவளுடைய உடலை ஒரு அதிர்ச்சி குலுக்கியது!

"காவேரி...என்னுடைய தூரிகையை எடுத்துக்கொண்டு வா!"—அவன் ஏதோ கனவில் பேசுவதைப்போன்று சொன்னான்.

"எதற்கு அத்தான்?"—அவள் ஒன்றும் புரியாமல் கேட்டாள்.

"அநுராதா...இனி வரமாட்டாள் காவேரி!"—அவன் திணறியபடி சொன்னான்! அவனுடைய கண்களிலிருந்து நீர் வழிந்தது.

"இல்லையத்தான்...அவள் வந்து விடுவாள்..."—அவள் மெல்ல அவனுடைய இதயத்தைத் தடவிக் கொடுத்தாள். அவனுடைய உதடுகளிலிருந்து ஒரு உயிரற்ற சிரிப்பு உதிர்ந்தது!

"உனக்குத் தெரியாது, காவேரி! அநுராதா இனி இங்கே வரவே மாட்டாள்!...அவளுக்கு, மீண்டும் இங்கே வந்தால் எனக்குத் துன்பம் உண்டாகிவிடும் என்ற பயம்!"—விஜயன் மெல்ல கனைத்து தன்னுடைய தொண்டையை சரிப்படுத்திக் கொண்டான்.

காவேரிக்கு என்ன பதில் சொல்வது என்றே தெரியவில்லை!

"காவேரி! அன்றொருநாள் அநுராதா தன்னுடைய அழகுத் திருவுருவை, நான் சித்திரம் வரைவதற்கென்று 'காணிக்கை'யாக தந்தாள். ஆனால் அதை நான் இழந்து விட்டேன்...மீண்டும் அவளை நான் அதே கோலத்தில் வரைய வேண்டும்..."—அவன் மேற்கொண்டு பேச முடியாமல் திணறினான்.

"வரைந்து விடலாம், அத்தான்...! அநுராதா சீக்கிரம் வந்து விடுவாள்!"

"இஹ்ஹிஹ்ஹிம்...அவளாவது வருவதாவது...!? இனி அவளுக்காக எதிர்பார்த்துப் பயனில்லை!...என் நெஞ்சில் இருக்கும் அவளை வைத்துக்கொண்டு இனி நானே வரைந்தால்தான் உண்டு...காவேரி! திரைச்சீலையையும் தூரிகையையும் எடுத்துக் கொண்டு வா..."—அவனுடைய உத்திர

விலே ஒரு கண்டிப்பு தொனித்தது! காவேரி மனதுக்குள் தடுமாறினாலும் அவனை மீறி எதுவும் சொல்வதற்குப் பயந்தாள். அவளுடைய கண்கள் நீரைக் கக்கின!

அவள் தூரிகையையும், திரைச்சீலையையும் எடுத்துக் கொண்டு வந்தாள்! விஜயன் மெல்ல எழுந்து அமர்வதற்கு முயன்றான்! ஆனால் அவனால் அது முடியவில்லை! ஆனால்...

அவனுடைய கை மட்டும் காவேரியிடமிருந்த தூரிகையை வாங்குவதற்கு நீண்டது! அவள் அவனிடம் அந்த தூரிகையைக் கொடுத்தாள். ஆனால்—அவனால் அந்த தூரிகையை பற்றிப் பிடிக்கக்கூட முடியவில்லை! விரல்கள் தள்ளாடின. தூரிகை நழுவியது!

"அத்தான்..."—காவேரி விம்மினாள். அவள் அந்தக் காட்சியை கண்டு திடுக்கிட்டு நடுங்கினாள்.

விஜயன் மெல்லச் சிரித்துக் கொண்டான்.

"சித்திரம் இருந்தால்தானா, அநுராதா அளித்த காணிக்கை இருக்கும்! சித்திரம் இல்லாவிட்டால், அந்தக் காணிக்கை என் இதயத்தை விட்டா பறந்து போய் விடும்?" —அவன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்.

"காவேரி...! என் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொள்! இனி எனக்கு யாருமே இல்லை...! நீ ஒருத்தித்தான் என்னோடேயே நிழல் போல தொடர்ந்து கொண்டு இருக்கிறாய்! ஹூம்..."—ஒரு உஷ்ணப் பெருமூச்சு பேச்சைத் தொடர்ந்து வந்தது.

"அத்தான்..."—அவள் தேம்பினாள்.

"நாராயணனும் என்மேல் கோபமாகப் போய் விட்டான். அவனும் வரப் போவதில்லை! நான் அவனை அடித்தது பெரிய முட்டாள்தனம் காவேரி!"—விஜயன் உயரப் பார்த்தபடியே புலம்பினான்!

"நீங்கள் வீணாகக் கவலைப்படாதீர்கள் அத்தான்! நாராயண அண்ணா கண்டிப்பாக வந்து விடுவார்..."—அவள் சொல்லி முடிக்கவில்லை.

"விஜயா..."— நாராயணனின் குரல் திடீரென்று கேட்டது! அவன் அவசரம் அவசரமாக உள்ளே நுழைந்தான்.

"அண்ணு..."—காவேரியின் கண்களில் ஒளி பிறந்தது! விஜயன் படுத்த படுக்கையாக இருப்பதைக் கண்டு அவள் திடுக்கிட்டு நின்ருள்!

"வா...நாராயணு...வா! உன்னை எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தேன்!"—விஜயனின் முகம் மலர்ந்தது!

"என்ன செய்கிறது விஜயா? ஏன் இப்படி..."—நாராயணனின் குரல் தழ தழத்தது! அவன் விஜயன் அருகில் சென்று அமர்ந்தான்!

"காவேரி...உன் அண்ணு வந்து விட்டான். இனி எனக்குக் கொஞ்சம்கூட கவலையில்லை!"—விஜயனின் முகம் விகாரமாகச் சுருங்கியது!

"அத்தான்..."—காவேரி திடுக்கிட்டு அலறிஞள். விஜயன் மெல்ல தன்னைச் சமாளித்துக் கொண்டான்.

"விஜயா...உனக்கு உலக சித்திரப் போட்டியில் முதல் பரிசு கிடைத்து இருக்கிறது! இதோ பார் உன்னுடைய 'ஒளியில் குளிக்கும் மலர் அழகிகள்!?'.—அவன் தன்னுடைய பையிலிருந்து ஒரு படத்தை எடுத்துக் காட்டிஞன்!

"அதை நான் உனக்காகத்தான் எழுதினேன்...நீயே அதை வைத்துக் கொள்!"—விஜயன் தன் கையால் நெஞ்சை அழுத்திக் கொண்டான். தொண்டைக் குழியை உடைத்துக் கொண்டு ஒரு இருமல் கிளம்பியது! அவனது விழிகள் 'கரகர' வென்று சுழன்றன! அவனுடைய தலை மெல்ல ஆடியது!

"அத்தான்..."

"விஜயா..."

இரண்டு குரல்களும் இணைந்து ஒலித்தன!

'அநுராதா..."—ஒரு முணு முணுப்பு!

நாராயணனும் காவேரியும் வாசற்புறம் பார்த்தனர். அங்கே ஒருவரும் இல்லை! கதவு திறந்தபடி கிடந்தது!

விஜயா விஜயா நாராயணனின் குரல் தழதழத்தது. அவனுடைய கண்களிலிருந்து நீர்கொட்டியது! காவேரி சோகச்சிலையாக விஜயனையே பார்த்துக் கொண்டிருந்தாள்!

"விஜயனின், இமைகள்" படபடவென்று அடித்துக் கொண்டன! புயல் சீறல் போல் மேல்மூச்சு சீறிக் கொண்டு வெளி வந்தது! தலை மெல்ல உருண்டது!

"வா...அநுராதா...வா!"—விஜயனின் முணுமுணுப்பு 'டக்' கென்று நின்றது!

"அண்ணா..."

"காவேரி..."

நாராயணன், காவேரி ஆகிய இருவரின் முகங்களும் தொங்கி விட்டன! தேம்பும் ஒலிகள் சூழ்ந்தன! அப்போது...

'சொத்...'—ஏதோ, கீழே விழுந்த ஒலி! நாராயணன் திரும்பிப் பார்த்தான். வாசலில் 'அநுராதா' பிரமை பிடித்தவள் போல நின்று கொண்டிருந்தாள். அவளுடைய காலடி அருகில் ஒரு 'வானிடி பாக்' வாய் பிளந்து கிடந்தது! அதனுள்ளிருந்து 'ரூபாய் நோட்டுகள்' பல்லை இளித்துக் கொண்டு சிரித்தன!

"அநுராதா...நீ யா?"—நாராயணன் எரிமலைபோல பொங்கிக்கொண்டு கிளம்பினான்! காவேரி தலையை உயர்த்திப் பார்த்தாள். வாசல் அருகில் நின்று கொண்டிருந்தது அநுராதாவேதான்! அவள் வந்துவிட்டாள்!

"வா...அநுராதா...வா..."—காவேரி முகத்தை மூடிக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள்! நாராயணனுக்கு 'பொறி' கலங்குவது போல இருந்தது! அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை!

அவன் அநுராதாவைப் பார்த்தான். விஜயனைத் திரும்பிப் பார்த்தான். விஜயன், அநுராதாவை வைத்த விழி வாங்காது பார்த்தபடியே இருந்தான்!

அநுராதா மேகத்தவிசிலிருந்து இறங்கி வரும் நட்சத்திரக் கன்னி போல காற்றின் உசுப்பலிலே நகர்ந்து நகர்ந்து விஜயனின் காலருகில் வந்தாள்.

"விஜய்..."—அநுராதா கரங்களால் முகத்தைப் பிசைந்து கொண்டாள். கசங்கிய அந்தக் கொடி துவண்டு விஜயனின் காலடியில் விழுந்தது! அவளுடைய முகமலர் விஜயனின் பாதமலர்களில் ஒன்றியது!

அதைக் கண்டு நாராயணன் திடுக்கிட்டு திகைத்துப் போய் நின்றான். அவனுடைய மனம் மெல்ல நைந்து உருகியது! அவன் கண்களை இறுக மூடியபடி செருமினான்!

அவனால் அந்தக் காட்சியை காண்பதற்கே முடியவில்லை. அவன் உடல் நடுங்கியது.

அவன் கண் திறந்து பார்த்தபோது—

அநுராதா திரும்பி போய்க் கொண்டிருந்தாள்!

"அநுராதா...கொஞ்சம் இரு அநுராதா!"—அவன் கண்களில் நீர் வளையமிட்டது! அவள், அவனை சோர்வோடு பார்த்தாள்!

"தெய்வம் இல்லாத இடத்தில் வழிபடுவதற்கென்று வருபவர்கள் கிடையாது!"—அநுராதாவின் கண்கள் குளமாயின. அவள் இதயத்தை அழுத்திக்கொண்டு வேகமாக வெளியேறி விட்டாள்!

நாராயணனுக்கு ஒரு பெரிய அதிர்ச்சி! அவனுடைய பார்வை கையிலிருந்த சித்திரத்தில் பாய்ந்தது!

பாசிபடிந்த குளத்திலே பூத்து மலரும் அந்தத்தாமரை—

நாராயணனின் நெஞ்சிலே ஒரு உலுக்கல்!

அது—

வழிபடுவதற்கென்றே பிறந்தது—வழிபடுவதிலேயே தன்னை முடித்துக் கொள்வது! சேறும் சகதியும் அதனுடைய வேலையை தடுத்து நிறுத்தி மாற்றி விடுவது கிடையாது!

'ஹ்ம்ம்...'—அவனுடைய உள்ளத்தை உடைத்துக் கொண்டு ஒரு பெருமூச்சு வெளிவந்தது. அவன் மெல்லத் திரும்பி காவேரியைப் பார்த்தான்.

அவள் விசித்து விசித்து அழுது கொண்டிருந்தாள்.

நாராயணனின் கண்களிலிருந்து உதிர்ந்த நீர்த்துளிகள், அந்தச் சித்திரத்தில் இருந்த மல்லிகை மலரைச் சுற்றி முத்து சரம் போல வளையமிட்டது.

காவேரி—!

அவள் அந்த மல்லிகையைப் போன்றே—விஜயன் அவளைச் சூடிக்கொண்ட போதும் சிறந்து விளங்கினாள். அவள் விஜயனை வழிபட்டபோதும் அதே சிறப்போடு மணம் வீசி ஒளிகாட்டுகிறாள் ஆனால்—

விஜயனோ?—

நாராயணனின் பார்வை நடுங்கியது.

விஜயன் உயரக் கிளம்பும் கதிர்ச்சுடர் போல பிரகாசித்-துக் கொண்டே போகிறான்...—

"விஜயா"—நாராயணன் உரக்கக் கத்தினான். அவனுக்கு சுயபிரக்ஞை நழுவிக்கொண்டே போனது.

"அண்ணா..."—அவன் குரலோடு இணைந்து காவேரியின் குரலும் மேலிட்டது.

ஆனால்—அந்த இருமனங்களும் நெருங்க முடியாத தூரத்திற்கு விஜயன் பறந்தே போய்விட்டான்!

இனி, அந்த இருமனங்கள் ஒன்றையொன்று தேற்றிக்-கொண்டு வாழ்வதைத் தவிர வேறு வழியே இல்லை!

முற்றும்